# பில்ராத்

# மருத்துவமனை

## வயிறு சம்பந்தப்பட்ட அனைத்து நோய்களுக்கும்

## ஓர் முழுமையான

## தீர்வு.

முதன்முதலில்
அல்ட்ராசானிக் முறையுடன்
லேப்ராஸ் கோப்பி
சிகிச்சை

**சிறப்பு சிகிச்சைகள்:**

- அல்சர்
- அபண்டிஸைடிஸ்
- கர்ப்பப்பை நோய்
- பித்தப்பை கற்கள் (Gall Bladder Stones)
- குடல் இறக்கம் (Hernia)
- ஓவரியில் கட்டி எடுத்தல் (Ovarian Cyst Removal)
- குடும்பக் கட்டுப்பாடு சிகிச்சை




**சிறப்பு நிபுணர்:**

**டாக்டர் வெ. ஜெகநாதன்**

M.S., M.A.M.S., FRSH (LON) MACG (USA)
FAGE, FAMS-Gastro.*(Vienna), FICS-Gastro

வயிறு மற்றும் குடல் சம்பந்தமான
நோய் சிகிச்சை நிபுணர்

அறுவை இல்லா
மூல வியாதி
சிகிச்சை

**சிறப்பு அம்சங்கள்**

- ரத்த இழப்பு இல்லை
- தழும்பு ஏற்படாது
- உடனே பழைய நிலைக்குத் திரும்பலாம்



## BILLROTH HOSPITAL

2 4 H O U R S S E R V I C E

43, லட்சுமி திரையரங்க சாலை, செனாய் நகர்,
சென்னை-600030. போன் : 6440020 / 6441777.

ADVT

# என் எதிரிகளுக்குப் பொது மன்னிப்பு வழங்கிவிட்டேன்!

'தாதா' என்றும் எடுத்ததற்கெல்லாம் அடிதடியில் இறங்குபவர் என்றும் கொலை வழக்குகளில் சம்பந்தப்பட்டவரென்றும் சென்னைவாசிகளால் அறியப்பட்ட ஒரு பெயர்தான் வீரமணி. போலீஸின் 'போக்கிரி' லிஸ்டிலும் இருப்பவர். மறுபுறம் தமிழ்நாடு மீனவர் இயக்கத்தின் தலைவராகவும் அண்மையில் பொறுப்பேற்றிருப்பவர்.

ஒரு காலை நேரத்தில் அவரை மெரீனா கடற்கரைக்கு அழைத்துச் சென்று பேசினோம். அவரைப் பற்றிய பல்வேறு சந்தேகங்களையும் அவரிடமே கேட்டோம்...

"நீங்கள் இப்போது, தமிழகம் முழுவதுமுள்ள அறுபத்து நான்கு மீனவ கிராமங்களின் கூட்டமைப்புத் தலைவராக இருக்கிறீர்கள். ஆனால் உங்களைப் பற்றி மக்களிடையே உள்ள அபிப்பிராயம் என்ன? நீங்கள் அடிதடியில் ஈடுபடுகிற ஒரு ரவுடி என்றுதான் சொல்லுகிறார்கள். கள்ளச்



கல்கி இண்டர்நெட் முகவரி :
www.kalkiweekly.com
ஈ மெயில் :
kalkiweekly@vsnl.com



**சாராய வியாபாரம் செய்வதாகவும் சொல்கிறார்கள். இதற்கு நீங்கள் என்ன சொல்லுகிறீர்கள்?''**

''என்மீது ஏராளமான வழக்குகள் போடப்பட்டதெல்லாம் உண்மைதான். ஆனால் அவை எல்லாமே பொய் வழக்குகள். அதனால்தான் அவற்றை நிரூபிக்க முடியவில்லை. உண்மையில் நான் ஒரு நிரபராதி!''

**''இப்போதும் நீங்கள் ஜாமீனில்தானே இருக்கிறீர்கள்?''**

''இல்லை. இப்போது எந்த வழக்குமே என் மீது இல்லை. எல்லாவற்றிலுமிருந்தும் விடுதலை பெற்றிருக்கிறேன்.''

**''அப்படியானால், மெரீனா காவல் நிலையத்தில் உங்கள் படத்தை போக்கிரி லிஸ்டில் ஒட்டி வைத்திருப்பதற்கு என்ன காரணம்?''**

''அவர்கள் என் படத்தை ஒட்டி ஏதாவது எழுதி வைத்திருந்தால் அதற்கு நான் என்ன செய்ய முடியும்? நான் உண்மையில் கேடியாக இருந்திருந்தால், குற்றங்கள் நிரூபிக்கப்பட்டிருக்க வேண்டாமா? இல்லையே!''

**''ஒருவேளை, குற்றங்கள் நிரூபிக்கப்படாமல் போகிற அளவுக்கு நீங்கள் ஜாக்கிரதையாக குற்றங்களைச் செய்கிறீர்களோ, என்னவோ!''**

''அதெப்படி முடியும்? நான் உங்களை அடிக்கிறேன் என்றால், நீங்கள் என்ன சொல்வீர்கள்? வீரமணி அடித்ததாகத்தானே சொல்வீர்கள்!''

**''சரி. பல குற்றங்கள் – அவை குற்றங்களாக இருந்தாலும் சந்தர்ப்ப சாட்சியங்கள் இல்லாவிட்டால் நிரூபிக்க முடியாமலே போய்விடும் என்பது உண்மைதான். ஆனால், குற்றம் புரிந்தவரின் மனச்சாட்சிக்கு அது தெரியும். இல்லையா?''**

''உதாரணத்துக்கு ஒன்று சொல்லுகிறேன். நிபந்தனை ஜாமீனில் நான் கன்னியாகுமரியில் இருக்கிறேன். அப்போது சென்னையில் ஒரு கொலை நடக்கிறது. அந்தக் கொலையில் நான் சம்பந்தப்பட்டிருப்பதாகச் சொல்கிறார்கள். இது எப்படி சாத்தியம்? பொய் இல்லையா இது?''

**''இப்படி பொய் வழக்குப் போடுவதற்குத்தான் என்ன காரணம்?''**

''என்னை போலீஸ் பழிவாங்க நினைப்பதுதான், வேறென்ன?''

**''உங்களைப் போய் போலீஸ் பழிவாங்க நினைப்பானேன்?''**

''எங்கள் மீனவர் சமுதாயத்தில் ஏதாவது பிரச்னை என்றால் அதை எங்களுக்குள்ளேயே பேசித் தீர்த்துக் கொண்டு விடுகிறோம். அதற்கு நான் காரணமாக இருக்கிறேன். பிரச்னைகள் போலீஸ் ஸ்டேஷனுக்குப் போகாததால், அவர்களுக்கு வருமானம் போய்விடுகிறதே! இந்தக் கசப்புணர்வால் தான் என் மீது பொய் வழக்குப் போட்டுப் பழிவாங்க நினைக்கிறார்கள்.''

**''பஞ்சாயத்துச் செய்வதில் பிரச்னையில்லை. ஆனால் அடிதடியை உபயோகித்து கட்டப் பஞ்சாயத்துச் செய்வதில் தானே பிரச்னை?''**

''சிட்டியில் ஒருவரைப் போட்டு இன்னொருவன் அடித்தால், பக்கத்திலிருப்பவர்கள் ஏன் எதற்கு என்று கேட்கவே மாட்டார்கள். கிராமங்களில் அப்படியிருக்க மாட்டார்கள். அதைப் போல்தான் நானும். பிரச்னை வரும்போது தவறு செய்பவர்களைத் தட்டிக் கேட்கிறேன். இது எப்படித் தவறாகும்? அல்லது கட்டப் பஞ்சாயத்து ஆகும்? நான் மட்டுமல்ல; மீனவர் சமுதாயத்தைச் சேர்ந்த அனைவருமே என்னைப் போல் தவறுகளைத் தட்டிக் கேட்பவர்கள்தான்.''

**''பிரச்னைகள் என்று வரும்போது – தவறுகள் நடக்கிற போது, அதற்கான பரிகாரங்களைச் சட்டம்தான் செய்ய வேண்டுமே தவிர, நீங்களும் நானும் அதைக் கையில் எடுத்துக் கொள்வது எப்படிச் சரியாகும்?''**

''சாதாரணமான பிரச்னைகள், தவறுகள்

குறித்துத்தான் எங்களுடைய சமுதாயப் பஞ்சாயத்தில் தீர்த்துக் கொள்ளப்படு கின்றனவே தவிர, கற்பழிப்பு, கொலை போன்ற பெரிய குற்றங்கள் நடக்கிறபோது, அவற்றை நாங்கள் சட்டத்தின் கைகளில்தான் ஒப்படைக்கிறோம். அவற்றுக் கெல்லாம் நாங்கள் தீர்வு காண்பதில்லை. சாதாரணக் குற்றங்களுக்கான தீர்ப்பையும் நான் நீதி தவறாமல் வழங்கினால்தான் எனது சமுதாய மக்கள் ஏற்றுக் கொள் வார்கள் - என்னைத் தலைவராக வைத் திருப்பார்கள். இல்லையானால், என்னை யும் தூக்கியெறிந்து விடுவார்கள்."

**"உங்கள் படிப்பு, உங்கள் குடும்பம் பற்றிச் சொல்லுங்களேன்!"**

"ஐஸ்ஹவுஸ் கார்ப்பரேஷன் பள்ளிக் கூடத்தில் ஐந்தாம் வகுப்பு வரைதான் படித் தேன். அதற்கு மேல் எனக்குப் படிப்பு ஏறவில்லை என்பதால், அப்பாவோடு கடலுக்குப் (மீன் பிடிக்க) போக ஆரம்பித்து விட்டேன். என் தாத்தா காலத்தில் சாப் பாட்டுக்குப் பஞ்சமில்லாத வாழ்க்கை மட் டும்தான். என் அப்பா காலத்தில் கொஞ்சம் முன்னேறினோம். இப்போது நான் கட்டுமரங்களோடு மூன்று விசைப்படகுகள் வைத்தும் மீன் பிடிக்கிற அளவுக்கு முன்னேறியிருக்கிறேன். அவ்வளவுதான்."

**"இப்படிப்பட்ட நீங்கள் எப்படி மீனவர் இனப் பஞ்சாயத்துத் தலைவராக ஆனீர்கள்?"**

"மீனவர் சமுதாயத்தைப் பொறுத்தவரை ஒருவரை மாற்றி ஒருவர் தலைவராக நியமிக் கப்படுவார்கள். அப்படி நியமிக்கப்படுபவர் களின் செயல்பாடுகள் திருப்திகரமாக இருந்தால் சம்பந்தப்பட்டவரே சில ஆண்டு களுக்குத் தொடர்ந்து தலைவராக இருப் பார். அப்படி மக்களின் திருப்தியைப் பெற் றிருப்பதால்தான் கடந்த பத்தாண்டுகளாக நான் தலைவராக இருந்து கொண்டிருக் கிறேன்."

**"நீங்கள் அ.தி.மு.க.வில் இருந்தீர் களோ?"**

"இல்லை. எம்ஜி.ஆரை எனக்கு ரொம் பவும் பிடிக்கும் என்பதால், அவர் நல்ல காரியங்களைச் செய்கிறபோதெல்லாம் அதை வரவேற்று போஸ்டர்கள் அடித்து ஒட்டியிருக்கிறேன். மற்றபடி அ.தி.மு.க.வில் மட்டுமல்ல; எந்தக் கட்சியிலுமே நான் உறுப்பினராக இருந்ததில்லை. அரசியலில் எனக்கு ஆர்வமும் இல்லை. எங்கள் சமூகத் துக்கு எந்தக் கட்சி நல்லது செய்தாலும் அதை நான் வரவேற்பேன். பாராட்டுவேன்."

**"மீனவர் சமூகநலனுக்காக மட்டுமே நீங்கள் பாடுபட்டுக் கொண்டிருப்பதாகச் சொல்லுகிறீர்கள். ஆனால் சில மாதங் களுக்கு முன்பு, துரித ரயில்வே பாலத் துக்கு அடியில் கள்ளச் சாராயப் பாக் கெட்டுகளைப் பிடித்தார்கள். உங்கள் குடும்பம்தான் அந்தத் தொழிலில் ஈடுபட்டிருப்பதாகச் சொல்லப்பட்டதே?"**

"அப்போது நான் கன்னியாகுமரி மாவட் டத்தில் 'கமலி' என்கிற பட ஷூட்டிங்கில் இருந்தேன்!"

**"உங்கள் மாமியார்தான் அதில்..."**

"என் மாமியார் அல்ல. என் தம்பியின் மாமியார்."

**"அவர் அதில் ஈடுபட்டிருக்கிறாரா?"**

**"வெளியிலிருப்பவர்கள் மீனவர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு ஏமாற்றினால், சம்பந்தப்பட்ட மீனவர்கள் என்னிடம் வந்து புகார் செய்கிறபோது, நான் போய் கேட்கத்தானே வேண்டியிருக்கிறது. நியாயத்தைக் கேட்டால் அது ரவுடித்தனமா?"**

"எனக்கு எப்படித் தெரியும்? உண்மை யைச் சொன்னால், எங்கள் அயோத்தியா குப்பத்துக்குள் கள்ளச் சாராயம் விற்பது போன்ற செயல்கள் நடக்கவே முடியாது. எங்கள் சமூகக் கட்டுப்பாடு அப்படி!"

**"ஆனாலும் மீனவர்கள் குடிப்பார்கள். இல்லையா?"**

"அரசாங்கமே கடைகளைத் திறந்து வைத்திருக்கிறபோது எப்படி குடிக்காமல் இருப்பார்கள்? எங்கள் மீன் பிடி வேலை அப்படி. கடலுக்குப் போய் வந்த களைப்புத் தீர குடிக்கத்தான் செய்வார்கள். ஆனால், நான் தலைவராக வந்த பிறகு, கள்ளச் சாரா யம் விற்கப்படுவதைத் தடுத்து நிறுத்தினேன் என்பதுதான் உண்மை."

**"நீங்கள் குடிப்பீர்களா?"**

"குடிப்பேன். இதை நான் உங்களிடம்

**(தொடர்ச்சி 24ஆம் பக்கம்...)**

சமீபத்தில் சென்னை வந்திருந்தார் மிஜோராம் மாநில கவர்னர் ஏ. பத்மனாபன். சந்தித்தோம். தமது அனுபவங்களைப் பகிர்ந்து கொண்டார்....



• தலை வெட்டியதை நினைவு கூரும் திருவிழா!



• மிஜோ பெண்

● நமது நாட்டின் வடகிழக்குப் பகுதியிலுள்ள மாநிலங்களான அஸ்ஸாம், மேகாலயா, மணிப்பூர், திரிபுரா, அருணாச்சல் பிரதேசம், மிஜோராம் மற்றும் நாகலாந்து ஆகியவற்றை ஏழு சகோதரிகள் என்றழைக்கிறார்கள். இவைகளில் மிஜோராம் மாநிலம், ஒரு புறம் பர்மாவையும் மறுபுறம் பங்களா தேசையும் எல்லைகளாகக் கொண்டு இருக்கிறது. 'மிஜோ' என்றால் 'மண்ணின் மைந்தன்' என்று பொருள். மிஜோராம் மாநிலத்தில் மிஜோக்கள் தவிர புத்த மதத்தினர், லாய்ஸ் சக்மாஸ் எனப்படும் ஆதிவாசிகளும் உண்டு. கல்வியறிவு இல்லாத காலத்தில் இவர்கள் ஒருவருக்கொருவர் தாக்குதலில் ஈடுபட்டுக் கொண்டு தங்கள் வலிமையை நிலைநாட்டிக் கொண்டார்கள். எதிர்க் குழுநபரின் தலையை வெட்டிக் கொண்டு வருபவன் போற்றப்பட்டான். இதனால் நூற்றுக் கணக்கானவர்களின் தலைகள் வெட்டப்பட்டன.

● இந்தப் பகுதி மக்களைத் திருத்தி, அவர்களை ஓர் ஒழுங்கான, நாகரிகமான வாழ்க்கை முறைக்குத் திருப்பியவர்கள், 1894ல் இந்தப் பகுதிக்கு இங்கிலாந்திலிருந்து வந்த பாதிரியார்களான சவிட்ஜ், லொரைன் என்போர். அவர்களைத் தொடர்ந்து வந்த பாதிரியார்கள் மூலம், மிஜோராம் முழுவதும் கிறிஸ்துவ மடாலயங்கள் பெருகின. பழங்குடி மக்கள் கிறிஸ்துவ சமயத்தைப் பின்பற்றத் துவங்கினார்கள். மடாலயங்களைத் தொடர்ந்து கல்வியறிவு கொடுக்க பள்ளிகள் துவக்கப்பட்டன. பேச்சு வழக்கில் இருந்த

# பட்டாசுக்குத் தடைவிதித்த மாநிலம்!



மிஜோ மொழிக்கு எழுத்து வடிவம் கொடுக்கப்பட்டது.

● நமது அரசியல் சட்டம் ஆறாவது அட்டவணையில் வடகிழக்குப் பகுதியின் கலாச்சார அடிப்படையையும் தனித்துவத்தைக் காப்பாற்றவும் பல ஷரத்துக்கள் உள்ளன. நீங்களோ, நானோ மிஜோராம் மாநிலத்தில் நிலம் வாங்க முடியாது; பிஸினஸ் பண்ண முடியாது. கேரளாவுக்கு அடுத்தபடியாக அதிகக் கல்வியறிவு பெற்ற மாநிலம் மிஜோராம்தான். தலைநகரான ஆஸ்வால் நகரில் ஒரு பழைய சிவாலயம் உள்ளது. சமீபத்தில் காஞ்சி ஜெயேந்திர சரஸ்வதி சுவாமிகள் பிள்ளையார் சிலையை இங்கு பிரதிஷ்டை செய்தார். இந்த சிவாலயத்தில் நேபாள குருக்கள்தான்!

● "எங்க உன்னை ஆளைக் காணோம்." "இந்தியாவுக்குப் போயிருந்தேன்" – இது போன்ற பேச்சுக்களை சில வருடங்கள் முன்பு வரை மிஜோராமில் கேட்க முடிந்தது. ஆனால் இப்போது இந்தியா, இந்தியன் என்ற உணர்வு மேலோங்கி வருகிறது. நான் பொறுப்பேற்றுக் கொண்ட பிறகு, மிகவும் பின் தங்கிய கிராமங்களுக்கெல்லாம் விசிட் செய்தேன். பலர் கவர்னரை முதல் முறை பார்ப்பதாகச் சொன்னார்கள். 60, 70 மூத்த குடிமக்களை ராஜ்பவனுக்கு அழைத்து சுற்றிக் காட்டினேன். அவர்களுக்கு ஏக மகிழ்ச்சி. 'ரொம்ப சாதாரணமாக இருக்கிறீர்கள். தலையில் கிரீடம், இடுப்பில் வாள், துப்பாக்கி எதுவுமே இல்லையே!' என்று என்னைச் சுற்றி வந்து ஆச்சர்யப்பட்டார்கள். ஆஸ்வாலில் பத்துப் பதினைந்து தமிழ்க் குடும்பங்களும் இருக்கின்றன.

● மிஜோராம் மக்கள் வாழ்க்கை சர்ச்சுகளுக்குக் கட்டுப்பட்டது. ஆனால் பாதிரியார்கள் அந்த மக்களின் தொன்று தொட்டு வரும் பழக்க வழக்கங்களில் தலையிடுவதில்லை. கிராமப் பஞ்சாயத்து இருந்தாலும் ஊர்த் தலைவர் மிகவும் முக்கியமானவர். அவர் சொல்வதுதான் வேத வாக்கு. ஒரு பெண் ஓர் ஆணைக் காதலித்தாலும் சரி, ஆண் பெண்ணைக் காதலித்தாலும் சரி, இருவரும் ஆங்காங்கே டூயட் பாடிக் கொண்டிருக்கக் கூடாது. உடனே பெற்றோரிடம் சொல்லி உடனடியாகக் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும். பிடிக்கவில்லை என்றால் சுலபமாக விவாகரத்து செய்து கொள்ளலாம். ஒரு கிராமத்தில் தொற்று நோய் வந்துவிட்டால் பன்றியைக் கொன்று தோலை உரித்து ஊர் முகப்பில் – கம்பத்தில் மாட்டி வைத்து விடுவார்கள். நோய் போய் விடும் என்ற நம்பிக்கை.

● நாம் பொங்கல் கொண்டாடுவது



• ஆளுனர் பத்மநாபன்

போன்று அவர்களும் அறுவடை சமயத்தில் திருவிழா கொண்டாடுகிறார்கள். ஊருக்கு வெளியே உள்ள 'கல்' ஒன்றுக்கு அரிசிச் சோறு படைக்கிறார்கள். கிராமங்களில் திருட்டு, அடிதடி கிடையாது. கலர், கலரான உடைகளில் அசத்துகிறார்கள். பலவிதமான பூக்களை தலையில் அழகாகக் குச்சிகளில் வைத்து செருகிக் கொள்கிறார்கள். பாட்டு, நடனம் என்று பலவற்றில் மேற்கத்திய பாதிப்பு இருந்தாலும், மிஜோராம் மாநிலத்தில் பூரண மதுவிலக்கு அமுலில் இருக்கிறது. திருவிழா, பண்டிகை போன்ற சமயங்களில் மட்டும், அரிசியிலிருந்து தயாரிக்கப்பட்ட போதை தரும் பானத்தை அருந்துகிறார்கள். அவ்வளவுதான்!

● மிஜோராமில் எந்தக் கொண்டாட்டங்களின் போதும் பட்டாசுகள் வெடிக்கப்படக் கூடாது. காரணம் சுற்றுச் சூழல் கெட்டுப் போகக் கூடாது என்பதற்காகத்தான். ஞாயிற்றுக் கிழமை என்றால் அவர்களுக்கு ஹாலிடே அல்ல; ஹோலிடே. அதாவது புனிதமான நாள். அன்று முழுவதும் பிரார்த்தனைகளில் நேரம் போய் விடுகிறது. எந்த அலுவலகமும் அன்று இயங்காது – விமான நிலையம் உள்பட! அன்று எந்த விமானமும் ஆஸ்வாலுக்கு வராது!

● மக்கள் உணவில் அரிசியும், பன்றிக் கறியும் முக்கியமானவை. முகம் சுளிக்க வேண்டாம். பன்றி என்றால் ஆங்கில தேசத்து வெள்ளைப் பன்றிகள். கோழி, ஆடு, மாடுகள் போல் பன்றிகளை எல்லா வீடுகளிலும் வளர்க்கிறார்கள்.

● மிஜோ மக்கள் வெளி மாநிலங்களுக்கும் சென்று படித்து வருகிறார்கள். ராஜ்பவன் மருத்துவர் லால்சாலா சென்னை மருத்துவக் கல்லூரியில் படித்தவர்தான். அறுபது, எழுபது வருடங்களுக்கு முன்பு வரை கூட கற்கால வாழ்க்கை முறையுடன் பயங்கரவாதிகளாக இருந்த மிஜோக்கள் இன்று அற்புதமான, நாகரிக வாழ்கை முறைக்கு மாறியிருக்கிறார்கள். சமீபத்தில்தான் அங்கு சட்டசபைத் தேர்தல் நடந்து முடிந்தது. மிஜோ மக்களின் புரட்சித் தலைவரான லால்டெங்காவின் சிஷ்யர் ஜொரம் தாங்காதான் இப்போதைய முதல்வர். இவரது கட்சி மிஜோ தேசிய முன்னணி. தீவிரவாத இயக்கமாக இருந்த மிஜோ தேசிய முன்னணியை ஜனநாயகப் பாதைக்கு திருப்பி ராஜீவ் காந்தியுடன் அமைதி ஒப்பந்தம் போட்டவர்தான் லால் டெங்கா.

● உள்ளூர் பா.ஜ.க.வுக்கு கூட கிறிஸ்துவர்தான் தலைவர். தேர்தலின்போது இஷ்டத்துக்கு கட்சிகள் கூட்டம் போட்டுப் பேச முடியாது. மிஜோ இளைஞர் அணி என்று ஓர் அமைப்பு இருக்கிறது. அவர்கள் ஏற்பாடு செய்யும் கூட்டங்களில்தான் உங்கள் கருத்துக்களைச் சொல்ல வேண்டும். தேர்தலுக்குப் பத்து நாட்கள் முன்பிருந்தே சர்ச்சுகளில் மைக் வைத்து 'பணம் வாங்கிக் கொண்டு வோட்டு போடாதீர்கள், வன்முறையில் இறங்காதீர்கள், மற்றவரைத் தாக்கிப் பேசாதீர்கள்' போன்ற உபதேசங்களை ஒலிபரப்பிக் கொண்டே இருப்பார்கள். இந்தத் தேர்தலில் 78 சத வாக்குப் பதிவு. இந்தியாவில் இதுதான் அதிக பட்ச வாக்குப் பதிவு!

● எனக்கு இலக்கிய ஆர்வமும் இருப்பதால் மிஜோ நாட்டுப்புற கதைகளைத் தொகுத்து வருகிறேன். இதுவரை மிஜோராமைப் பற்றிக் கேட்டதற்கு 'காலாமே!' (நன்றி!)

தொகுப்பு : **ப்ரியன்**



# இலவசம்!

# பக்தி புத்தகங்கள்



## இலவச பக்திப் புத்தகங்கள் எங்களிடம் ஒரே தடவை-யில் ரூ.500-க்கு மேற்பட்ட ஸ்வீட்,காரம் வாங்குபவர்களுக்கு வாங்கும் தொகையை அனுசரித்து பக்திப் புத்தகங்கள் இலவசமாக வழங்கப்படும்.

---

கல்யாண வைபவங்களுக்கு: சீர் முறுக்கு, சீர் முள்ளுத் தேன் குழல், தேன் குழல், அதிரசம், திரட்டுப்பால், அப்பம், பருப்புத் தேங்காய் வக்கைகள் முதலியவை செய்துத் தரப்படும்.

---

**தி கிராண்ட் ஸ்வீட்ஸ் & ஸ்நாக்ஸ்**

24, 2வது மெயின் ரோடு,
காந்தி நகர், அடையாறு,
சென்னை - 20.
போன் : 4915662, 4914213

# கல்யாணக் கோலம்! நடந்தது விழா!



• சங்க அறங்காவலர் குழுத்தலைவர் வெங்கடேஸ்வரன் மூப்பனாரை வரவேற்கிறார்.

மும்பை தமிழ்ச் சங்கத்துக்கு எந்த 'டானி'டமிருந்தாவது ஃபோன்கால் வந்து விடுமோ என்று உள்ளூர உதறல்தான்! திரண்டிருந்த ஏராளமான கூட்டத்தைப் பார்த்துவிட்டு ஏதாவது பசையுள்ள இடத்துக் கல்யாணம் என்று நினைத்து விட்டால்..?

உண்மையில் ஒரு திருமண விழாவின் கோலாகலமும் கலகலப்பும், குதூகலமும் மண்டபத்தில் பொங்கி வழிந்தன. தமிழ்ச்சங்கத்தின் அண்மைக்கால சரித்திரத்தில், இது ஒரு வரலாறு காணாத கூட்டம்!

இத்தனைக்கும் வார்த்தைச் சித்தர் வலம்புரியார் வரவில்லை; (அங்கே ஏதோ பெண் பார்க்கும் படலமாம்) கூட்டம் முடிந்த பிறகு சுண்டல் விநியோகமெதுவுமில்லை; இலக்கிய விருந்து மட்டும்தான்.

அட கடவுளே.. இறை வணக்கத்தை 'புவர்ஸ் ஸின்ஸியர்லி' பாடியும்(?)கூட, நின்ற நிலையிலிருந்த கூட்டம் ஓட்டமெடுக்கவில்லை என்றால்... அமரர் கல்கியின் எழுத்து மகிமையை என்னென்பது?

• தமிழ்ச் சங்கத் தலைவர் ஹரிஹரனிடம் அமரர் கல்கியின் படைப்புகளை வழங்குகிறார் மூப்பனார்...

• போலீஸ் இணை கமிஷனர் சிவானந்தம்...

அங்கே நிகழ்ந்தது ஒரு திருமணமேதான்! எழுத்துலக அமரதாராவின் நினைவுகளுக்கும், அந்தக் கனவுகளில் சஞ்சரித்துக் கொண்டிருக்கும் மும்பை தமிழ்ச் சங்கத்து ரசிகர்களுக்குமிடையே நடந்த இலக்கியத் திருமணம்!

சங்கச் செயலாளர் பாலகிருஷ்ணன் வரவேற்புரையையும், தலைவர் ஹரிஹரன் அறிமுக உரையையும் வாசித்து, விழாவுக்கு வந்திருந்தவர்களை வரவேற்றனர். பின்னர் சங்கத்துக்காரர்கள் நூற்றாண்டு விழா கமிட்டியினருக்கும், அவர்கள் இவர்களுக்குமாக சால்வை எல்லாம் போர்த்தி, சம்பந்திகளைப் போல் எதிர் மரியாதை செய்து கொண்டனர்.

தலைமை உரையாற்றிய ஜி.கே. மூப்பனார் சுவையான முந்திரிப்பருப்பில் ஆரம்பித்தார். கறி, கூட்டு, பாயசம், சாம்பார் என்று எதில் சேர்த்தாலும் அதன் சுவையைக் கூட்டுவதுடன், தன் தனித்தன்மையையும் இழக்காமல் சோபிக்கும் முந்திரிப் பருப்பு! அதுபோல் எங்கும் எதிலும் பரவியும் விரவியுமிருந்தும், தமிழ்த் தன்மையை இழக்காதவர்கள் (மும்பை) தமிழர்கள் என்று எங்கள் முதுகில் தட்டிக் கொடுத்துவிட்டு, செப்டம்பர் 99-ல் நடக்க இருக்கும் நிறைவு விழாவிற்கு, மும்பையிலிருந்து 'கல்கி எக்ஸ்பிரஸையே' எதிர்பார்ப்பதாகக் குறிப்பிட்டு, அவையினரைக் குஷிப்படுத்தினார். அமரர் கல்கியின் இலக்கியப் பணிகளை பாராட்டி, "அவர் சரித்திர நாவல்களை மட்டும் எழுதவில்லை, சரித்திர நாயகனாகவே வாழ்ந்தும் காட்டினார்!" என நறுக்கென்று பேசி சுருக் கென்று முடித்தார்.



• பார்வையாளர்கள்...

காலைக்கொரு பாதியும் கொலைக்கொரு பாதியுமாக தம்மை அர்ப்பணித்துக் கொண்ட டி. சிவானந்தம் (ஜாயிண்ட் கமிஷனர் ஆஃப் போலீஸ், க்ரைம் ப்ராஞ்ச்) சிறப்புரை ஆற்றினார். சிறு வயதிலிருந்தே கல்கியின் எழுத்துக்களைத் தாம் தாகத்துடன் படித்து வருவதையும், ஒவ்வொருமுறை படிக்கும்போதும் அதில் புதுப்

புது அர்த்தங்களும் கோணங்களும் புலப்படும் விந்தையையும் வர்ணித்தார். தமது ஆபீஸ் ஃபாக்ஸ் நம்பரை பகிரங்கமாக தெரியப் படுத்தி, அங்கே கூடியிருந்தவர்களில் யாரும் தம்மை எளிதில் அணுகலாம் என்று, வந்திருந்தவர்களுக்கு ஒரு சிறப்பு போனஸை அறிவித்தார்.

'லோக் சத்தா' ஆசிரியரான அருண் டிக்கேகர் மூன்று தலைமுறைகளாக அவர் குடும்பம் பத்திரிகைத் தொழிலுடன் இணைந்திருப்பதைக் குறிப்பிட்டு, அது போல் கல்கி குடும்பம் தொடர்ந்து ஆற்றி வரும் இலக்கியப் பணியைப் பலபடப் பாராட்டினார். கல்கியைப் போன்ற நகைச்சுவை எழுத்தாளர்கள் இன்று குறைந்து விட்டதால்தான், சிவானந்தம் போன்றோருக்கு வேலை அதிகரித்து விட்டதென்று கிண்டலடித்தார்.

கல்கியைப் பற்றிப் பேசுவதே யானையைப் பானைக்குள் அடைக்கும் விஷயமாக இருக்கையில், வலம்புரி ஜான் வராத குறையைத் தீர்க்கும் பொறுப்பை வேறு மூப்பனார் சிவசங்கரியிடம் ஒப்படைத்து விட்டிருந்திருக்கிறார்.

அந்தப் பொறுப்பை சிரமேற்கொண்டு, கல்கி பிறந்த புத்தமங்கலத்தில் ஆரம்பித்து, மணல்மேடு, மாயவரம், திருச்சி, சென்னை என்று ஒரு கலைச் சுற்றுலாவுக்கே ஆடியன்சை, தம் சொற் சிறகுகளில் ஏற்றி, கூட்டிச் சென்று விட்டார் சிறப்புரையாற்றிய சிவசங்கரி.

சின்ன வயதில், தாம் படித்த கதைகளை பிறருக்குச் சொல்லும்போது, தம் கற்பனைத் திறத்தைக் கூட்டிப் பெருக்கி, அதை வெவ்வேறு மனிதர்களிடம் வெவ்வேறு விதமாகக் கல்கி அவர்கள் சொன்ன விதத்தையும், தலையில் வெற்றிலைக் கட்டை சுமந்து கொண்டே, கையிலிருந்த புத்தகத்திலமிழ்ந்து நடக்கையில், வெற்றிலை எங்கேயோ விழுந்தது கூடத் தெரியாமல் வீட்டில் திட்டு வாங்கிய கதையையும் சுவைபடச் சொன்னார் என்றால், பேராசிரியர் கல்கியின் வர்ணனைகளையும் விமர்சனங்களையும் உணர்வுபூர்வமாகப் படித்து, அந்தக் காட்சிகளை நம் கண்முன்னே கொண்டு வந்து நிறுத்தி விட்டார். தம் மனைவிக்கு எழுத்தறிவித்தது முதல், பரதக் கலைக்கு ஒரு கௌரவத்தை ஏற்படுத்தியது வரை பெண்கள் முன்னேற்றத்தில் கல்கி ஆற்றிய பெரும்பணியை விஸ்தாரமாக எடுத்துரைத்தார்.

கல்கி பத்திரிகையை சதாசிவமும் கல்கி அவர்களும் ஆரம்பித்தபோது, அதற்கு மூலதனம் வேண்டும் என்ற ஒரே காரணத்துக்காக, ஆண் வேடம் போடுவதில் தமக்கு விருப்பமில்லாத போதிலும், எம்.எஸ். நாரதர் வேடம் போட்டு, அது பெருவெற்றி அடைந்ததையும் உருக்கமாகச் சொன்னார்.

குழந்தையாகத் தாம் 'கல்கி மாமா'வைச் சுற்றி வந்து, ஆனந்தியுடன் கதைகேட்ட நாட்களையும், பின்னர் தமது முதல் கதையான 'அவர்கள் பேசட்டும்' கல்கியில் பிரசுரமான போது, 'உணர்ச்சிகளை நீ அழகாக வடிக்கிறாய்' என்று கி. ராஜேந்திரன் பாராட்டி, எழுதத் தூண்டியதையும் நெகிழ்ச்சியுடன் நினைவு கூர்ந்தார். பேசி முடித்தபோது யானையின் ஒரு பாதியை பானைக்குள் அடைத்து விட்டார், மறுபாதியை சாவிக்கு விட்டு விட்டார்.

சாவி மேடைக்கு வந்ததும் பானைக் கடைக்குள் யானை புகுந்த கதையாகி விட்டது. வெடிச் சிரிப்பும் கரவொலியுமாக சங்க மண்டபமே கிடுகிடுத்தது. 'எனக்கு வயசு 82; ஆனா ஞாபக சக்தி அபாரம்; சின்ன வயசுல வெச்ச பேரை இன்னும் ஞாபகம் வெச்சிண்டிருக்கேனே! ஒருத்தன் தன் நண்பனைப் பார்த்து 'என்னடா சாமா சௌக்யமா? ஆளே மாறிட்டாயே'ன்னானாம். 'அதுக்கு அவன், 'நான் சாமா இல்லை; கிட்டா'ன்னானாம். 'ஐயையோ பேரையும் மாத்திட்டயா?'ன்னானாம் இவன். அதுபோலத்தான் என் ஞாபக சக்தியும்" என்றுதான் ஆரம்பித்தார்; ஆனால் கல்கியைப் பற்றிய விஷயங்களை ஒன்று விடாமல் - பாதம் அல்வா என்றால் உயிர் என்பது உள்பட - சிரிக்கச் சிரிக்கச் சொல்லி, குருவுக்கேற்ற சிஷ்யன் என்பதை நிலை நாட்டினார்.

கல்கி திடீரென்று ஜிப்பாவுக்கு தாவிய போது அதில் இரண்டு பாக்கெட்டுகளை வைத்து தைத்துக் கொண்டாராம். கேட்டதற்கு 'எல்லோரும் நான் டி.கே.சியையும் ராஜாஜியையும் என் பாக்கெட்ல வைச்சிருக்கேன்னு சொல்றா; ஒரு பாக்கெட்டில இரண்டு பேருக்கும் இடம் போதுமா? அதான் ஆளுக்கொண்ணு..." என்று பதிலிறுத்ததில் இருந்த ஆரோக்கிய நகைச்சுவையைக் குறிப்பிட்டு, இன்னும் பல உதாரணங்களை அள்ளி வீசினார். கல்கியின் எழுத்துக்களை அரசுடமையாக்கியபோது வழங்கப்பட்ட இருபது லட்சம் ரூபாய் குறைவானதென்றாலும், கலைஞரே கல்கியின் எழுத்துக்களை விலை மதிப்பற்றவை என்று குறிப்பிட்டதில் சற்று சமாதானமடைந்திருப்பதாகச் சொன்னார். தமிழராய் இருந்து கொண்டு ஆங்கிலத்தில் பேசிய சிவானந்தத்தை ஒரு பிடிபிடித்து விட்டு, சிவசங்கரி பிப்ரவரி 6-ல் நாட்டியமாடப் போவதாக

ஞாபகமாக அறிவித்து, அனைவருக்கும் அழைப்பும் விடுத்தார்.

மலரும் நினைவுகளில் திளைத்த கல்கியின் புதல்வர் கிரா. அந்தக் காலத்து 'ஃபைவ் ஸ்டார் கல்சரை' அழகாக எடுத்துரைத்தார். அதாவது, ஒரு நட்சத்திரத்தின் ஐந்து கோணங்கள் போல, தம் தந்தை, சதாசிவம், எம்எஸ், ராஜாஜி, டிகேசி ஆகியோர் திகழ்ந்து, தமிழ் கூறு நல்லுலகிற்கு கலைத் தொண்டாற்றி வழிகாட்டிகளாய் இருந்ததை விவரித்தார். என்.எஸ். கிருஷ்ணன் வீட்டில், கல்கியிடம் 'மட வேண்டுமா, காபியா' என்று கேட்டதற்கு 'மடமே மதுரம்' என்று பதிலிறுத்த "spontaneous" நகைச் சுவையில் அமிழ்ந்தார்.

மும்பை தமிழ்ச் சங்கம், அதன் தலைவர் கந்தசாமியின் காலத்தில், கல்கி அவர்களுக்கும் டி.கே.சி.க்கும் ரயில்வே ஸ்டேஷனிலேயே ஆளுயர மாலைகள் அணிவித்து கௌரவித்ததை நன்றியுடன் நினைவு கூர்ந்தார். 'தமிழ்ச் சங்க நூலகத்தில் கல்கியின் நாவல்கள் ஏராளமாக இருந்தும், அதை எடுத்துச் செல்பவர்கள்..." என்று கோடிட்டு நிரப்பும் பணியை ஆடியன்ஸிடம் விட்டு விட்டு, புதிதாக கல்கியின் படைப்புகள் அடங்கிய புத்தகப் பொக்கிஷத்தை சங்க நூலகத்துக்குப் பரிசாக அளித்தார்.

'சாவி'யை மறுபடியும் முடுக்குவானேன் என்ற பயத்தில், சங்க அறங்காவலர் குழுத் தலைவரான வெங்கடேஸ்வரன் கஷ்டப்பட்டு தமிழிலேயே பேசினார். "கட்டடம் கட்டிய பிறகு திருஷ்டிப் பூசணிக்காய் வைப்பார்கள்; அதுபோல் இவர்களெல்லாம் பேசிய பிறகு நான் பேச வந்துள்ளேன்" என்று சாவியின் பாணியிலேயே ஆரம்பித்தார். கல்கி போன்று தேச நலனையே தம் உயிர் மூச்சாகக் கொண்ட இலக்கியவாதிகளுக்கு நூற்றாண்டு விழா கொண்டாடும்போதாவது, அப் பெருந் தலைவர்கள் காட்டிய நெறிமுறைகளை நாம் நினைவு கூர்ந்து, சமூகத்தை உயர்த்தப் பாடு பட வேண்டும் என்று வேண்டிக் கொண்டார். கல்கி நூற்றாண்டு விழா நிறைவுக்கு, மும்பையிலிருந்து குறைந்த பட்சம் நூறு பேருக்கு க்யாரண்டி வேறு கொடுத்தார்.

சுப்பராமன் நன்றியுரை நவின்றபின், நாகமணியுடன் சேர்ந்து எல்லோரும் நாட்டு வாழ்த்துப் பாடியபோதுதான், அட, அதற்குள் முடிந்து விட்டதா என்று நினைக்கத் தோன்றியது.

— ஜெயஸ்ரீ ராஜ்

# ஹைர ஹைர ஹைரோப்பா — 15

உலகின் ஏழு அதிசயங்களில் ஒன்றான 'பிசா கோபுரம்', ஃப்ளாரன்ஸிலிருந்து இடது கோடியில், இதாலிய எல்லையை ஒட்டிய பிசா நகரத்திலிருக்கிறது. வழி எல்லாம் பச்சைப் பசேலென்று ஆலிவ் மரங்களின் ஆதிக்கம். வெட்ட வெளியிலெல்லாம் வெள்ளை வெளேரென்ற வலை போட்டு வைத்திருந்தார்கள். மரங்களை உலுக்கும் போது விழும் ஆலிவ் பழங்களைச் சேகரிப்பதற்கு!

சமைக்கவும் ஆலிவ் எண்ணெய்; உடலை அழகாக்கவும் ஆலிவ் எண்ணெய்தான் - மொத்தத்தில், இவர்களது ஆரோக்கிய அழகின் இரகசியம்... ஆலிவ் ஆயில்!

தூரத்திலிருந்தே, தலை சாய்த்து வரவேற்றது கோபுரம்! பிசா கோபுரம், பிறவியிலேயே சாய்மானமானது; முதல் கோணல் முற்றும் கோணல் என்பது போல், வருடா வருடம் ஒன்றிலிருந்து இரண்டு மில்லி மீட்டர் வரை சாய்ந்து வருகிறதாம்! இதைத் தூங்கி வழிந்து கொண்டே, முதன் முதலாக ஃபோட்டோ எடுத்த ஒரு புகைப்படக்காரர், "டவர் நேராகத்தானிருக்கிறது! நான் படுத்திருந்த தரை மேடுபள்ளமாயிருந்ததால், கோபுரம் சாய்ந்திருப்பது போல் ஃபோட்டோவில் தெரிகிறது" என்றாராம்!

1902ல், வெனிஸிலுள்ள 'பெல் டவர்' சரிந்தவுடன், இவர்கள் விழித்துக் கொண்டு, கமிஷன் அமைத்தனராம். அன்று தொடங்கி, 1912, 24, 25, 26, 27 என ஆறு முறை கமிஷன்கள் அமைக்கப்பட்டு, ஏதாவது செய்தாக வேண்டும் என்ற முடிவுக்கு ஒவ்வொரு கமிஷனும் வந்தனவேயன்றி, இது நாள் வரை எதையும் செய்யவில்லையாம்! (அட நம்மூர் 'டைப்'தான் போலும்!)

1903ல் முசோலினியால் அமைக்கப்பட்ட கமிஷன், ஹார்ஸ் ஸ்கொயர் அமைத்து, டன் டன்னாக சிமெண்டை, பேஸ்மெண்ட் பகுதியில் கொட்டியதாம். ஆனாலும் சாய்வது நிற்கவில்லையாம்!

எத்தனையோ இன்ஜினியர்கள், டெக்னீஷியன்கள், ஆராய்ச்சியாளர்கள், விஞ்ஞானிகள், அரசியல்வாதிகள், மண்டையை உடைத்துக் கொண்டு, ரிப்போர்ட் மீது ரிப்போர்ட்டாக தயாரித்ததுதான் மிச்சம்; ஒன்றும் நடக்கவில்லை! பொது மக்களிடமிருந்து எட்டாயிரம் ஐடியாக்களைத் திரட்டி, அரசு அதில் மூன்றைத் தேர்ந்தெடுத்து, '92ல் அதை ஒட்டி வேலை துவங்கியதாம்! சம்பந்தப்பட்ட கம்பெனி தப்பும் தவறுமாய் எதையோ செய்யப் போய், பூகம்பம் வந்த போது, இது விழுந்துவிடும் என எல்லோரும் எதிர்பார்த்தனராம்! ஆனால் இன்றளவும், நிமிர்ந்து.. ஸாரி.. சாய்ந்து நிற்கிறது! ஏழு அற்புதங்களில் ஒன்றாய், இன்னும் பல்லாண்டுகள் தொடர்ந்து நிற்கலாம்...! நிற்கும்!

பக்கத்திலேயே ஒரு ம்யூசியம்! பச்சைப் பசேல் வெளியில் வெள்ளை வெளேர் கோபுரங்கள், கண்ணுக்குக் குளிர்ச்சியாயிருந்தன. சுற்றுப் புறத்தின் தூய்மை கண்ணைப் பறித்தது!

எல்லோரும் சாயும் கோபுரத்தைச் சாயாமல் தடுப்பது போல், 'ட்ரிக்ஷாட்' ஃபோட்டோ எடுத்துக் கொண்டார்கள்!

சுற்றியிருந்த கடைகள், பிசா கோபுரத்தை விற்றன. மார்பிள் பவுடரில் செய்யப்பட்ட இந்த பொம்மைகளை, தூசி படியாமலிருக்க, துடைத்து வைத்துக் கொள்ள வேண்டுமாம்!



• மியூசியம், சர்ச் பின்னணியில் பிசா கோபுரம்...

தண்ணீரில் போட்டால் 'க்ளோஸ்' தானாம்!

பலர், "உங்கள் தாஜ்மகாலும் இது போன்ற மார்பிளால் உருவானதா? அது ரொம்ப அழகாமே? இப்போது புகைபடிந்து, 'பொல்யூட்' ஆகி, கறுத்து வருகிறதாமே?" என்றெல்லாம் எங்களிடம் விசாரித்தனர்.

# சில்லென்று ஒரு ஜில்லென்று ஐரோப்பா!



• பிசா (பைசா) கோபுரம்...

சிறிது நேரத்துக்குப் பின், மேற்கு எல்லையை ஒட்டிப் பயணம் செய்த போது, எதிர்ப்பட்ட மலைகளெல்லாம் வெள்ளை ஆடையைப் போர்த்தியிருந்தன. என்ன, இங்கேயுமா பனி? இல்லையில்லை! மார்பிள் பவுடர் போர்த்த மலைகள்; சுற்றிலும் மார்பிள் அகழ்ந்தெடுக்கிறார்கள். இங்குள்ள கராரா மார்பிள் உலகப் பிரசித்தம்!

இதாலியன் ரெவியராவை ஒட்டிய நீண்ட பயணம்; வழியில் அழகிய கடற்கரைகள்; வெயிலில் குளிக்கக் காத்துக் கிடக்கும் கூட்டம்... கண்கவர் 'டூரிஸ்ட்' ஸ்பாட்டுகள்.

நடுவில், இந்த நீரில் எக்கச்சக்கமான 'ஆர்ஸினிக்' கலந்திருக்கிறது என ஒரே கலாட்டாவாகி விட்டதாம்; குப்பைகள் வேறு நிறைந்து, மாசு அதிகரித்து, 'பீச்'களின் அமைதி கெட்டு விட்டதாக கூக்குரல்கள் கிளம்பினவாம். இந்த ஊர் எம்.பி. ஆர்ஸினிக் கலந்த விஷ நீரை ஒரு பையிலும், குப்பை கூளங்களை வேறொன்றிலும் திரட்டி எடுத்து வந்து, பார்லிமெண்டில் சிவப்பு கார்பெட் முழுக்க இதைப் பரப்பி, குடிநீருக்குப் பக்கத்திலேயே இந்த நீரையும் வைத்து, மேலும் கூழமாக நடந்து, எல்லோரின் கவனத்தையும் ஈர்த்தாராம்! அதன் பிறகுதான், பல பில்லியன்கள் செலவிடப்பட்டு, சுத்தமாக்கப்பட்டனவாம்!

இந்தப் பகுதியில் பயணம் செய்யும்போது இங்குள்ளோர், பூகம்பம் வந்து விடுமோ என எந்நேரமும் நடுங்கிக் கொண்டிருப்பதைப் பற்றி மரியா கதை கதையாகச் சொன்னார். இதாலிக்கு ஏதோ கேடுகாலம் வர இருப்பதாக அங்கு பலர் நம்புகிறார்களாம்!

**மெ**துமெதுவாக ஃப்ரெஞ்ரெவியரா வந்து கொண்டிருந்தது. முதலில் நாங்கள் செல்ல இருந்தது 'பிரின்ஸிபாலிடி ஆஃப் மொனாக்கோ.' ஃபெரஞ்சுக்காரர்களென்றால் நினைவுக்கு வருவது 'செண்ட்'தானே?

அதனால் நேராக, பர்ஃப்யூம்கள் தயாரிக்கும் தொழிற்சாலையில் பஸ்ஸைக் கொண்டு நிறுத்தினோம். தூக்கலான சிவப்பு நிறத்தில், பெரிய கண்களுடன், மென்மையான ஃப்ரெஞ்சு அழகிகள் வரவேற்றனர்.

ஒரு லிட்டர் பர்ஃப்யூம் தயாரிக்க, 25,000 கிலோவிலிருந்து ஒரு டன் வரையிலான புத்தம் புது மலர்கள் உபயோகிக்கப்படுமாம்.

ஜெயஸ்ரீ ராஜ்

நம் ஸயன்ஸ் லாபரட்டரியை ஒத்த, கண்ணாடி ஃப்ளாஸ்குகளும், மற்ற ரசாயன உபகரணங்களும் கொண்ட பெரிய பெரிய ஹால்கள்.

ஸெண்ட் தயாரிக்கும் எவரும் குடிக்கவோ புகைபிடிக்கவோ கூடாதாம், ஆண்கள் உட்பட! மலர்களைக் கசக்கி, அத்தரை எடுத்து, தூய்மைப்படுத்தி, பாட்டில்களில் அடைத்து, 'பாக்' செய்வது வரை எல்லாவற்றையும் விளக்கினார்கள்.

பிறகு வழக்கம் போல், "உங்களுக்காகவே பிரத்யேக தள்ளுபடி விலையில், உலகில் வேறெங்கும் கிடைக்காத குறைந்த விலையில் தருகிறோம்!" என்று ஆசை காட்டி பர்ஃப்யூம்களை டூரிஸ்டுகள் தலையில் கட்டினார்கள்.

ஒவ்வொன்றும் அசாத்திய விலை. அன்பளிப்பாகக் கொடுப்பதற்கென்று இவற்றைத் தான் பலரும் தேர்ந்தெடுத்தனர்.

'இத்தனூண்டு இருக்கிறதே! இதை எழுநூறு ரூபாய் என்று சொன்னால் யாராவது நம்புவார்களா...' என்ற சந்தேகம்தான்! ஆனாலும், விஷயம் தெரிந்தவர்கள் புரிந்து கொள்வார்கள் என்ற நம்பிக்கையில் வாங்கி வைத்தோம்; மலர் வடிவ சோப்புகள் வேறு! கிட்டத்தட்ட ஐம்பது ரூபாய் விலையில்!

ரொம்ப உசத்தியான செண்ட் என்று அவர்கள் காட்டியதெல்லாம் நமக்கு வாசமே இல்லாதது போலிருந்தது. (இருந்தாலும் அதையே வாங்கினோம்!). விடை பெறுகையில், ஆளுக்கொரு செண்ட் பாட்டிலை (குணேகா சைஸிலாவது) தருவார்களாக்கும் என்று பார்த்தால், வெறும் வாசனை ஸ்டிக்கரை கையில் ஒட்டி டாடா காண்பித்து விட்டார்கள்!

**'நை**ஸி'ல் தங்கிக் கொண்டு, இரவில், "மாண்டே கார்லோ" பார்க்கக் கிளம்பினோம்; இது ஒரு அழகிய மலை வாசஸ்தலம் என்பதைக்காட்டிலும், பரம்பரை + புது பணக்காரர்களின் வாசஸ்தலம் என்றால் பொருத்தமாயிருக்கும்! அலை சூழ்ந்த இந்த அழகுக் குவியலில், ரியல் எஸ்டேட் விலை, வானத்தையே தொட்டிருக்கிறது! "Nothings going to change my love for you" பாடல் பின்னணியில் மாண்டே கார்லோவை ரசித்த நினைவு நெஞ்சில் மோத, அதை நேரிலேயே காணும்









பரவசம் சற்று வித்தியாசமாயிருந்தது.

ஒரு கதிட்ரல், பெரிய அரண்மனை, ஒரு ஓஷனோக்ராஃபிக் ம்யூசியம் என்று நீண்ட 'வாக்'! ராஜ வம்சத்தைப் பற்றிய நிறைய (கட்டுக்) கதைகள்; ப்ரின்சஸ் டயானாவுக்கும் இங்குள்ள ராஜ குமாரிக்குமுள்ள ஒற்றுமைகள் பற்றி மரியா பேசிக் கொண்டேயிருந்தார். இங்கேயிருந்த 'ப்ரின்ஸ் சார்மிங்' இன்னும் தன் துணையைத் தேடிக் கொண்டிருப்பதாக மரியா கூற, அமெரிக்க இளசுகளெல்லாம், முன் வரிசைக்கு வந்து, ஜன்னல்களை மேய்ந்தன.

மாண்டே கார்லோவின் பிரதான கவர்ச்சி சூதாட்ட விடுதிகள். இத்தனை வகை சூதாட்டங்களா என்று வாயைப் பிளக்க வைத்தன! டிஸ்கோ லைட்டுகள் பளபளவென்று ஃப்ளாஷ் அடிக்க, பெரிய பெரிய டேபிள்கள்; முன்னால் டீ.வி. திரைகள். கோபுரக் குவியலாய்க் காசுகள். ஒவ்வொரு ஆட்ட முடிவிலும், வெற்றி பெற்றவரைப் பற்றிய மைக் அறிவிப்புகள்; ஆட்டத்தைப் பற்றிய குறிப்புகள்.

அடேயப்பா... இரவிலும் கூட்டம் நிரம்பி வழிந்தது; விடிய விடிய விளையாடுபவர்களும் உண்டாம்; நம்பரிங் மெஷினில் சில விளையாட்டுகளை நாங்களும் ஆடிப் பார்த்தோம்; குறிப்பிட்ட எண் காம்பினேஷனில் வந்தால் காசு மழை பொழிகிறது. இல்லா விட்டால் அம்பேல். ஒன்றிரண்டில் வென்றோம்; ஆனால் சூதாடிய காசை உபயோகிக்கப் பிடிக்காமல், மீண்டும் விளையாடித் 'தொலை'த்தோம்! எத்தனையோ மனிதர்கள் லட்சாதிபதியாகும் வெறியுடன் விளையாடுவார்களாம். சிலருக்குத்தான் கனவு நனவாகியிருக்கிறது. பலருக்கு இருப்பதும் போய்... அதான் வசதியாகக் கடல் 'வா..வா'.. என்று ஆர்ப்பரிக்கிறதே..

அங்கேயே அன்று உணவு. இத்தனை மோசமான அரிசிச் சோற்றை பார்த்தேயிருக்க மாட்டீர்கள்! 'நைஸ்'க்கு திரும்பி, ஹோட்டல் 'குவாலிடி'யில் உறங்கி, காசு மழை பொழியும் கனவுகள் கண்டு, மறுநாள் "லையான்ஸை" நோக்கிப் புறப்பட்டோம்.

(தொடரும்)











கருத்து : ஜோதி ரஞ்சன்



குழந்தை கேட்கும் கேள்வி, நம் மீது உள்ள நம்பிக்கையின் வெளிப்பாடு என்று சொன்னேன்... அதே களங்கமற்ற நம்பிக்கை பதில் சொல்பவருக்கும் தங்கள் குழந்தையிடம் இருக்க வேண்டும். அப்போதுதான் முதலிரவு குறித்த கேள்வி கேட்கப்படும்போது நேர்மையாக அதை எதிர்கொள்ள முடியும்.

'சினிமா அல்லது டீ.வியைப் பார்த்துக் கெட்டுப் போய்விட்டான்'; 'வயசுக்கு மீறிய திமிரைப் பார்!'; 'வேண்டுமென்றே சீண்டுகிறது சனியன்...'; 'பக்கத்து வீட்டு பத்மினி கல்யாணத்தப்போ எல்லாத்தையும் கோட்டான் மாதிரி பார்த்துக்கிட்டேயிருந்ததோட விளைவுதான்...' – என்று மனத்தில் முளைக்கக்கூடிய விதவிதமான தீர்மானங்களுக்கு முதலில் தடை போட்டாக வேண்டும்.



இப்படிப்பட்ட சங்கடமான கேள்விகளைச் சந்திக்கும் நேரங்களில் நாமும் குழந்தைகளாக இருந்த நாட்கள் நினைவுக்கு வருவதில்லை... முதலிரவு குறித்த இதே கேள்வியோ அல்லது தாம்பத்ய உறவு குறித்த நியாயமான குறுகுறுப்போ நமக்கும் ஏற்பட்டிருக்கிறது. ஆனால், கேள்வியாக – அதுவும் பெற்றோரிடம் – கேட்கிற அளவுக்கு தைரியம் இருந்ததில்லை.

இன்றைய குழந்தைகளுக்கு மட்டும் எங்கேயிருந்து இந்தத் துணிவு வருகிறது...?

நம்மிடமிருந்துதான்! தராதரமின்றி பல டெலிவிஷன் நிகழ்ச்சிகளைக் குழந்தைகள் இருக்கும்போதே நாம் பார்க்க நேர்கிறது. நாம் தவிர்த்தாலும் பிற இடங்களில் இத்தகைய நிகழ்ச்சிகளைக் குழந்தைகள் காணும் வாய்ப்புகள் உண்டு. இன்றைய மீடியா பாதிப்பிலிருந்து கவசம் போட்டுக் குழந்தைகளை நாம் பாதுகாக்க முடியாது. (அது தவறும்கூட.)

மற்றொரு சூழ்நிலையும் குழந்தைகளை பாதிக்கிறது: பெரியோர்கள், குறிப்பாக பெற்றோர்கள் சரளமாகவும் வெளிப்படையாகவும் கருத்து பரிமாறிக் கொள்வதைக் குழந்தைகள் பார்க்கிறார்கள். பல பரிமாற்றங்கள் வாக்குவாதமாவதையும் காண்கிறார்கள். இன்று நடுத்தரக் குடும்பங்களில் கணவன் – மனைவியிடையே கேள்விகள்,

# நேர்மை,

எதிர்க்கேள்விகள் இல்லாத நாட்களே மிகக் குறைவு. குடும்ப உறவில் ஆரோக்கியமான சமத்துவத்துக்கு உதவும் இந்தச் சூழ்நிலையினால் குழந்தைகளின் கேள்வி கேட்கும் இயல்பும் உரம் பெறக் கூடும். எனவே முறையாக பதில் சொல்ல நம்மைத் தயார்ப் படுத்திக் கொள்வது நல்லது.

# எளிமை, முற்றுப்புள்ளி!

விஜி

"ஃபர்ஸ்ட் நைட்ல அப்பாவும் நீயும் என்ன பேசிக்கிட்டிங்க?" என்ற கேள்விக்கு என்ன பதில் சொல்வது...? என்னதான் தயாராயிருந்தாலும் இடுக்கிப்பிடி கேள்விதான் இது! யோசிப்பதற்கு நேரம் பெறும் வகையில் பதில் சொல்லலாம்.

"இப்போ நான் வேலையா இருக்கேன் பாரு... நீ ஹோம் ஒர்க்கை முடிச்சுட்டு வா, அப்புறமா சொல்றேன்..."

"அப்பாவும்/அம்மாவும் வரட்டும். எனக்குச் சரியா ஞாபகமில்லை... அவங்ககிட்டேயும் கேட்டுக்கலாம்..."

– இது போன்ற பதில்களைக் குழந்தை பெரும்பாலும் ஏற்றுக் கொள்ளும். அந்த இடைவெளியில் அழகான பதிலை திட்டமிட்டுத் தயார் செய்து கொள்ளுங்கள். மறக்காமல் அதைப் பக்குவமான நேரத்தில் சொல்லி விடுங்கள். குழந்தையிடம் கொடுத்த வாக்கைக் காப்பாற்றுவது மிகவும் முக்கியம்.

"அப்பாவுடைய வேலையைப் பற்றிக் கேட்டேன்... சின்ன வயசுல படிச்ச ஸ்கூல், காலேஜ் பத்திப் பேசினோம்... அப்புறம் இரண்டு பேரும் சேர்ந்து சுவாமியை வேண்டிக்கிட்டுத் தூங்கிட்டோம்..."

– இதைப் போன்ற பதில் உண்மையாகவும் குழந்தைகளுக்குப் புரியும் தன்மையிலும் மேற்கொண்டு கேள்விகளை வளர்த்தாத முற்றுப்புள்ளி பதிலாகவும் அமையும்.

மாறாக,

"இதெல்லாம் நீ கேட்கக் கூடாது..." என்றால்,

"ஏன்...?" என்று எதிர்க்கேள்வி எழும்.

இந்த எதிர்க் கேள்விக்கு உண்மையில் ஏதேனும் பதில் இருக்கிறதா என்றால்... இல்லை! இயலாமையினால் "எதிர்த்தா பேசறே...!" என்று நாலு அடி வைத்தால் குழந்தை அழுதுகொண்டே போய் விடலாம்... ஆனால் அவன் மனத்தில் முளைவிட்ட ஆர்வக் குறுகுறுப்பு வேறு தவறான இடங்களில் பதிலைத் தேடச் செய்யும்.

பணியாட்கள், அக்கம்பக்கத்தவர், நண்பர்கள் என்று முறையாகவோ பொறுப்பாகவோ பதில் சொல்லத் தெரியாதவர்களிடம் போய்க் கேட்டு விபரீத பதில்களைப் பெறுவார்கள் குழந்தைகள்.

இதைத் தவிர்க்க, பெற்றோரே நம்பகமான, நயமான பதில்களைக் கூறி விடலாம்.

அப்படியானால், குழந்தை என்ன கேட்டாலும் பதில் சொல்லி விடுவதா...?

"மாடி வீட்டு மீனா அக்கா வயசுக்கு வந்துட்டாளாம்... அப்படின்னா என்னம்மா...?" என்று ஆறேழு வயது மகளோ மகனோ கேட்கும் போது,

"நீ விளையாடிட்டு வா, அப்புறமா சொல்றேன்" என்று பதில் சொல்வது விபரீதமோ விபரீதம்!

"இப்போ சொன்னா உனக்குப் புரியாது பப்லூ... பத்து வயசு ஆகும்போது நானே சொல்றேன்..." – இது உசிதமான பதில். உரையாடல் இப்படியும் தொடரக் கூடும்:

"என் டென்த் பர்த்டே அன்னிக்குச் சொல்றியா...?"

"கட்டாயம் சொல்றேன்..."

"அப்போ நான் மறந்து போயிட்டா...?"

"நீ மறக்க மாட்டே... அப்படி நீ மறந்தா நான் ஞாபகப் படுத்தறேன்... நான் மறந்தா நீ ஞாபகப் படுத்து... சரிதானே...?"

திருப்தியோடு அடுத்த விஷயத்தில் கவனம் செலுத்தும் குழந்தை.

(அடுத்த வாரம் வரை...)

அப்புறம் என்ன ஆச்சு?



# சிதம்பரனார் இழுத்த செக்கு

**க**ப்பலோட்டிய தமிழர் வ.உ.சிதம்பரனார் கோவை சிறையில் இழுத்த செக்கு, சென்னை அரசினர் தோட்டத்தில், ஒரு ஷெட் அமைத்து பல வருடங்களாக வைக்கப்பட்டிருந்தது. அதைத் தேடிக் கொண்டு அங்கே போனல், அந்த ஷெட் வெறிச்சோடிக் கிடந்தது. அதிர்ச்சியுடன், விசாரித்தபோது, ''இங்கே, அதற்குச் சரியான பராமரிப்பு வசதி இல்லை என்பதால், கிண்டி காந்தி மண்டப வளாகத்துக்குக் கொண்டு போய் விட்டார்கள்!'' என்றார் அங்கே இருந்த ஒருவர்.

காந்தி மண்டப வளாகத்துக்குப் போனபோது, தியாகிகள் மணி மண்டபத்தையடுத்து, புதிதாக நாற்புறமும் கிரில் அமைத்து, புதிய ஷெட் ஒன்று கட்டப்பட்டு, அதற்குள் வ.உ.சி. இழுத்த செக்கு வைக்கப்பட்டிருக்கிறது. கருங்கல்லால் ஆன அடிப்பகுதி இடுப்பளவு உயரம். அதனுள்ளே இருப்பதும், மற்ற இணைப்புகளும் செந்நிற மரத்தில். மரப்பகுதி, புதிதாய் வார்னிஷ் அடித்து மணக்கிறது.

வ.உ.சி. நூற்றாண்டு விழாவின்போது (72ல்) முதல்வர் கலைஞர் கருணாநிதி கோவை மத்திய சிறைச்சாலையில் இருந்த இந்த செக்கின் அடிப்பகுதியைக் கொண்டு வந்து அரசினர் தோட்டத்தில் வைத்திருக்கிறார்.

அந்தச் செக்கு இரட்டைக் கருங்கல்லால் ஆனது. அடிப்பகுதி சென்னைக்கு வந்துவிட, இன்னொரு கல் பகுதியைக் கொண்டு கோவை சிறையிலேயே, வ.உ.சிக்கு ஒரு நினைவகம் அமைக்கப் போவதாய் அரசு அறிவித்தது.

**வ**.உ.சி. வாழ்க்கை வரலாற்று நூலை எழுதிய பழம் பெரும் எழுத்தாளர் பெ.சு. மணியைச் சந்தித்த போது, சில வரலாற்றுச் சம்பவங்களை நினைவு கூர்ந்தார்.

''கோவைச் சிறையில், கடுங்காவல் தண்டனைக் கைதியாக வ.உ.சி. இருந்ததால் முதலில் சணல் உரிக்கும் இயந்திரத்தைச் சுற்றும் வேலை தரப்பட்டது. இயந்திரம் சுற்றிய கைகளில் தோல் உரிந்து, ரத்தம் வந்தது. அதனையடுத்து, செக்கிழுக்க உத்தரவானது. பகல் முழுக்க, வெயிலில், கைகளிலும், கால்களிலும் விலங்கிடப்பட்ட நிலையில் செக்கிழுத்தார் வ.உ.சி.!

"இது குறித்து 28.11.1908ம் தேதி இந்தியா இதழில், மகாகவி பாரதியார் எழுதிய போது, 'வ.உ.சி. செக்கிழுக்கும் செய்தி கேட்டு உள்ளம் துடிக்கிறது. இதை எழுதுகிறபோதே கைகள் நடுங்குகின்றன!' என்கிறார். அந்த வேதனையில்தான், 'மேலோர்கள் வெஞ்சிறையில் வீழ்ந்து கிடப்பதுவும் நூலோர்கள் செக்கடியில் நோவதுவும் காண்கிலையோ...' என்று பாடியுள்ளார் பாரதி!''

தாம் செக்கிழுத்த வேதனையை வ.உ.சி. தமது சுயசரிதையில் இப்படி எழுதியுள்ளார்:

திங்கட்கிழமை ஜெயிலர் என் கைத்தோல் உரிந்ததைப் பார்த்தான்; உடன் அவன் எண்ணெய் ஆட்டும் செக்கினை, மாட்டிற்குப் பதிலாக பகலெல்லாம் வெயிலில் நடந்து தள்ளிட அனுப்பினான்; அவனுடைய அன்புதான் என்னே!

— எஸ். சந்திரமௌலி

படம்: ஸ்ரீஹரி

தேவாரம்

காளிமுத்து

ஐ.ஜி.பாலசந்திரன்

அடுத்த படம் ரெடி அண்ணே....




1999 ஜனவரி 24
வெகுதான்ய தை 10
மலர் : 57
இதழ் : 26



# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்




## ஜாதி போச்சு, மதம் வந்தது டும் டும் டும்!

மத மாற்றங்கள் குறித்து நாடுதழுவிய விவாதம் நடத்தப்பட வேண்டும் என்கிறார் பிரதமர். இதை மறுத்துச் சாடுகிறது காங்கிரஸ் தலைமை. 'இன்றைய தேவை, மத மாற்றங்கள் குறித்த விவாதம் அல்ல; மதச்சார்பின்மை குறித்த மெய்யான மதிப்பீடு கள்தான்; அவற்றை விவாதிப்போம்' என்கிறது அக்கட்சி.

உண்மையில் இன்றைய இந்தியாவின் அவசியத் தேவை, அரசியல் கண்ணோட்டத் தில் அதிரடி மாற்றம்தானே தவிர மதச்சார்பின்மை அல்லது மதமாற்றம் குறித்த கருத்தரங் குகள் அல்ல.

சோனியா காந்தி குஜராத்தில் கலவரம் பாதித்த பகுதிகளுக்குப் போய் வந்தால் அவரை கிறிஸ்துவ அனுதாபி என்று அநாகரிகமாக முத்திரை குத்துகிறார்கள் பி.ஜே.பி. தரப்பினர்.

சோனியா காந்தி, உடனே ராமகிருஷ்ண மிஷன் நடத்திய தேசிய இளைஞர் தின நிகழ்ச்சியில் பங்கேற்று உரையாற்ற ஏற்பாடு செய்யப்படுகிறது. இந்து மதத்தின் பாரம்பரிய மான சகிப்புத்தன்மை, ஒற்றுமை போன்றவற்றை நினைவூட்டிப் பேசுகிறார் சோனியா... தமது ஹிந்து அபிமானத்தைப் பிரகடனப்படுத்தி 'சமன் செய்ய' கஷ்டப்பட்டு முயற்சி மேற்கொள்கிறார். அவரது உரையில் குறையில்லையென்றாலும் அரசியல் நிர்ப்பந்தமே அவரை இயக்குகிறது என்பது தெளிவாகத் தெரிகிறது.




அரசியலும், அரசியல்வாதிகளும் இது போன்ற அற்ப, அனாவசிய விவாதங்களில் ஈடுபடுவதுடன் மத உணர்வுகளையும் ஜாதி உணர்வுகளையும் தூண்டிவிடுகிற அபாய மான புதைசேற்றில் சிக்கிக் கொண்டிருக்கிறார்கள். பாகிஸ்தான் பிரிவினையின்போது மக்களின் உணர்வுகள் பொங்கிக் கலவரங்கள் வெடித்தன; அரசியல்வாதிகளும் தலைவர் களும் அமைதிக்குப் பாடுபட்டார்கள். இன்றோ அரசியல்வாதிகளும் தலைவர்களுமே ஜாதிமத வேற்றுமை உணர்வுகளைத் தூண்டி கலவரத்துக்கு வித்திடுகிறார்கள்.

மக்களின் உணர்வுகள் புண்பட்டுப் போயிருக்கிற நிலையில், குஜராத் சம்பவங்களால் நாடே அதிர்ந்து போயிருக்கும் தருணத்தில், சிவசேனா குண்டர்கள் டெல்லி கிரிக்கெட் பிட்சை நாசமாக்கும் நீசத்தனத்தில் ஈடுபட்டிருக்கிறார்கள். இப்படி துவேஷம் வளர்க்கும் கட்சியுடன் உறவைத் துண்டித்துக் கொள்ளத் திராணியில்லாமல் தொடர்கிறது மத்திய அரசு.

குஜராத் பகுதியில் நடந்த கொடுமைகள் மதமாற்றங்களின் எதிரொலி என்று சொல்லப் படுகிறது. பிற்படுத்தப்பட்ட, தாழ்த்தப்பட்ட வகுப்பினர் மதம் மாறினால் அரசாங்கச் சலுகைகளைப் பெற இயலாது. ஆனால் மதம் மாறுவோர், தொடர்ந்து பிற்படுத்தப்பட்ட வகுப்பைச் சார்ந்தவர்களாகவே இருக்க விழைகிறார்கள்; சலுகைகளை அனுபவிக்க விரும்பு கிறார்கள் என்பது ஹிந்து அடிப்படைவாதிகளின் குற்றச்சாட்டு.

சலுகைகள் அரசாங்க ஆசியுடன் வழங்கப்படுகிறவரையில் அவற்றை அனுபவிக்க விரும்புவோரின் எண்ணிக்கையும் அதிகரித்துக் கொண்டேதான் போகும். இட ஒதுக்கீடு சதவிகிதம் ஆண்டுதோறும் பெருகி வருவதை நாம் பார்த்துக் கொண்டே வருகிறோம்.

இந்த ஒதுக்கீட்டு முறை மூன்று தலைமுறைகளாக அமுலிலிருந்தும் பிற்படுத்தப்பட் டோரை முன்னேற்றுவதில் குறிப்பிடத்தக்க வெற்றி ஏதும் காணவில்லை. ஒதுக்கீடு விரும்புவோரின் எண்ணிக்கைதான் அதிகரித்து வருகிறது!




அரசாங்கமே சலுகைகளைத் தருவதால் அவற்றைக் கால வரையின்றி ஏற்பது குறித்து எந்தவித அவமான உணர்வோ, சங்கடமோ மக்களுக்கு ஏற்படுவதில்லை.

அரசியல் கட்சிகளுக்கோ, இந்தச் சலுகை ஆயுதம் சுலபமாக வோட்டு வாங்குவதற்கு மிகவும் உபயோகமாக இருக்கிறது.

ஜாதி உணர்வுகளை விடவும் வேற்றுமத விரோத உணர்வுகளைத் தூண்டி வோட்டுப் பெறுவது இன்னும் பலமடங்கு சுலபமாய் இருக்கிறது.

பெண்களுக்கு இட ஒதுக்கீடு என்று முழங்குவதும் வோட்டுப் பெறும் உள் நோக்கத்துடன்தான்...

ஒதுக்கீட்டு அரசியலிலிருந்து ஒட்டுமொத்தமாகத் திசை திரும்பி ஆக்கபூர்வமான அரசியலுக்குத் தலைவர்கள் மாறாத வரையில் நாடு முன்னேறப் போவதில்லை.

ஐந்தாண்டுத் திட்டமோ, ஒதுக்கப்படும் கோடிகளோ, தொழில்நுட்ப முன்னேற்றமோ, இதர முயற்சிகளோ முனை மழுங்கி, இறுதியில் பலன் தராமல் போய்விடுவது இந்த வோட்டு வங்கி அரசியலினால்தான்.

அபாயகரமான இந்த ஒதுக்கீட்டு அரசியல், மீள முடியாத சிக்கல்களுக்கும் துயரங்களுக்குமே இறுதியில் இட்டுச் செல்லும்.

ஒருத்தரையொருத்தர் குற்றம் சாட்டுவதை நிறுத்தி வைத்துவிட்டு, அரசியல் தூய்மை, அரசியல் நேர்மை, மக்கள் நல அரசியல் ஆகியவற்றைக் குறித்து மனம் விட்டுக் கருத்துப் பரிமாறிக் கொள்ள நாடு தழுவிய விவாதம் நடக்கட்டும். மனச்சாட்சிகள் தட்டி எழுப்பப்படட்டும்.

இதைப் படிக்குபோது, எட்டாத பழத்துக்குக் கொட்டாவி விடுவதாகத் தோன்றும். ஆனால் இதைச் செய்யாத வரையில் தேச முன்னேற்றம் என்பது பெரிய கொட்டாவியாகத்தான் இருந்து வரும். ●



* பேரக் குழந்தைகளை அழைத்து வந்த சேதுராமன்

புறமா முடியும்போது வாங்கிக்கு வோம்'' என்ற டாக்டர் குமார், ராயப்பேட்டை மருத்துவமனை யில் எலும்பு சிகிச்சைப் பிரிவில் பணியாற்றுகிறார். இந்தப் பிரிவு தொடர்பான மாநாடு ஒன்றில் கலந்து கொண்டு அங்கிருந்து நேரே தம் தோழர்களோடு வந்திருக்கிறார். தாம் கூறிய தற்கு ஆதாரமாக, ஒரு மாத நாவல் அளவில் உள்ள ''ஆர்த்





* புத்தகக் கண்காட்சி...

வருஷா வருஷம் நடக்கும் புத்தகக் கண்காட்சிதான். இந்த முறை இருபத்தி இரண்டாவது.

"சுமார் இரண்டரை லட்சம் புத்தகங்கள் விற்பனைக்குக் காத்திருந்தன. சென்ற கண்காட்சியில் சுமார் ஒரு கோடி என்ற விற்பனை எல்லைக் கோடு, இந்த முறை அதிகமாகும் என்ற எதிர்பார்ப்பு. அச்சுப் பூக்களை நாடி ஆயிரக்கணக்கில் வந்த வாசகத் தேனீக்கள்.

இவற்றைத் தவிரவும், இவற்றை விடவும் சுவையான பல சங்கதிகளைக் கண்காட்சியில் காண முடிந்தது.

● "காந்தளகம்" ஸ்டாலில் ஒரு சிறப்பு வசதி. கண்காட்சியில் வைக்கப்பட்டிருக்கும் நூல்களை கம்ப்யூட்டரில் பதிவுசெய்திருந்தார்கள். எந்த சப்ஜெக்டில் என்னென்ன நூல்கள், அவை எந்த ஸ்டாலில் ஆகிய விவரங்கள் விரல் நுனியில் கிடைத்தன. இதைப் பயன்படுத்திக் கொண்டவர்கள் உண்டு. என்றாலும் "எல்லா ஸ்டால்களையும் ஒரு சுற்று சுற்றிப் பார்த்து, நமக்குப் பிடித்ததை நாமே தேர்ந்தெடுப்பதுதானே ஆனந்தம்?" என்ற முடிவோடு செயல்பட்டவர்கள் அதிகம்.

● "லேட்டஸ்ட் மருத்துவ நூல்களை இங்கே பார்க்க முடிகிறது. ஆனால் பெரிய நூல்களின் விலை ஆயிரக்கணக்கில் இருக்கும். அதனாலே அந்த மாதிரி புத்தகங்களைப் புரட்டிப் பார்த்து, வாங்கத் தகுதிதானா என்பதை முடிவு செய்துட்டு, அப்

தோபெடிக் சயன்ஸ்'' என்ற நூலின் விலையைச் சுட்டிக்காட்டினார் - இருநூற்றைம்பது ரூபாய்.

"மருத்துவத் தொழிலுக்குத் தொடர்பில்லாத பொது மக்களில் சிலர் எக்கச்சக்க விலை கொடுத்து மருத்துவப் புத்தகங்களை வாங்குவது வியப்பாக இருக்கிறது. ஆழமான விவரங்களை அறியும் ஆர்வம் பாராட்டக் கூடியது என்றாலும், சுயவைத்தியம் செய்து கொள்ள விரும்பும் விபரீதமும் இதில் வெளிப்படுகிறதே!" என்றார்.

● "புல்வெளி புல்வெளி தன்னில் பனித்துளி பனித்துளி இங்கு" என்ற பாடல் சற்றே வித்தியாசமாக, உற்சாகமாக வயலினில் ஒலிபரப்பாகிக் கொண்டிருந்தது.

"யாருடா இது?"

"குன்னக்குடியாகத்தான் இருக்கும். வேற யாரு வயலினிலே இவ்வளவு லொள்ளு பண்ணப் போறாங்க?" இப்படிப் பேசியபடி கேஸட் விற்பனை ஸ்டாலை நோக்கி நடந்தார்கள் அந்த இளைஞர்கள். ஆம். புத்தகக் கண்காட்சியில் ஒலிநாடா விற்பனையும் உண்டு. வேறு சில ஸ்டால்களில் கம்ப்யூட்

டர் சேவை, இன்டர்நெட் நடைமுறை விளக்கங்கள் ஆகியவையும் இருந்தன.

● "'எந்த ஒரு புத்தகத்துக்கும் வாடிக்கையாளர் உண்டு' என்ற கூற்று உண்மைதான். இந்தியா புக் ஹவுஸிலே கழுதையைப் பற்றி ஒரு கனமான புத்தகம். இதை யார் வாங்கப் போறாங்க என்று நினைத்தால், கழுதைகளைப் பற்றி ஆராய்ச்சி செய்து கொண்டிருந்த (மாநிலக் கல்லூரியைச் சேர்ந்த ஒரு பேராசிரியர்) இதை வெகு ஆர்வத்துடன் வாங்கிக் கொண்டு போனாராம்'' என்றார் முகுந்தராஜன். கண்காட்சியை நடத்தும் தென்னிந்திய பதிப்பாளர் குழுவின் நிர்வாக உறுப்பினர். ஒவ்வொரு வருடமும் சிறந்த எழுத்தாளர்களைக் கண்காட்சியின் முதல் நாளன்றே (ஆங்கிலத்துக்கு ஒன்று தமிழுக்கு ஒன்று) கௌரவிப்பது வழக்கம். (சென்ற முறை தமிழில் கௌரவிக்கப்பட்டவர் சமீபத்தில் அமரராகி விட்ட சி.சு. செல்லப்பா). இந்த முறை தொடங்கி சில நாட்கள் ஆகியும் இது நடக்கக் காணோம்? "என்ன செய்ய, இந்த முறை கலைஞர் தேர்வு செய்யப்பட்டிருக்கிறார். அவர் தேதி கொடுக்கும் போதுதானே வச்சிக்க முடியும்?''

● "ஹிப்னாடிஸம்" பற்றிய புத்தகம் வேண்டுமென்று ஸ்டால் ஸ்டாலாக தேடிக் கொண்டிருந்தவரை மடக்கினோம். BHEL நிறுவனத்தில் பணிபுரியும் அவர் பெயர் வெங்கட்ராமன். "எனக்கில்லே சார், என் நண்பருக்கு. சரியா தூக்கம் வரலேன்னார். இந்தப் புத்தகம் உபயோகமாய் இருக்குமேன்னுதான்." ஏதாவது புத்தகம் தேவைப்பட்டா இவர்களது நண்பர்கள் எல்லாம் இவரைத்தான் அணுகுவார்களாம். கையில் ஒரு மிக நீளமான பிரிண்ட் அவுட்டை வைத்திருந்தார். "எல்லாம் என் வீட்டிலே இருக்கும் புத்தகங்களின் லிஸ்ட். அகர வரிசைப்படி. இருக்கிற புத்தகத்தையே ஏதோ மறதியிலே திரும்ப வாங்கிடக் கூடாது இல்லையா?"!



• டாக்டர் குமார் • வெங்கட்ராமன்

# இத்தாலிக்காரருக்கு இங்கே சீப்!

● வெளிநாட்டு ஆசாமிகளையும் பார்க்க முடிந்தது. இத்தாலியிலிருந்து வந்திருந்த பவ்ரீசியாவும் அதில் அடக்கம். புத்தகங்களை விட அவற்றின் விலை அதிகமாகக் கவர்ந்ததாம். "ரொம்ப சீப்" என்றார். அந்நியச் செலாவணி சமன்பாடு செய்யும் மாயம்!

● "பேரக் குழந்தைகளுக்கு பொது அறிவுப் புத்தகம் வாங்கத்தான் இங்கே வந்தேன். அவற்றிற்குப் பஞ்சமேயில்லை. கூடவே தென்னிந்தியாவின் சிறப்பை விளக்கும் ஒரு புத்தகத்தை எனக்கு வாங்கிக் கொண்டேன்" என்றார் வேலையில் இருந்து ஓய்வுபெற்ற சேதுராமன். ஜி.கே. புத்தகங்களை ரசித்தாலும் "காமிக்ஸ் வேண்டும்" என்றும் கேட்டுக் கொண்டிருந்தன வாண்டுகள்.

● பார்வையாளர்கள் தங்கள் பெயரையும் விலாசத்தையும் எழுதி அங்குள்ள ஒரு பெட்டியில் போட்டு விட வேண்டும். தினசரி குலுக்கலில் ஆயிரம் ரூபாய் வரை பரிசு உண்டு. அந்தப் பகுதியில் அடுத்தடுத்து நின்று விலாசத்தை எழுதிக் கொண்டிருந்த இருவர், மற்றவரது விலாசத்தைப் பார்த்து, ''அட நீங்க போரூரா? நானும்தான்.'' "அட நீங்களும் லட்சுமி நகரா? நான் முதல் கிராஸ்லே இருக்கேன்", "அட நானும்தான்" என்று நட்பு கொள்ள... புத்தகக் கண்காட்சியினால் எத்தனை வித்தியாசமான நன்மைகளும் கூட!

— ஜி.எஸ்.எஸ்.

படங்கள்: வெங்கடேஷ்

(3-ஆம் பக்கத் தொடர்ச்சி)

மறைக்க விரும்பவில்லை."

**"உங்கள் தம்பியின் கொலைக்குப் பிறகுதான், அடிதடி, பழிக்குப் பழி என்கிற செயல்களில் ஈடுபட்டீர்களா?"**

"அப்போது எனக்கு அப்படிப்பட்ட எண்ணம் இருந்தது உண்மைதான். இப் போது இல்லை. என் எதிரிகளுக்கு நானே பொது மன்னிப்பு வழங்கி விட்டேன். பழிக் குப் பழி என்கிற சிந்தனை கூட இப்போது என்னிடம் இல்லை."

**"நீங்கள் இப்படிச் சொல்லுகிறீர்கள். ஆனால் பொது மக்களிடம் உங்களைப் பற்றி 'துஷ்டன்' என்கிற இமேஜ்தானே இருக்கிறது. உங்களைப் பற்றிய பயம்தானே இருக்கிறது?"**




"நீங்களே கூட என்னைச் சந்திக்க வரு வதற்கு முன்னால் அப்படித்தான் நினைத் திருப்பீர்கள். என்ன காரணம்? 'இந்த வழக் கில் வீரமணி தேடப்படுகிறான்; அந்தக் கொலை வழக்கில் தேடப்படுகிறான்' என்று போலீஸ் தருகிற பொய்யான அறிக்கை களைப் பத்திரிகைகளில் படித்து விட்டுப் பொதுமக்கள் தங்களுக்குத் தாங்களே என் னைப் பற்றியொரு பொய்யான அபிப்பிரா யத்துக்கு வந்து விட்டார்கள். என்னிடம் பழகிப் பார்த்தால்தானே தெரியும், நான் எப்படிப்பட்டவன் என்று!"

**"உங்களை அனைவரும் 'பெரியவர்' என்றுதான் சொல்கிறார்கள். அது மரியா தையா அல்லது பெயர் சொன்னால் ஏதும் பிரச்னை வரும் என்கிற பயமா?"**

"ஒரு பெண்ணையும் சேர்த்து என் னோடு பிறந்தவர்கள் ஏழு பேர். நான்தான் மூத்தவன். அதனால் என்னை என் பெற்றோர்கள் 'பெரியவன்' என்று அழைக்க ஆரம்பித்தார்கள். அதுதான் பிறகு 'பெரியவர்' என்று ஆனது. இப்போது நான் தலைவராக இருப்பதால் 'தலைவர்' என்று சொல்லுகிறார்கள். அவ்வளவுதான்!"

**"ஆனாலும் அண்மையில் மீன் பிடிப் பவர்களிடம் ஏற்பட்ட ஒரு தகராறில் உங் களை ஏன் இன்னமும் கைது செய்ய வில்லை என்று உங்கள் இனத்தவர்கள் சிலரே அறிக்கைகள் விட்டார்களே?"**

"அவர்களின் அறியாமை என்றுதான் சொல்ல வேண்டும். இந்தப் பக்கம் மகாபலி புரத்திலிருந்து அந்தப் பக்கம் பழவேற்காடு வரையுள்ள மீனவர் கிராமங்களில் நான் சொல்வதற்குக் கட்டுப்படுவார்கள் என்றாலும் குறிப்பிட்ட ஒருசிலர் என்னை எதிர்க்கவும் செய்யலாம். அவர்கள் போகப் போகத்தான் என் பணிகளை முழுமை யாகப் புரிந்து கொள்வார்கள். ஒரு சிங்கார வேலர் மாதிரி இப்போது மீனவர்களி டையே தலைவர்கள் இல்லை. அவரைப் போன்று சமுதாயப் பணியாற்றவே நான் ஆசைப்படுகிறேன்."

**"சென்ற பாராளுமன்றத் தேர்தலின் போது ஜெயலலிதா தரப்பிலிருந்து உங்களை வந்து அணுகினார்கள் என்று சொல்லப்பட்டதே?"**

"அது பொய். எந்தக் கட்சியிலிருந்தும் யாரும் வந்து அணுகவில்லை. நான் சொல்லி மீனவர்கள் வோட்டுப் போடு வார்கள் என்று சொன்னால், நான் ஏதாவ தொரு அரசியல் கட்சியிடம் பணம் வாங் கிக் கொண்டு, அந்தக் கட்சிக்கே வோட்டுப் போடச் சொல்லலாமே? அப்படியெல்லாம் சொன்னால் என் சமுதாய மக்களே என்னை உதைப்பார்கள்."

**"மீனவர் சமூகத்துக்காக நீங்கள் என்னென்ன கோரிக்கைகளை வைத்துக் கொண்டு போராடுகிறீர்கள்?"**

"இப்போது இலங்கை ராணுவத்தால் வருகிற பிரச்னைதான் முக்கியமான பிரச்னை. இதையும் மற்றவற்றையும் அரசி டம் எடுத்துச் சொல்லியிருக்கிறோம். செய்

வதாகச் சொல்லியிருக்கிறார்கள். செய்வார்கள் என்று நம்புகிறோம். பார்ப்போம்."

**"இப்போது கூட மீனவர்களுக்காக இரண்டு பாராளுமன்றத் தொகுதிகளும் ஐந்து சட்டமன்றத் தொகுதிகளும் ஒதுக்கீடு செய்ய வேண்டும் என்று அறிக்கை விட்டிருக்கிறீர்கள். இப்போது மீன் வளத் துறை அமைச்சராக இருப்பவர் மீனவர் இனத்தைச் சேர்ந்த ஜெனிபர் சந்திரன் தானே!"**

"ஒருவர் குரலோடு சேர்ந்து இன்னும் சிலருடைய குரல்கள் ஒலிப்பது நல்லது தானே! அந்த வகையில்தான் கேட்கிறோம். எங்களுக்கென்று ஓர் எம்.பி. இருந்தால் இலங்கை ராணுவத்தால் மீனவர்கள் பாதிக்கப்படுவதை நாடாளுமன்றத்தில் முழுமையாக எடுத்துச் சொல்ல முடியுமல்லவா!"

**"மீன் பிடிக்கச் செல்லும் மீனவர்கள் புயல் காலங்களில் சிக்கிக் கொள்ளும் போது, அரசு எடுக்கிற நடவடிக்கைகள் துரிதமாக இருக்கிறதா?"**

"துரிதமாக இல்லை என்பது வருத்தமான விஷயம்தான். புயல் நேரத்தில் கடலுக்குள் செல்லும் விசைப் படகுகளில் வாக்கி டாக்கி போன்ற சாதனங்கள் இருந்தால் ஒருவருக்கொருவர் தகவல் பரிமாறிக் கொள்ள வசதியாக இருக்கும். நான் வாக்கி டாக்கிக்கு மனுச்செய்து இரண்டு ஆண்டுகள் ஆகின்றன. இன்னும் ஒன்றும் நடக்கவில்லை. என்ன செய்வது? அரசுக்கு இன்னும் சுறுசுறுப்பு வேண்டும். இதையெல்லாம்தான் நாங்கள் வலியுறுத்துகிறோம். அதற்காகத்தான் 'தமிழ்நாடு மீனவர் இயக்கம்' ஆரம்பிக்கப்பட்டுள்ளது. நான் தலைவராகப் பொறுப்பேற்றிருக்கிறேன். பொங்கல் கழிந்ததும் தமிழகம் முழுவதுமுள்ள மீனவர்களைச் சந்தித்துப் பேசப் போகிறேன்."

**"இதெல்லாம் நல்ல விஷயங்கள்தான். உங்களுடைய பஞ்சாயத்து விஷயங்களெல்லாம் மீனவர் சமுதாயத்துக்குள் இருக்கிற வரை பிரச்னை இல்லை. ஆனால் மீனவர் சமுதாயத்தையும் தாண்டி ஒரு தலைவர் என்கிற ஹோதாவில் வெளியார்களிடம் நீங்கள் பஞ்சாயத்துச் செய்வதால்தான் உங்களை ஒரு 'தாதா' வாக்குகிறது, இல்லையா?"**

"அரபு நாட்டுக்குக் கூட்டிச் செல்கிறேன்; சிங்கப்பூருக்கு அழைத்துக் கொண்டு போகிறேன் என்று வெளியிலிருப்பவர்கள் மீனவர்களிடம் பணம் வாங்கிக் கொண்டு ஏமாற்றினால், சம்பந்தப்பட்ட மீனவர்கள் என்னிடம் வந்து புகார் செய்கிறபோது, நான் போய் கேட்கத்தானே வேண்டியிருக்கிறது. நியாயத்தைக் கேட்டால் அது ரவுடித்தனமா?"




– வெ. ராஜாராமன்

**"நியாயத்தைக் கேட்பதில் தவறில்லை. அதைக் கேட்கிற வழிமுறையில்தானே பிரச்னை! அவர்களை 'இரண்டு தட்டு தட்டி'க் கேட்டால் அது ரவுடித்தனம் தானே?"**

"அப்படி நான் யாரை அடித்துக் கேட்டிருக்கிறேன்? சொல்லச் சொல்லுங்கள். சொன்னால் நீங்கள் அதையும் பத்திரிகையில் போடுங்கள்."

**"அடிபட்டவர்கள் பயந்து கொண்டு பேசாமல் இருக்கலாமே?"**

"எப்போதும் யாரும் பயந்து கொண்டே இருக்க மாட்டார்கள். நான் ஒருவரை அடித்தால் யாருக்கும் தெரியாமலா அடித்து விட முடியும்? ஒருநாள் இல்லா விட்டாலும் ஒருநாள் உண்மைகள் வெளி வந்தே தீரும்!"

பேட்டி : **இளங்கோவன், ஸ்ரீநிவாசன்**

படங்கள் : **வெங்கடேஷ்**

# எல்லாத்துலேயும்

ஹாய், எவ்ரிபடி! ஹைதரா பாத்லேருந்து சுமி பேசறேன். ஸாரி, மாட்லாடறேன். போன வாரம் மூடிய அறைக்குள்ள உட்கார்ந்து எழுத வேண்டி யிருக்கறது பத்திக் கொஞ்சம் வருத்தப்பட் டிருந்தேனில்லை? பக்தை சுமி கலங் கலாமான்னு பகவான் ஏடுகொண்டலு வாடன் உடனே இந்த வாரம் என்னைத் தூக்கிட்டு வந்து ஒரு ஓடைக் கரைல உட் கார வெச்சிருக்கார். சுத்தி சுமார் நூறு மரங் களுக்கு நடுவுல ஒளிஞ்சுக்கிட்டு, அங்கங்க சில அரசுக் கட்டடங்கள், ஆடிட்டோரி யங்கள். பாபூ, எக்கட, உன்னாரா, சேசின்னு காது நிறைய சுந்தரத் தெலுங்கு. பதிமூனு வருஷம் கழிச்சி இங்க நடக்கற ஃபிலிம் ஃபெஸ்டிவலைப் படுகிராண்டா நடத் தணும்னு பிளான் பண்ணி, 'ஹார்ட் ஆஃப் தி டவுன்'ல இருக்கற பப்ளிக் கார்டனை (அங்கதான் inaugural function நடந்தது) ஈடன் கார்டனாவே மாத்த முயற்சி பண்ணியிருக் காங்க. என்ன டெகரேஷன்! என்ன நுணுக் கம்! (எல்லாத்துலயும் ஒரு 'தெலுகு டச்' இருக்கணும்னு அஃபிஷியல்ஸுக்கு உத் தரவு போட்டிருந்தாங்களாம். கிடைச்ச இடத்துல எல்லாம் கலர் கலரா சீரியல் பல்ப் மாட்டிட்டாங்க.) பப்ளிக் கார்டன்ல நான் உட்கார்ந்து, இப்ப இதை எழுதிட் டிருக்கிற ஓடைக் கரைலேருந்து பார்த்தா, உலகமே சீரியல் பல்புகளால் நிரம்பின துன்னு சொல்றா மாதிரி இருக்கு. அட, இந்த ஓடையைக் கூட விட்டு வெக்கலை. சாயம் தோய்ச்சா மாதிரி தண்ணி கலர் கலரா போறது!

* விளக்கேற்ற உதவும் மீனா

சிடி முழுக்க புதுசா ரோடு போட்டு, ரயில்வே ஸ்டேஷனுக்கு எதிரே பிரும் பிரும்பிரும்மாண்டமா ஒரு வெல்கம் ஆர்ச் வெச்சிருக்காங்க. (என்னதான் நான் வரப் போறது முன் கூட்டியே தெரியும் னாலும் அதுக்காக இப்படியா?) எங்க பார்த்தாலும் கலர் கலரா IFFI 99ன்னு போட்ட கொடி பறக்குது! டெலி [redacted]



கேட்ஸுக்குப் பிரமாதமா அக்காமடேஷன் அரேஞ்ச் பண்ணி, ப்ரெஸ்காரங்களுக்குக் காரசாரமா இலவச (ஆம்!) லஞ்ச் ஏற்பாடு பண்ணி, வரவங்களுக்குத் தகவல் சொல்லி உதவறதுக்காகவே தனியா ஒரு டீம் ஃபார்ம் பண்ணி கலக்கியிருக்கார் பாபுகாரு.

"இத்தனை கலாட்டா எதுக்குன்னு நினைக்கறீங்க? படங்கள் செலக்ட் பண்ணியிருக்கறதுல நிறைய கசமுசா. படு குப்பையான சரக்கெல்லாம் வந்திருக்கு. Moreover, தெலுங்குப் படங்கள் எதுவும் செலக்ஷன் கமிட்டிக்குப் பிடிக்காம போயிட்டதால லோக்கல் சினிமாக்காரங்க கடுப்பாயிருந்தாங்க. அவங்கள்ல சிலரையாவது இனாகுரல் ஃபங்ஷனுக்கு வரவழைக்கக் கால்ல விழாத குறையா கெஞ்சி சமாதானப்படுத்தியிருக்காங்க. Fiftyயில வந்த தெலுகு படங்களை Retrospective செக்ஷன்ல

# 'ஒரு தெலுகு டச்!'

போட்டு கொஞ்சம் ஒத்தடம் குடுத்திருக்காங்க"ன்னு தகவல் தந்தார் ஒரு உள்ளூர் ஜர்னலிஸ்ட். (அரசு நியமிச்சிருக்கும் தகவல் குழுவில இவரெல்லாம் இல்லை!)

பொதுவாவே வந்திருக்கற படங்களெல்லாம் தண்டம்னுதான் நான் சந்திச்ச பலபேர் சொன்னாங்க. சேகர் கபூரோட 'எலிஸபெத்' தவிர, இன்னும் நான் எதையும் பார்க்க ஆரம்பிக்காததால கருத்துச் சொல்ல முடியலை.

டென்த் ஈவ்னிங் கரெக்டா ஆறு மணிக்குத் தொடக்க விழாவை ஆரம்பிச்சுட்டாங்க. ஆளாளுக்கு 'ஸ்வாகதம்! சுஸ்வாகதம்!'னு திரும்பத் திரும்ப சொல்லிக்கிட்டே இருந்ததுல நைட் கனவுல வந்த அத்தனை பேரையும் இழுத்து நிறுத்தி நானும் சொன்னேன்: 'ஸ்வாகதம்! சுஸ்வாகதம்!'

'இந்த நூற்றாண்டின் கடைசி திரைப்பட விழா இது'ங்கறதை பேசின எல்லாரும் திரும்பத் திரும்ப சொல்லிட்டே இருந்தாங்க. அதனாலதான் இத்தனை கிராண்டா நடக்குதாம்.

'பரபஞ்சம் ஒரே குடும்(ப்)பம்'னு 'வசுதேவ குடும்பக'த்துல சொல்லியிருக்காம். அதைச் சொல்லித்தான் ஸ்டார்ட் பண்ணாங்க. சந்திரபாபு நாயுடு, ப்ரமோத் மஹாஜன் (அம்பது வயசுல எவ்ளோ ஹேண்ஸமா இருக்கார்!) தேவ் ஆனந்த் - இவங்கள்லாம் பேச்சாளர்கள்.

டைப் ரைட்டர்ல ஏ- எஸ்-டி- எஃப்-ஜி- எஃப் தட்டறதை எவ்ளோ உணர்ச்சிமயமா செய்ய முடியுமோ அதே அளவு உணர்ச்சியோட பேசினார் பாபுகாரு. (பேப்பர்ல படிச்சிருக்க மாட்டீங்க?) But, ஒரு விஷயம் எனக்குப் பிடிச்சிருந்தது. பாபு நிஜமாவே ஆந்திரா



• தெலுங்கு ஸ்டார்கள் மட்டும் ஆப்செண்ட்

கெஸ்ட் ரைட்டர்: சுமி




வைக் காதலிக்கிறார். பார்த்து ஒவ்வொரு விஷயமா இம்ப்ரூவ் பண்ணணும்னு நினைக்கறார்.

'Our people are capable to celebrate more and more in the national events in Hydrabad'னு அவர் சொன்னது வெறுமனே சினிமா சமாசாரத்துக்கானதா இருக்கும்னு எனக்குத் தோணலை. (தப்பான இங்கிலீஷைக் கண்டுக்காதீங்க!) ஆந்திராவை 'ஹை டெக் ஸிடி'யா மாத்திட்டு வர்றது பத்தி சொன்னார். 'என்ன வளம் இல்லை இந்தத் திரு நாட்டில்?'ங்கற ரீதில ரொம்ப உணர்ச்சிமயமா இருந்த ஸ்பீச்சை(எழுதிக்குடுத்த செகரட்ரி ஹைதராபாத் பிரியாணி மகாத்மியத்தைக்கூட மிச்சம் வைக்கலை!) ஏழாம் கிளாஸ் பையன் சரித்திர பாடம் உருப்போடற மாதிரி கீழ் ஸ்தாயில, நடைவண்டி ஸ்பீட்ல பார்த்துப் படிச்சார்.

இயல்பா பேசினது பிரமோத் மஹாஜன். "நம்ம ஊர்ல கம்ப்யூட்டர் தெரியாதவங்க இருப்பாங்க. விஞ்ஞானம், தொழில் நுட்பம் தெரியாதவங்க, பொருளாதாரம் – வணிகம் தெரியாதவங்க இருப்பாங்க. But சினிமா தெரியாதவங்க யாரும் கிடையாது!"ன்னு அவர் சொன்னதுக்கு நல்ல க்ளாப்ஸ். நிறைய பேர் சிரிச்சாங்க. சிரிக்கற விஷயமா இது?

எல்லாரும் 'எவர் க்ரீன் ஹீரோ', 'இந்த வருஷம் பிறந்திருக்கற (!) யாரோ ஒரு பொண்ணு பிற்காலத்துல ஹீரோயின் ஆனா அவளையும் தம் ஜோடியா நடிக்க வைப்பார்; அது இதுன்னு புகழ்ந்து தள்ளினதுல, தேவ் ஆனந்த்ஜிக்குத் தலை கால் புரியலை. வயசான காலத்துல, 'ரொம்ப இளமை'ன்னு காட்டிக்கப் படாதபாடு படறார். அந்தப் பழைய ஆவாரா ஸ்டைல் ஓவர் கோட்டை இன்னும் விட மாட்டேங்கறார்.

தேவ் ஆனந்த் குத்து விளக்கேத்தறதுக்குப் பக்கத்துல இருந்து ஹெல்ப் பண்றதுக்காக (சும்மா ஒரு ஷோ!) ஃப்ளைட் பிடிச்சி வந்திருந்தார் மீனா.

''முன்னெல்லாம் இப்படி 'ஹெல்ப்' பண்ண வர்ற நடிகைகள் கையில வத்திப் பெட்டியைக் குடுத்துடுவாங்க. சமையல் கிமையல் பண்ணியிருந்தால்தானே? அவங்க பத்துக்குச்சியை சரக் சரக்குன்னு கிழிச்சி – அப்பவும் விளக்கை ஏத்த முடியாம அவஸ்தைப் படறது சகிக்காம இப்ப மெழுகு வர்த்திக்கு மாறிட்டாங்க''ன்னு சரித்திரம் சொன்னார் ஒரு நண்பர்.

இதுலயும் ஒரு பிரச்னை இருந்தது மீனாவுக்கு. குத்து விளக்குல மூணு திரி ஏத்தினதும் தேவ்ஆனந்த் ஓரடி பின்னால போயிட்டார். தானே ஏத்திடறதா? கூப்பிட்டு அவரையே ஏத்தச் சொல்றதான்னு சில செகண்ட்ஸ் மீனா தவிச்ச அழகு இருக்கே! க்ளாஸ்!

நிறைய ஃபாரினர்ஸ் வந்திருந்தாங்க. சினிமாக்காரங்க, பத்திரிகைக்காரங்கதான் எல்லாரும். அத்தனை பேரும் சினிமாக்களை ரசிக்கறாங்களோ இல்லையோ, கலை நிகழ்ச்சிகள்ங்கற பேர்ல அன்னிக்கு நடந்த சில 'டப்பாங்ஸை' ரொம்ப ரசிச்சாங்க. தட்டுலு, போனலு வீர நாட்டியம், சேவிலுன்னு என்னென்னமோ பேர்கள், பின்னால ஸ்க்ரீன்ல ஓட, டமடமடமன்னு நான்–ஸ்டாப்பா டமாரம் கட்டி ட்ரை ஐஸ் புகையை விட்டு ஸ்டேஜ்ல குதிச்சி குதிச்சி போக்ரன் வெடிச்சிட்டுப் போச்சு ஒரு கோஷ்டி.

லாஸ்டா, 'எலிசபெத்' படம். தொடக்க விழாவுக்கேத்த அற்புதமான படம். But, இந்த மாதிரி ஒரு டெக்னிகல் சாதனைகள் நிறைய இருக்கற படத்தை ஓப்பன் ஆடிட்டோரியத்துல பார்க்கறது மாதிரி ஒரு கொடுமை வேற இல்லை. சேகர் கபூரே இது பத்திக் கொஞ்சம் வருத்தப்பட்டுச் சொன்னார். ஆடிட்டோரியத்துக்கு ஜஸ்ட் பின்னாலதான் ஹைதராபாத் ரயில்வே ஸ்டேஷன். 'பொய்ங் பொய்ங்'னு ரயில்கள் குடுத்த ரீ – ரெக்கார்டிங் பின்னணில அந்தப் படத்தைப் பார்த்தது மகா கஷ்டமா இருந்தது. ஸோ, இன்னொரு தடவை பார்க்கப் போறேன். அது பத்தியும் மத்த படங்கள்ல எனக்குப் பார்க்கக் கிடைச்சது பத்தியும் அடுத்த வாரம் விரிவா எழுதறேன்.

# மரபணுப் புரட்சிக்கு ஒரு மாநாடு!

எண்பத்தாறாவது அறிவியல் மாநாடு சமீபத்தில் சென்னை அண்ணா பல்கலைக் கழகத்தில் நடைபெற்றது. துவக்கி வைத்தவர், பிரதமர் வாஜ்பாய்

கனடா, பர்மா, வியட்னாம் உள்பட பல வெளிநாடுகளிலிருந்து 47 விஞ்ஞானிகள் கலந்து கொண்டனர்.

ஆண்டுதோறும் நாட்டின் பல்வேறு பகுதிகளில் நடக்கும் இந்த மாநாட்டினால் பொதுமக்களுக்கு என்ன பயன்? இந்த மாநாட்டின் பொறுப்பாளரும் நுண்ணியல் மரபுத்துறைப் பேராசிரியருமான குந்தளா ஜெயராமன் நிறையப் பயன்கள் உண்டு என்கிறார்.

"பசுமைப் புரட்சியால் ஓரளவு பலன் கிடைத்து விட்டது. உரங்களால் மகசூல் அதிகரித்தாலும் இதற்கு மேலும் விளைச்சலை அதிகரிக்க முடியாது என்ற நிலை. எனவே இப்போதைய தேவை மரபணுப் புரட்சிதான்.

தவிர மக்கள் தொகை வளர்ந்து கொண்டே போக, விளை நிலத்தின் அளவு இவ்வளவுதான் என்றநிலை. எப்படி சமாளிக்கப் போகிறோம்?

மருந்துக் கம்பெனிகள் ரசாயனப் பொருள்களை அடிப்படையாகக் கொண்டு தான் மருந்து தயாரிக்கின்றன. சுற்றுப்புறச் சூழல் மாசுபடாமல் இவற்றைத் தயாரிக்க என்ன செய்யப் போகிறோம்?

மரபணுக்களில் மாறுதல் செய்து சில குறிப்பிட்ட நோய்கள் நம்மைத் தாக்காமல் தடுக்க முடியுமா?

-இப்படி இந்த மாநாட்டில் விவாதித்துள்ள எல்லா விஷயங்களுமே பொது மக்களை நேரடியாக பாதிக்கும் அல்லது பாதிக்கவிருக்கும் பிரச்னைகள்தான்" என்றார்.

"மாநாட்டில் பல விஞ்ஞான விந்தைகள் விவாதிக்கப்பட்டது உண்மைதான். மரபணு ஆராய்ச்சி தொடர்பாக



• அறிவியல் கண்காட்சியைத் திறந்து வைத்தார் முரளிமனோகர் ஜோஷி

நோபல் பரிசு பெற்ற பேராசிரியர் ஜேம்ஸ் வாட்சன் சிறப்பு விருந்தினராகக் கலந்து கொண்டார். நம் உடலில் 23 ஜோடி குரோமோசோம்கள் உள்ளன. இவற்றின் தன்மையைப் பொறுத்துத்தான் நம் உடலின் ஆரோக்கியநிலை நிச்சயிக்கப்படுகிறது. ஒவ்வொரு குரோமோசோமிலுமுள்ள A,T,G,C ஆகிய நான்கு பிரிவு சங்கதிகள் என்ன வரிசையில் அமைந்துள்ளன என்பது முக்கியம் எனக் கருதி, அதற்கான ஆய்வுகள் வெகு முன்னேறிய கட்டத்தை எட்டியுள்ளன. "சில நாட்டு அரசுகள் தங்கள் மக்களைக் கட்டாய மரபணு சோதனைக்கு உள்ளாக்கி மரபணு மாறுதலுக்கு உட்படுத்தி, தங்களுக்கு வேண்டிய மாதிரி குடிமக்களை உருவாக்கி விடுமோ என்ற பயம் உண்டாகியிருக்கிறது. இதற்கெல்லாம் தடுப்பு அரண்கள் வேண்டும்தான். அதே சமயம் இதற்காக பயந்து கொண்டு அறிவியல் ஆராய்ச்சிகளினால் உண்டாகும்

அற்புத விளைவுகளை இழப்பது தவறு'' என்றார் வாட்ஸன்.

அமெரிக்காவில் உள்ள மிசௌரி தாவரவியல் பூங்கா, விஞ்ஞானிகளிடையே வெகு பிரபலம். அதன் இயக்குனரான பேராசிரியர் ராவன் விவசாயத்தில் அறிவியல் அதிக தீவிரத்துடன் நுழைய வேண்டியதன் கட்டாயத்தை வலியுறுத்தினார்.



• அறிவியல் கண்காட்சியில்...

"கடந்த ஐம்பது வருடங்களில் மண்ணின் மேல் பரப்பில் சுமார் 25 சதவீதம் அழிந்து விட்டது. தாவரங்களுக்கு நல்லது செய்யும் பல உயிரினங்கள் அடுத்த நூற்றாண்டு இறுதிக்குள் அழிந்து விடும் போலிருக்கிறது'' என்றார்.

கனடா நாட்டுப் பேராசிரியர் கென் லூகோவைக், "அறிவியலுக்குத் தேவையான உள்ளுணர்வும், நிறைவான அணுகுமுறையும் உடல் கூறின்படி பெண்களுக்கே அதிகம் உள்ளன. ஆனால் கடந்த நூறு ஆண்டுகளில் மொத்தம் எட்டே பெண் விஞ்ஞானிகள்தான் நோபல் பரிசு பெற்றிருக்கிறார்கள்!'' என்று ஆச்சரியப்பட்டார். கூடவே குழந்தை வளர்ப்பு என்பது பெண்ணின் தோளில் விழுவதால்தான் இந்த நிலை என்று இதற்கான காரணத்தையும் குறிப்பிட்டார்.

பல விஞ்ஞானிகளும் தாவரங்கள் பற்றிப் பேசினர். ஒரு செடி வளரும்போது, அதன் வளர்ச்சி பல காரணங்களால் பாதிக்கப்படலாம். நிலத்தின் உப்புத்தன்மை, பூச்சிகள், நாம் அதற்கு இடும் பல்வேறு சத்துக்களை அதனால் உறிஞ்சிக் கொள்ள முடியாமல் ஏதோ தடுப்பு, இப்படி விதையிலேயே உப்பு நீர் மற்றும் பூச்சி அரிப்புக்கு எதிரான செயல்பாடு கொண்ட விஷயங்களை அதன் மரபு அணுக்களில் ஏற்றி விட்டால்? இதற்கான முயற்சிகள் சோதனைக் கட்டத்தைத் தாண்டி, நடைமுறைக்கே வந்து விட்டன. அமெரிக்காவில் இதன் மூலம் ஐந்து ஹெக்டேர் விளைச்சல் உள்ள இடத்தில ஏழு ஹெக்டேரைப் பெற முடிகிறதாம்.

இந்தியாவிலுள்ள நான்கு பெரும் அறிவியல் மையங்கள், தொற்று நோய்களுக்கெதிராக தடுப்பூசி போல் வேலை செய்யும் சத்துக்களைக் கொண்ட ஸ்பெஷல் தக்காளிகளை உருவாக்க முயற்சித்துக் கொண்டிருக்கின்றன. முதல் கட்டமாக காலராவுக்கெதிரான தக்காளி! இது போன்ற உருளைக் கிழங்கை மேல்நாட்டில் உருவாக்குகிறார்கள். ஆனால் தக்காளிதான் வேக வைக்கப்படாமல் அப்படியே சாப்பிட (தடுப்பு சத்துகள் குறையாமல்) ஏற்றது என்பதால் தக்காளிக்கு இங்கு வோட் டளித்திருக்கிறார்கள்.

உலக அளவிலும் புகழ்பெற்றுள்ள நம் நாட்டு விஞ்ஞானிகளான டாக்டர் அப்துல் கலாம், டாக்டர் எம்.எஸ். சுவாமிநாதன் ஆகியோரும் மாநாட்டில் கலந்து கொண்டு சிறப்பித்தனர். "மனிதர்கள் உட்பட எல்லா உயிரினங்களின் பாதுகாப்பையும் மனத்தில் கொண்டு ஆராய்ச்சிகள் நடத்தப்பட வேண்டும்'' என்றார் சுவாமிநாதன்.

என்றாலும் இந்த ஆராய்ச்சிகளின் விவரங்களை விஞ்ஞானிகள் விளக்கிய போது பிரமிப்பு மற்றும் சந்தோஷத்துக்கு இணையாக, இவை தவறாகப் பயன்படுத்தப்படாமல் இருக்க வேண்டுமே என்ற பயமும் எழுந்தது. ●

— குல்லூ

வட்டமேஜை

'இதுவா ஹிந்து தர்மம்?' தலையங்கம் கனகச்சிதம்! பாரதீய ஜனதா தலைமை உடனடியாகப் படித்துணர்ந்து பாடம் கற்க வேண்டிய அரிய கருத்துப் பெட்டகம்!
மதுரை - 16, ஆர். லட்சுமி.

தலையங்கம் நடுநிலையுடன் எழுதப்பட்டிருந்தது. ஹிந்து மதம், 'சங் பரிவாரங்களால்' வளர்ந்ததை விட, மாற்றுக் குறைந்ததுதான் அதிகம். ஹிந்து மதத்தை கலவரத்தால் வளர்க்க முடியாது என்பது அவர்களுக்குப் புரியவில்லை. தலையங்கத்தை யாராவது மொழிபெயர்த்து வி.எச்.பி. போன்ற அமைப்புகளுக்கு அனுப்பினால் புண்ணியமாகப் போகும்!
திண்டுக்கல், சநாடு பாலசுப்பிரமணி.

இந்த வாரம் வெளியான மூன்று கருத்துப் படங்களில், கடைசிப் படம் உண்மையிலேயே அச்சமூட்டுகிறது! அது, இந்திய அரசியல் எனும் அரவம் பற்றியதல்ல. அது விழுங்கிய எண்ணிக்கைகளோடு, நீதித் துறையும் சேர்ந்து விடுமோ என்ற அச்சம்தான்!
மதுரை - 9, இரா. கல்யாணசுந்தரம்.

கலவரத்தால் மதங்களை வளர்க்க முடியாது

உன்னி கிருஷ்ணனுக்கு தும்புரு அண்ணனின் அன்புக் கடிதம் 'இடிப்பாரை இல்லாத ஏமரா மன்னன்' என்ற குறளை நினைவூட்டியது! தும்புருவை மீண்டும் எப்பொழுது சந்திப்போம் என்ற ஆவலும் நெஞ்சிலெழாமலில்லை!
நெய்வேலி, க. சுந்தர்.

சுப்புடுவுக்கு நிகராக இல்லாமல் போனாலும் 'தும்புரு'வும் தமது பாணியில் இசை விமர்சனம் செய்கிறார் என்பது நிதர்சனமான உண்மை. இப்போதோ 'இடைவேளையாக விடைபெறுகிறேன்' என்று கூறியுள்ளார். தொடரட்டும் உமது கலைச் சேவை. நேரம் கிடைக்கும்போதெல்லாம் அதில் இருக்கின்ற நியாயங்களை உரியவர்கள் ஏற்கிறார்களோ இல்லையோ வாசகர்கள் நாங்கள் ஏற்போம்.
பெங்களூர் - 72, ப. மூர்த்தி.

துராசை சிறுகதை, நீரில் ஏற்படும் நீர்க்குமிழி போல் உடனே மறைந்து தெளிவு பிறக்கச் செய்தது; நிராசை எதிர்காலத்தை யோசிக்காமல் காதல் பேராசையால் ஏற்படும் துயரத்தைக் காட்டியது; ஆசையில், தாய் ஒரு செலவு செய்ய ஆசை, தந்தை ஒரு செலவு செய்ய ஆசை, மகள் ஒரு செலவு செய்ய ஆசை. ஆனால் காலம் தனது ஆசையை மஞ்சள் நீராட்டு விழாவாகச் சொல்லாமல் சொல்லியது மகிழ்ச்சியை ஏற்படுத்தியது!
மூலக்குப்பம், ஆர். தமிழரசி.

திருவையாறில் தியாகராஜருக்கு 'இசை அஞ்சலி' செலுத்துவது எதற்காக! என்ற எனது சந்தேகத்தை இவ்வார 'கல்கி கலெக்ஷனில்' வெளியான "திருவையாறில் உற்சவம்" கட்டுரை தெளிவாக்கி விட்டது!
திருச்சி - 18, அம்மனூர் என். சாம்பமூர்த்தி.

'காதல் கவிதை' படத்தின் விமர்சனம் காதலைப் போன்று ஆழமாகவும் கவிதை போன்று நயமாகவும் இருந்தது.
திருமானூர், ஏ.ஆர். மார்ட்டின்.

இந்தியாவிலே கடம் வாசிக்கும் முதல் (ஒரே!) பெண்மணி சுகன்யா ராம்கோபால் பாராட்டுக்குரியவர். அவர், கடம் வித்வான்களுக்குச் சங்கீதக் கச்சேரியில் பாரபட்சம் காட்டப்படுகிறது என்று சொல்வது சபாக்களின் கவனத்துக்குரியது.
சென்னை - 73, கே. வி. ராமன்.

தன்னலமற்ற தியாகியான ஜெயபிரகாஷ் நாராயணனின் 'மதச்சார்பின்மை' பற்றிய விளக்கம் தற்கால அரசியல்வாதிகளுக்கு நல்ல சவுக்கடி. 'பாரத ரத்னா' பட்டத்தை தியாகிகளுக்குக் கொடுத்து, தங்கள் தவறுகளை மறைத்துக் கொள்ளப் பார்க்கும் அரசுகள் ஜெயபிரகாசர் விரும்பிய மதச்சார்பின்மையை உள்ளன்போடு கடைப்பிடித்தாலே அவரை கௌரவித்தது போலாகும்.
பெங்களூர் - 16, அ. சங்கரன்.

எதை வேண்டுமானாலும் எழுதி முகஸ்துதி மற்றும் அரசியல் பின்னணியில் விற்றுக் காசாக்கிக் கொள்ளும் எழுத்தாளர்கள் மத்தியில் 'விசாரணைக் கமிஷன்' சா. கந்தசாமி வித்தியாசமானவர். உண்மையாக எழுத வேண்டும் என்ற இவரது உணர்வும் உழைப்பும் பாராட்டுக்குரியது.
சென்னை - 49, எஸ். பூபதி.



சூப்பர் கம்ப்யூட்டர்!

# அமெரிக்கா தரத் தயங்கியது இந்தியாவே உருவமைத்தது!

● சொன்னால் நம்ப மாட்டீர்கள். விநாடிக்கு 10,000 கோடி கணக்குகளை அநாயாசமாய்ப் போட்டுத் தள்ளுகிற சூப்பர் கம்ப்யூட்டர் வந்து விட்டது. சுருக்கமாகச் சொன்னால் 10,000 கோடி கம்ப்யூட்டர்கள் செய்கிற வேலையை ஒற்றையாக நின்று செய்து முடிக்கிற அசாத்திய கம்ப்யூட்டர் இது. இதனை இந்தியாவிலேயே முதன் முதலாக தன் கல்லூரியில் கொண்டு வந்துள்ளது கோவை அமிர்தானந்தமயி இன்ஸ்டிடியூட். சாதாரணமாக ஒரு கம்ப்யூட்டரை ஒருவர்தான் இயக்க முடியும். ஆனால் இதனை ஒரே நேரத்தில் 100 பேர் கூட இயக்க முடியும் என்கிறார்கள்.

● இந்தக் கம்ப்யூட்டரை வடிவமைத்த C-DAC (Centre for Development of Advanced Computing) நிறுவனத்திற்கு ஒரு வரலாற்றுப் பின்னணி உண்டு. இத்தகைய சூப்பர் கம்ப்யூட்டர்களை 1984-ல் அமெரிக்கா 'டெவலப்' செய்த போது, இந்தியா தனக்கும் ஒன்று கேட்டது. அதற்குக் காரண காரியம் சொல்லாமல் தாமதம் செய்தது அமெரிக்கா. பின்னாளில் காரண காரியங்கள் தெரிய வந்தபோது, அதிர்ந்தது இந்தியா. இதனை அணுச் சோதனைக்கு நாம் பயன்படுத்தக் கூடும், அணுகுண்டு வரைபடம் (Atomic design) போட்டுக் கொள்வோம் என்றே தாமதப்படுத்தியதாம் அமெரிக்கா. விவரம் அறிந்த அப்போதைய நம் பிரதமர் ராஜீவ் காந்தி, உடனடியாக கம்ப்யூட்டர் டீம் ஒன்றை உருவாக்கினார். சூப்பர் கம்ப்யூட்டிங் சிஸ்டம் ஆராய்ச்சியை இங்கேயே டெவலப் செய்ய விஜய் பி.பட்கர் தலைமையில் புனாவில் ஓர் அமைப்பை ஏற்படுத்தினார். அதுவே C-DAC.

● அமெரிக்கா அமைத்த 'கிரே' (cray) கம்ப்யூட்டரை விட கூடுதல் சக்தியில் முதன் முதலாக C-DAC அமைத்த கம்ப்யூட்டர் மாடல் Param 8000. அதன் பிறகு Param 9000. கடந்த மார்ச், ஏப்ரல் வாக்கில்தான் இப்போதைய Param 10,000 வெளியிடப்பட்டது.

● படத்தில் உள்ள சூப்பர் கம்ப்யூட்டர் ஐந்து கம்ப்யூட்டர்களைக் கொண்டது. ஒரு வேலை கொடுக்கும் பொழுது ஐந்தும் அவற்றைப் பிரித்துக் கொண்டு உடனடியாகச் செய்து பிறகு அவற்றை இணைத்து மொத்தமாக விடை தரும் வகையில் வடிவமைக்கப்பட்டுள்ளது தான் இதில் உள்ள ஸ்பெஷாலிட்டி.

● இந்த 'பரம் 10,000-ல்' ஆயிரம் கம்ப்யூட்டர்களைக் கூட இணைத்துக் கொண்டே போகலாம். நம் தேவைக்கேற்றபடி.. அதனை யார் வேண்டுமானாலும் உபயோகிக்கலாம்.

● இதன் பயன்பாடு என்ன...? லோக்கல் கம்பெனிகள், பெரிய பெரிய வங்கிகள் எல்லோரும் யூஸ் பண்ணலாம்தான். ஆனால் யானைப் பசிக்கு சோளப் பொறிதானாம் அவற்றின் வேலைகள்.

● எல்லாம் சரி, இந்த சூப்பர் கம்ப்யூட்டரை ஒரு சாதாரண இன்ஸ்டிடியூட்டில் கொண்டு வந்து நிறுவக் காரணம் என்ன? "மாணவர்கள் அறிவு வளரணும். எதிர்காலம் சுபிட்சமாக மலரணும் என்பது மட்டுமல்ல. ஆராய்ச்சி தொடர்பான வேலைகள் இல்லேன்னா ஒரு கல்லூரியைக் குறிப்பாக-தொழில் நுட்பக் கல்லூரியை டெவலப் செய்ய முடியாது. மாணவர்கள் எல்லா விஷயத்திலும் அட்வான்ஸாக இருக்கணும் என்பதுதான்" என்கிறார்கள் அமிர்தானந்தமயி இன்ஸ்டிடியூட்டைச் சார்ந்த கம்ப்யூட்டிங் சிஸ்டத்தின் வல்லுனர்கள். ◉

கட்டுரை, படம்: **கேயெஸ்வி**

# புதிய வாழ்க்கைக்குப் புத்தகங்கள்!

ரேடியோவை டீ.வி. அடித்து விட்டது; சினிமா வந்ததால் நாடகத்தை மக்கள் மறந்து விட்டார்கள்; சினிமாத் தொழிலை டீவியும் சாட்டிலைட் சானல்களும் இல்லாமல் செய்து விட்டன என்ற வரிசையில், சாட்டிலைட் சானல்கள் மக்களின் வாசிக்கும் வழக்கத்தை ஒழித்து விட்டன என்பதும் சேர்ந்துள்ளது இது உண்மைதானா?

கிருஷ்ணாபுரம் காலனியில் உள்ள 'விக்கி - வி' நூலகத்தை நடத்தி வரும் சதீஷ், "வாசிக்கும் வழக்கம் ஒழிந்து போய் விடவில்லை... ஒளிந்து கொண்டிருக்கிறது" என்கிறார்.

தெற்குமாசி வீதியிலுள்ள 'அங்குர்' வாடகை நூலகம். அங்குர் என்பதற்கு என்ன பொருள்? என்றதும் சிரித்துக் கொண்டே "புதிய வாழ்க்கை" என்று பொருள் சொன்ன அதன் உரிமையாளர், தொடர்ந்து, "இந்த நூலகத்தை 93-ல் ஆரம்பிச்சப்ப வெறும் பத்து உறுப்பினர்கள் மட்டும் தான் சேர்ந்தாங்க. ஆறு மாதம் வரை



இதே நிலைமைதான். ஆனா நாங்க சோர்ந்து போகலை. காரணம் எங்கள் நோக்கம் பணம் சம்பாதிப்பது மட்டுமே அல்ல. வாசிக்கும் பழக்கத்தை மக்களுக்கு அதிகப்படுத்த வேண்டும் என்பதுதான். பொறுமையாகக் காத்திருந்ததன் பலன், இப்போது எங்கள் நூலகத்தில் அறுநூறு உறுப்பினர்கள் தொடர்ந்து வாசித்து வருகிறார்கள். பெற்றோர்களும் ஆசிரியர்களும் எங்கள் நூலகத்துக்குக் குழந்தைகளையும் கூடவே அழைத்து வருவதால், வாசிக்கும் பழக்கம் வளர்ந்து வருகிறது



• பேராசிரியர் முருகன்

கூட்டம். "எத்தனை சானல்கள் வந்தாலும் மக்களின் படிக்கும் ஆர்வம் குறையவே குறையாது. டீ.வி சானல்களில்



• காமினி தேவி மகேஸ்

என்பதுதான் உண்மை!" என்கிறார்.

சிம்மக்கல் அரசு மைய நூலகத்தில் எப்போதும் 'ஜேஜே' என்று

திரும்பத் திரும்ப சினிமா பாடல்கள், படங்கள், நகைச்சுவை விருந்து அது இது என்று யாருக்குமே உபயோகமில்லாத விஷயங்களே அதிகம் வருகின்றன. ஆனால் புத்தகத்தில் பத்துப் பக்கங்கள் தேவையில்லாத செய்திகள் வந்தால் கூட பிற பக்கங்களில் ஏதாவது ஒரு நல்ல விஷயம் கண்களில் பட்டுவிடும். நான் தொடர்ந்து சிம்மக்கல் மைய நூலகம் வருகிறேன். எங்கள் வீட்டிலும் டி.வி. இருக்கிறது. எல்லா சாட்டிலைட் கனெக்ஷனும் இருக்கிறது. ஆனாலும் புத்தகங்களோடு எனக்குள்ள கனெக்ஷன் இன்னும் போய் விடவில்லை" என்கிறார் தனியார் கடையில் வேலை பார்க்கும் சக்திவேல்.

"அடுத்த அடியை 21ம் நூற்றாண்டில் எடுத்து வைக்கப் போகும் நமக்குக் கல்வியின் முக்கியத்துவமும், படிப்பினால் உண்டாகும் நன்மைகளும் நன்றாகவே தெரியும். அந்த வகையில் கல்விக் கூடங்களுக்கு அடுத்த படியாக நல்ல விஷயங்களை நமக்கு அதிகம் தருவது நூலகங்கள்தான். தினமும் மாலை ஆறு மணி ஆகி விட்டால் இன்று எந்தப் புத்தகம் எடுக்கலாம் என்ற ஆர்வத்தோடு என் குழந்தைகளையும் அழைத்துக் கொண்டு கட்டாயம் போய் விடுவேன்" என்கிறார் தமிழ்நாடு மெர்க்கன்டைல் வங்கியில் பணிபுரியும் காமினி தேவி மகேஷ்.

"சாட்டிலைட் சானல்களின் அசுரத்தனமான வளர்ச்சியால் ஒருவரும் படிக்கவில்லை என்பது உண்மைதானா?" என்று மதுரை பல்கலைக்கழக நூலகம் மற்றும் தகவலியல் துறை துணைத் தலைவர் பேராசிரியர் ஏ. முருகனிடம் கேட்டபோது, கோபமான பார்வை பார்த்து, "யார் சொன்னது ஒருவரும் படிக்க வில்லையென்று?" என்ற கேள்வியோடு தொடர்ந்தார்.

"மனிதனின் அடிப்படை உரிமைகளுள் தகவலும் ஒன்று என்பது தெரியும். சுதந்தர இந்தியாவில் முதன் முதலாகப் பொது நூலகம் அமைக்கப்படுவதற்கான சட்டத்தை இயற்றிய மாநிலம் தமிழகம்தான். தஞ்சையைச் சேர்ந்த நூலக மேதை டாக்டர் ரங்கநாதன் தான் இந்தப் பெருமைக்குக் காரணமானவர். வாசிக்கும் பழக்கம் வளர்ந்திருக்கிற காரணத்தால்தான் சென்ற பொதுத் தேர்தலில் ஆட்சி மாற்றமே ஏற்பட்டது!

"குழந்தைகளைப் பொருட்காட்சி, மிருகக் காட்சி, அந்தக் காட்சி இந்தக் காட்சி என்று அழைத்து செல்வதைப் போல நூலகங்களுக்கும் அடிக்கடி அழைத்துச் சென்றால் படிக்கும் பழக்கம் நிச்சயம் வளரும். இன்று படிப்பவனே நாளைய வழிகாட்டி! Read Today Lead Tomorrow என்ற வாசகம் மலேசிய தபால்தலை ஒன்றில் அச்சிடப்பட்டிருந்தது. அது நூற்றுக்கு நூறு உண்மை" என்று முடித்தார் பேராசிரியர் முருகன்.

— 'கிரண் நியூஸ்' பழ. சேதுராமன்

# உன் நினைவுகள்



- பூக்களைச் செடிகளோடு
  ரசிக்கும் உன்னை
  எனக்குத் தெரியும்.
- மழை பிடிக்கும்
  என்பதால் நீ
  குடை கொண்டு
  வருவதில்லை.
- உன்னைப் போலவே
  நீ வரும் நேரங்கள்
  மிகவும் அழகானவை:
  பகல் பூக்கும்
  அதிகாலைகள்
  வானம் சிவக்கும்
  அந்திப் பொழுதுகள்.
- பூக்காமலே
  மணக்கின்றன
  உன் சூடிதார்
  மொட்டுக்கள்
- மறக்க முடியவில்லை
  உன் மூக்குச் சரிவும்
  ஊசி முனை
  மச்சமும்
  சங்கீதம் கற்ற
  உன் கால் கொலுசுகளும்
- ஏனோ தெரியவில்லை
  என்னைப் பார்க்கும்
  பொழுது மட்டும்
  உதட்டுக்குள் புன்னகையை
  ஒளித்துக் கொள்கிறாய்.
- இப்பொழுதெல்லாம்
  நீ வருவதில்லை
  ஆனாலும் மனசுக்குள்
  விழுந்த மழைத்துளியாய்
  உன் நினைவுகள்.

— ரா. மணிராஜன்



# நிலா

சிவராமுக்கு வாய் விட்டுச் சிரிக்கத் தோன்றியது, புரபசர் சொன்னதைக் கேட்டு.

'நீ கேட்காமலேயே சொல்கிறேன். உன் தங்கைக்கு...'

ஒவ்வொரு மனிதனுக்கும் தான் மற்றவனை விட ஏதோ ஒரு வகையில் பெரியவன் என்று நிரூபிக்கத் துடிக்கிற மனோபாவம் உண்டு.

புரபசருக்கும் இருக்கிறது. அவரும் இதற்கு விதிவிலக்கல்ல. தங்கை. இனிமேல் பிறந்து வரவேண்டும்.

'புரபசர்... உங்களைப் பார்த்து அனுதாபப்படுகிறேன்.'

அந்த வினாடியே மறந்தும் போனான்.

**வே**லை வேகமாய் நடக்க ஆரம்பித்து விட்டது. மனைபூஜை போடப்பட்டு புதுக் கட்டடம் உருவாகும் அஸ்திவாரம் நிர்மாணிக்கப்பட்டது.

கம்பெனி வேலை ஒரு மாதிரி உற்சாகம் எனில், இந்த மாதிரி ஃபீல்டு வொர்க்கிலும் புது சந்தோஷம் புரிந்தது.

தொழிலாளர்கள் ஒவ்வொருவருடனும் தனிப்பட பழக முடிந்தது. அத்தனை நபர்களை தனது நேரடிக் கண்காணிப்பில் வைத்திருந்த போதும் கூடவே சலுகைகளும் வழங்கியிருந்தான். உரிமையாய் எந்த நிமிடமும் அவர்கள் அவனை அணுக முடிந்தது.

வேதாசலத்திடம் கூட இத்தனை ஒட்டுதலை அவர்கள் உணரவில்லை.

'தம்பி வரலியா....' என்று உரிமையாய்க் கேட்டார்கள்.

"தம்பிகிட்டே ஆளுங்க காட்டற பாசம் எனக்குப் புதுசு. எத்தினியோ இடங்களில் வேலை பார்த்திருக்கேன். இது புதுசுங்க. ஆனா சந்தோஷமா இருக்குதுங்க' என்றார் மேஸ்திரி நிறைவாய்.

சுமுகமாய் ஓடிய நாட்களில் முதல்

நெருடல் வேலு வந்தபோது ஏற்பட்டது. மீண்டும் வேலு.

குனிந்து வவுச்சர்களை சரி பார்த்துக் கொண்டிருந்தவன் எதிரே மேஸ்திரிதான் நிற்கிறார் என்ற நினைப்பில் சொன்னான்.

"ம்... சொல்லுங்க."

"என்னை மன்னிச்சுருங்க. தம்பி..."

மேஸ்திரியின் குரல் இல்லையே என்று நிமிர்ந்தவன் வேலுவைப் பார்த்ததும் திடுக்கிட்டான்.

எத்தனை நாள் தாடி, மீசை. கண்கள் இடுங்கி பிரேதக் களையுடன்.

"வேலு..." என்றான் அவனையும் மீறி.

"தம்பி" என்றான் அழாத குறையாய்.

சிவராமின் முகம் சட்டென்று இறுகி விட்டது.

"என்ன?" என்றான் அதட்டலாய்.

# வட்டம்

## ரிஷபன் 6

"தம்பி.. எனக்கு ஏதாச்சும் வேலை..."

"ஏன்.. குடிக்கப் பணம் கிடைக்கலியா?"

"மன்னிச்சு..."

"ப்ச். இங்கே பாரு... (நெற்றியைக் காட்டி) ஏதாச்சும் எழுதி ஒட்டியிருக்கா. இவ்விடம் தொடர்ந்து ஏமாறப்படும்னு..."

சிவராமின் குரல் மேலும் மேலும் இறுகிக் கொண்டே போனது வேலுவுக்குப் புரிந்திருக்க வேண்டும். இனி என்ன கெஞ்சினாலும் தன் பேச்சு எடுபடாது என்று உணர்ந்து விட்டான்.

"தம்பி. எனக்கு வேலை வேணாம். ஆனா கடைசி கடைசியா ஒரே ஒரு உதவி செய்வீங்களா..."

"என்ன செய்யணும்."

"தயவு செஞ்சு எனக்காவ அரை மணி ஒதுக்கணும். நான் சொல்றதைக் கேட்கணும். அதன் பிறகு என் நிழலைக் கூட நீங்க பார்க்க மாட்டீங்க. சத்தியமா."

வேலுவிடம் அசாதாரண திடம் தெரிந்தது.

சிவராம் இதற்கெல்லாம் மசிந்து விடக் கூடாது என்று தீர்மானித்தவன் போலப் பேசினான்.

"எனக்கு இப்ப நேரமில்லே."

"இப்ப வேணாம். இன்னைக்கு? நாளைக்கு? ஆனா கொஞ்சம் சீக்கிரமா. ரொம்ப நாளைத் தள்ளிப் போடாமே..."

குரலில் கெஞ்சல் தெரியவும் சிவராமிடம் பரிவு வந்து விட்டது.

"பார்க்கலாம்."

"அது போதும் தம்பி."

கை கூப்பினான். போய்விட்டான்.

சாப்பிட பணம் எதுவும் கொடுத்திருக்கலாமோ என்று நினைத்தான். ஹூம். மறுபடியும் குடிக்கத்தான் போவான்.

அவர் வேதாசலத்தின் தூரத்து உறவினர்தான். பெயர் சண்முகசுந்தரம். அவ்வளவாய் இப்போது இரு குடும்பங்களிடையே போக்குவரத்து இல்லை. ஆனால் வீடு தேடி வந்து அழைத்து விட்டுப் போனதால் மறுக்க இயலவில்லை.

வேதாசலமும் வற்புறுத்தினார்.

"போயேன். என்னால முடியாது. எது சாப்பிட்டாலும் பிரச்னை. நீ வருவேன்னு சொல்லிட்டேன்."

தட்ட முடியவில்லை. பெண்ணுக்கு நிச்சயதார்த்தம் செய்கிறார். பாதிக் கல்யாணம் போல அமைப்பு.

போனான். 'வேதாசலம் மகனா' என்று சூழ்ந்து கொண்டார்கள். தனிப்பட உபசரித்தார்கள். நடுநாயகமாய் அமர்த்தினார்கள்.

சாப்பாடு கூட முதல் வரிசையில் முக்கிய இடமாய் பரிமாறப்பட்டது.

கை கழுவ வந்தபோது வேலுவைப் பார்த்தான். சாம்பார் வாளியுடன் நின்றவன் சிவராமைப் பார்த்து மரியாதைக்காக சிரிப்பதா அல்லது சிரித்தால் அவமரியாதை ஆகிவிடுமா என்று குழம்பியது புரிந்தது.

"என்ன வேலு?" என்றான் தானாகவே.

சிரித்தான் பணிவுடன். எங்கிருந்தோ ஒரு சிறுமி ஓடி வந்தாள். ஏழெட்டு வயதிருக்கலாம்.

"மாமா, உன்னை அம்மா கூப்பிட்டாங்க..."

"இதோ வரேன் தனம். நீ போ..."

கிழிசல் பாவாடைதான். செம்பட்டை முடிதான். ஆனாலும் ஒரு துறுதுறுப்பு. ஓடிப் போனாள்.

"வரேங்க."

வேலுவும் போய்விட்டான்.

என்னவோ பேச வேண்டும் என்று சொன்னானே! சரி. இன்னொரு தடவை பார்த்தால் கேட்டுக் கொள்ளலாம்.

சிவராமே மிக மரியாதையாக வழியனுப்பி வைத்தார்கள்.

இன்று மேஸ்திரியே பார்த்துக் கொள்வதாகச் சொல்லி விட்டார்.

"வேணாம் தம்பி. நீங்க அலைய வேணாம். எங்கியோ விருந்துக்கு வேற போவணுங்கிறீங்க. நாளைக்கு வாங்க. போதும்."

சிவராமுக்கும் ஏனோ ஒரு அயர்வு.




சீக்கிரமாகவே ஃப்ளாட்டிற்குத் திரும்பி விட்டான். காம்பவுண்டிற்குள் நுழைந்ததுமே ஸ்வேதாவின் நினைப்பு பீரிட்டது.

உள்ளுக்குள் அமுந்திக் கிடந்த உணர்வுதான். இதர வேலைகளினால் மறந்து போன மாதிரி ஒரு பிரமை. உண்மையில் மறக்கவேயில்லை என்பது திமிறிக் கொண்டு வெளிப்பட்டதில் புரிந்தது.

பெருமூச்சுடன் ஃப்ளாட்டிற்குள் கதவைத் திறந்து கொண்டு போனான்.

டி.வி உயிர் பெற்றது. ஏதோ நிகழ்ச்சியின் ஒலி-ஒளி. பூட்டிக் கிடந்ததில் காற்றோட்டமின்றி இறுக்கம் பரவியிருந்தது. ஜன்னல் கதவுகளைத் திறந்து மின்விசிறியை வேகமாய்ச் சுழல விட்டான்.

"தம்பி."

தூக்கிவாரிப் போட்டது. திரும்பிப் பார்த்தால் வேலுதான். அசட்டுச் சிரிப்புடன் நின்றிருந்தான்.

"நாளைக்கிப் பேசலாமா?"

சிவராம் அவனைப் போகச் சொல்லி விடலாம் என்ற உத்தேசத்தில்தான் இருந்தான்.

மணி எட்டு கூட ஆகவில்லை. இவ்வளவு சீக்கிரமாய் உறக்கம் வராது.

"உட்கார்" என்றான்.

ஹாலில் சுவரை ஒட்டி வேலு அமர்ந்து கொண்டான்.

"சாப்பிட்டாயா?"

"ஆச்சுங்க. அவங்க வீட்டுல வேலை செஞ்சதால, சாப்பாட்டுக் கவலை இன்னிக்கு இல்லே..."

"இதோ பார். நீ சொல்லப் போவது எதுவானாலும் சரி. சீக்கிரமாக, சுருக்கமாகச் சொல்."

வேலு இதை எதிர்பார்த்தவன் போலவே சங்கடப்படவில்லை.

"கூடுமானவரை சுருக்கிச் சொல்றேன் தம்பி. எங்கப்பா, அம்மா சின்ன வயசுலயே தவறிட்டாங்க. என்னோட அக்கா, நானு ரெண்டே பேருதான். அக்காவுக்குத் தையல் வேலை தெரியுங்க. அதனால ஒரு நாளைக்கு ஒரு வேளையாச்சும் சோறு தின்னோம்."

சிவராம் 'இந்தக் கதை எனக்கு எதற்கு' என்பது போலப் பார்த்தான்.

"தம்பி, எங்க நிலைமை இப்ப உங்களுக்கு நல்லாப் புரிஞ்சிருக்கும். இந்தச் சமயத்துல, ஒரு வசதி வந்திச்சன்னா எங்களால அதை மறுக்க முடியுமா? அதனாலதான் தப்பா, சரியான்னு யோசனை பண்ணக் கூட தென்பில்லாமல் ஒத்துக்கிட்டோம்."

"என்ன வசதி?" என்று சிவராம் கேட்பான் என்று எதிர்பார்த்தானோ என்னமோ, வேலு சிவராமை ஆர்வமாய்ப் பார்த்தான்.

ஊஹூம். சிவராமிடம் துளிக்கூட அசைவில்லை.

வேலு அவனாகவே தொடர்ந்தான்.

"எங்க நிலைமைல மாப்பிள்ளை பார்த்து நல்லபடியா கட்டித் தரணும்னு எதிர்பார்க்கிறது சிரமங்கிறதால, அவரு வந்து எங்க அக்காவை... வச்சுக்கிறேன்னு சொன்னப்ப, தப்பாப் படலீங்க."

வேலு இந்த இடத்தில் மட்டும் தயங்கிப் பேசினான்.

"பெரிய மனுசங்க வாழ்க்கையில இது

எல்லாம் சகஜமுங்க. ஊருல இது ஒண்ணும் அதிசயம் இல்லியே! அவரு மேல எந்தக் குறையும் சொல்ல முடியாதுங்க. நல்லாவே வச்சுக்கிட்டார். ரொம்ப நாள் கழிச்சு நாங்க நல்லா உடுத்தி நல்லா சாப்பிட்டோம். எந்தப் பாவி கண்ணு பட்டுதோ, நிலைக்கலிங்க."

"எப்படி நிலைக்கும்" என்று சிவராம் நினைத்துக் கொண்டான். இன்னொரு குடும்பத்தினரின் சாபம் துரத்தாதோ.

"எங்க அக்கா தவறிட்டா. ஒரு குழந்தையை விட்டுட்டு. அப்புறம் அந்தப் பெரிய மனுஷரும் மனசு மாறிட்டாரு. நீ எப்படியோ வளர்த்துக்கன்னு என் பொறுப்புல விட்டுட்டாரு. என்னால இந்தச் சரிவை திடீர்னு ஏத்துக்க முடியலிங்க. கிடைச்ச அதிர்ஷ்டம் கை நழுவிப் போனதும் அந்த அதிர்ச்சியில் குடிக்க ஆரம்பிச்சுட்டேன்."

வேலு உணர்ச்சியற்ற குரலில் பேசிக் கொண்டே போனான்.

"ஆனா, புத்தியா ஒரு காரியம் மட்டும் செஞ்சுட்டேனுங்க. அந்தப் பொண்ணைப் போன வருஷம் ஒருத்தர் வீட்டுல வேலைக்கு விட்டுட்டேனுங்க. வூட்டைக் கூட்டி.... பாத்திரம் கழுவும். சின்ன வயசுல நல்ல பொறுப்புங்க. அதான் பார்த்தீங்களே.... அந்தப் பொண்ணுதான் தனம். தனலட்சுமி."

அம்மாவின் பெயர். சிவராமுக்கு சிலிர்த்தது. என் அம்மாவின் பெயர்.

"எங்க அக்கா இருந்தப்ப பிடிவாதமா இந்தப் பெயரை வச்சதுங்க. எனக்குக் கூட ஆச்சர்யம்தான். ஏன் இந்தப் பெயரை வைக்கணும்னு. மவராசி! யாருமே பங்கு போடாத சொத்தை என்னோட பங்கு போட்டுக்கிட்ட புண்ணியவதி. அவ பேரை வச்சாத்தான் நிம்மதின்னா."

சிவராம் வெறித்தான். 'என்ன சொல்ல வருகிறான்.'

"அந்தப் பெரிய மனுசரோட மொத சம்சாரம் பேரு தனலட்சுமியாம்."

"யாரு அவரு?"

சிவராம் தன்னிலை மறந்து எழுந்து வந்து வேலுவைப் பற்றி உலுக்கினான்.

"வேதாசலம். உங்க அப்பாருதான் தம்பி. தனம் உங்க தங்கச்சி."

புரபசரின் கேலிச் சிரிப்பு மீண்டும் மனசுக்குள் எதிரொலித்தது.

வேலு புயலைக் கிளப்பி விட்டுப் போய் விட்டான்.

'தம்பி. நான் ரொம்ப நாள் இருக்க மாட்டேன். குடலை அரிச்சுடுச்சு. என் கவலை எல்லாம் சின்னப் பெண்ணைத் தனியா விட்டுட்டுப் போறேனேன்னுதான். பெண் பிறவியாப் போச்சுங்க. எங்க தலையெழுத்து. நாங்க அனுபவிச்சோம். இதுவாச்சும் நல்லா யிருக்கணும். நீங்க மனசு வச்சா... தனத்துக்கு நல்ல வாழ்வு கிடைக்கும். கட்டாயப்படுத்தறேன்னு மட்டும் நினைச்சுராதீங்க தம்பி. பிச்சையாக் கேட்கறேன்.'

'வருகிறேன்' என்று கூட சொல்லவில்லை. போய்விட்டான்.

சிவராமுக்கு அன்றைய உறக்கம் பறி போனது.




ராஜப்பா அவனைப் பார்த்து மிரண்டு போனார்.

"என்ன சிவா. பேயறைஞ்ச மாதிரி இருக்கே. ஆர் யூர் நாட் வெல்?"

"சோகையாய்ச் சிரித்தான்.

"இன்னிக்கு உன் ஸ்கூட்டரை வெளியே பார்க்கவும் ஆச்சர்யமா இருந்திச்சு. இன்னுமா கிளம்பிப் போகலேன்னு வந்தேன்."

அருகில் வந்து நெற்றியைத் தொட்டார்.

"என்னது! நெருப்பாக் கொதிக்குது..."

சிவராமிடம் பதில் இல்லை.

"வா. டாக்டரிடம் போகலாம்."

"ஊஹூம்."

"என்ன. அசட்டுத்தனமாய்ப் பிடிவாதம்? வா என்னோடு."

ராஜப்பா வற்புறுத்தி அழைத்துப் போனார்.

நூற்றியிரண்டு டிகிரி. மூன்று நாட்களுக்கு மருந்துகள். மேஸ்திரிக்கு ராஜப்பாதான் தகவல் சொன்னார். வேதாசலத்திற்கும்.

# சென்னை மாநகராட்சிக்கு ஜே!

வெளியூர்களிலிருந்து சென்னைக்கு வருகிறவர்களெல்லாம் தாம்பரம் வந்தவுடனேயே, சென்னை மாநகராட்சி தங்களை அன்புடன் வரவேற்குமோ இல்லையோ என்று தவியாய்த் தவிக்க ஆரம்பித்து விடுகிறார்கள். விளைவு? மாநகராட்சி எல்லையில் அப்படியொரு



வரவேற்பு வளைவு இருக்கிறதா இருக்கிறதா என்று கண்களில் விளக்கெண்ணெய்யை விட்டுக் கொண்டு பார்க்கத் தொடங்கி விடுகிறார்கள். 'சென்னை மாநகராட்சி அன்புடன் வரவேற்கிறது' என்கிற வளைவை, மாநகர எல்லையான கிண்டியில் பார்த்த பிறகுதான் அவர்களுக்கு ஒரு நிம்மதி!

இப்படிப்பட்டதொரு மகத்தான நிம்மதியைத் தருகிற அந்த வரவேற்பு வளைவை, சாலையோரங்களில் இருக்கிற பச்சைப்பசேல் மரங்களின் கிளைகள் மறைத்து விட்டால் வெளியூர்க்காரர்களின் கதி என்னதான் ஆவது? அந்த ஏமாற்றத்தில் நேராக வங்கக் கடலில் போய் மூழ்கிவிட மாட்டார்களா?

இம்மாதிரியெல்லாம் எதுவும் எசகுபிசகாக நடந்து விடக்கூடாது என்பதற்காகத்தான், வரவேற்பு வளைவை மறைக்காத ஏராள மரங்களின் கிளைகளைக் கூட வெட்டித் தள்ளியிருக்கிறது மாநகராட்சி!

மங்களையே வெட்டித் தள்ளாமல் கிளைகளை மட்டுமே வெட்டிய மாநகராட்சிக்கு ஜே!

— இளங்கோவன்

உடனே வந்து விட்டார்.

"அங்கே வந்துரு. வா."

சிவராம் மென்மையாய் மறுத்து விட்டான்.

"வேணாம்."

வேதாசலம் ராஜப்பாவை சங்கடமாகப் பார்த்தார். பிறகு எதுவும் பேசாமல் போய் விட்டார்.

"எங்க வீட்டுலேர்ந்து ரசம் சாதமாக் கரைச்சு கொண்டு வரேன்" என்றார் ராஜப்பா.

மருமகளின் முகம் நினைவில் வந்தது. பாவம். கிழவர் சிரமப் படுவார்.

"வேணாம் ஸார். எனக்குப் பிடிக்கலே. ப்ரெட் போதும். ஹார்லிக்ஸ் இருக்கு."

ஸ்டவ் வைத்திருந்தான். பிளாஸ்க்கில் வென்னீர் ஊற்றி வைத்தார். பிரெட் வாங்கிக் கொண்டு வந்து கொடுத்தார்.

பக்கத்திலேயே இருந்தார்.

ஸ்வேதாவுக்காக வாங்கிய தெர்மா மீட்டர் இன்று அவனுக்கே பயன்பட்டது.

"நறையவே இல்லையே..." என்றார் கவலையுடன்.

டைபாய்டு மாதிரி இருக்குமோ.

சிவராம் படுத்தே கிடந்தான். எழுந்திருக்க முடிந்தால்தானே.

விளையாட்டுப் போல ஒரு வாரம் ஓடி போது. ஒரு வார தாடி. தளர்ந்த உடம்பு. கறுத்துப் போன முகம். ஜுரம் ஒரு வழியாய் விட்டபோது, சிவராம் அரை உடம்பாகிப் போயிருந்தான்.

முதல் நாள் அவன் மறுத்தபோது பேசாமல் விட்ட ராஜப்பா, அடுத்த நாளிலிருந்து கஞ்சி, ரசம் சாதம் என்று அமர்க்களப்படுத்தி விட்டார்.

"பாவம்... என்னால உங்களுக்குத்தான் சிரமம்" என்றான். அவரது மருமகளை மனத்தில் நினைத்துக் கொண்டு.

"அதுதான் இல்லை" என்றார் உற்சாகமாய்.

"யாராக்கும் என்று நினைத்தாய்! உன்னைக் கவனிக்க உதவி செய்தது... ஸ்வேதா!" என்றார்.

(தொடரும்)

# பொன்னியின் செல்வன்

நாற்பத்து ஐந்தாம் அத்தியாயம்

## சிறைக்கப்பல்

கண் மூடிக் கண் திறக்கும் நேரத்தில் 'யானை இறவு' என்னும் கடல் துறை பின்னுக்குச் சென்றது. பின்னர் கானகத்து மரங்கள் பின்னோக்கி ஓடின. வானத்துப் பறவைகள் பின்னோக்கிப் பறந்தன. ஓடைகள், குளங்கள், ஊர்ப்புறங்கள், கோயில்கள் மண்டபங்கள் எல்லாம் பின்னோக்கிப் பாய்ந்து மறைந்தன. மான் கூட்டம் ஒன்று அந்த யானையுடன் சிறிது தூரம் போட்டியிட்டு ஓடப் பார்த்தது. மான்களும் தோல்வியடைந்து பின் தங்கின. யானை மட்டும் முன்னால் போய்க் கொண்டிருந்தது. எத்தனை தூரம் எத்தனை நேரம் என்றெல்லாம் பூங்குழலிக்கு ஒன்றும் தெரியவில்லை. ஆனால் இன்னமும் ஈழ நாட்டிலேதான் இந்த யானை போய்க் கொண்டிருக்கிறதா என்று மட்டும் பூங்குழலிக்கு வியப்பாயிருந்தது. இத்தனை நேரம் அந்தத் தீவை மூன்று தடவை கடந்து போயிருக்கலாமே, இல்லை, இல்லை! இந்த யானை ஈழ நாட்டைக் கடந்து செல்லவில்லை. பூலோகத்தின் தென் முனையிலிருந்து வட முனைக்குப் போய்க்கொண்டிருக்கிறது! இதன் முதுகில் ஏறிக்கொண்டு நானும் பூமியைப் பிரதட்சணம் செய்கிறேன். நான் மட்டுமா? இளவரசருந்தான்!

முதலில் யானை மதம் பிடித்து ஓடத் தொடங்கியதும், பூங்குழலிக்குக் கொஞ்சம் பயமாய்த்தானிருந்தது. பயத்துடன், என்ன




கல்கி கலெக்ஷன்

அமரர் கல்கி

நிகழ்கின்றது என்று தெரியாத தயக்கமும் இருந்தது. இரண்டு மூன்று தடவை இளவரசர் அவளைத் திரும்பிப் பார்த்துப் புன்னகை புரிந்தார். பின்னர் அவளுடைய பயமும் தயக்கமும் மறைந்தன. எல்லையற்ற உற்சாகம் அவளை ஆட்கொண்டது. கொஞ்ச நேரம்வரை இப் பூவுலகில் ஒரு மத்தகஜத்தின் மீது ஏறிச்சென்றாள். திடீரென்று எப்படியோ சொர்க்கத்துக்குப் போய்விட்டாள். சொர்க்கத்தில் தேவேந்திரனுடைய ஐராவதத்தின் பேரில் அவள் வீற்றிருந்தாள். ஐராவதம் வான வீதிகளில் ஊர்வலம் போய்க்கொண்டிருக்கிறது. கற்பக விருட்சங்கள் அவள் மீது சுகந்த மலர்களைப் பொழிந்தன. கந்தர்வர்கள் இன்னிசைக் கருவிகளிலிருந்து இனிய சுவரங்களை எழுப்பிக் கொண்டு அவள் பின்னோடு பறந்து வந்தார்கள். அப்ஸர ஸ்திரீகள் நடனமாடிக் கொண்டு வந்தார்கள். ஊர்வலம் சென்ற வானவீதியின் இரு புறமும் நட்சத்திர தீபங்கள் சுடர்விட்டு ஜகஜ்ஜோதியாகப் பிரகாசித்தன! இப்படிப் பல பல யுகங்கள் சென்றன!

இதோ, ஐராவதத்தின் வேகம் குறைகிறது. திடீரென்று அது பூலோகத்துக்கு வந்துவிட்டது. ஈழ நாட்டின் காடுகளுக்கே வந்துவிட்டது. யானைப்பாகன் குனிந்து அதன் மத்தகத்தைத் தட்டிக் கொடுக்கிறான். அதன் காதண்டை ஏதோ சொல்கிறான். சேச்சே! அவன் யானைப்பாகன் அல்ல; தேவேந்திரன் அல்லவா? இல்லை; இளவரசர் அல்லவா இவர்?

நாலுபுறமும் மரங்கள் சூழ்ந்த ஒரு குளத்தின் கரையிலே வந்து யானை அமைதியாக நின்றது.

பூங்குழலி சிறிது கவலையுடன், இளவரசரை வரவேற்று உபசரிப்பதற்காக ஜனக்கூட்டம் வந்து அக்கரையில் நிற்கிறதோ என்று பார்த்தாள். இல்லை! பின்னால் குதிரைகள் தொடர்ந்து வருகின்றனவோ என்று பார்த்தாள். அதுவும் இல்லை! குளத்தைப் பார்த்தாள். அதில் பூத்திருந்த அல்லி மலர்களும் செங்கழுநீர்ப் பூக்களும் அப்படி அப்படியே கொடிகளுடன் பிய்த்துக் கொண்டு வந்தன. அவளை நாலுபுறமும் சூழ்ந்து கொண்டன. கன்னங்களிலும் தோள்களிலும் உடம்பு முழுவதும் அந்த மலர்கள் அவளைத் தழுவிக்கொண்டு மகிழ்ந்தன. பின்னர் அப்பொல்லாத மலர்களின் கொடிகள் அவளை இறுக்கிப் பிடித்து அமுக்கி மூச்சுத் திணறச் செய்தன. உடம்பை ஒரு குலுக்குக் குலுக்கி அப்பூங்கொடிகளின் பிடியிலிருந்து அவள் திமிறினாள். அப்படித் திமிறிய உடனே வானுலகிலிருந்து பூமிக்குத் தலைகீழாய் வந்தது போலிருந்தது. யானை தன் பெரிய முன்னங்கால்களை மடித்துக் குனிந்தது. பிறகு பின்னங்கால்களையும் மடித்துக்கொண்டு தரையில் படுத்தது. இளவரசர் யானையின் கழுத்திலிருந்து கீழே குதித்தார். "பூங்குழலி! யானை மேலிருந்து இறங்குவதற்கு மனம் இல்லையா?" என்றார்.

பூங்குழலி உடம்பைச் சிலிர்த்துக் கொண்டு தன் நினைவை அடைந்தாள். "ஐயா! சொர்க்கத்திலிருந்து பூமிக்கு வருவது கஷ்டந்தானே?" என்று முணு முணுத்துக் கொண்டு இறங்கினாள்.

யானை மீண்டும் எழுந்து குளக்கரையிலிருந்த ஒரு பெரிய மரத்தின் கிளையை ஒடித்துத் தன் அகண்ட வாய்க்குள்ளே திணித்துக்கொண்டது.

அருள்மொழிவர்மர் குளத்தின் கரையோரமாகச் சென்று உட்கார்ந்தார். தயங்கி நின்ற பூங்குழலியையும் அருகில் வந்து உட்காரச் சொன்னார்.

தெளிந்த நீரில் பூங்குழலியின் முகம் பிரதிபலித்தது. யானையின் ஓட்டத்தினாலும் அச்சமயம் நேர்ந்த உள்ளக் கிளர்ச்சியினாலும் அவள் முகம் செக்கச் செவேலென்று ஆகிச் செங்கழு நீர்ப்பூவுடன் போட்டியிட்டது.

நீரில் தெரிந்த அவள் முகத்தைப் பார்த்த வண்ணம் இளவரசர் "சமுத்திர குமாரி! உன்னை எனக்கு ரொம்பப் பிடித்திருக்கிறது!" என்றார்.

அல்லி மலர்களும் செங்கழுநீர்ப் பூக்களும் மீண்டும் இடம் பெயர்ந்து வந்து பூங்குழலியின் உடல் முழுதும் முத்தமிட்

டன!

"உன்னை ஏன் எனக்குப் பிடித்திருக்கிறது தெரியுமா?" என்று இளவரசர் கேட்டார்.

பூங்குழலியின் கண் முன்னால் வானமும் வையமும் குளமும் அதிலுள்ள மலர்களும் குளக்கரையிலிருந்து மரங்களும் சுழன்று சுழன்று வந்தன.

"எனக்குத் தெரிந்த ஒவ்வொருவரும் நான் அவர்கள் இஷ்டம் போல் நடக்க வேண்டும் என்று ஆசைப்படுகிறார்கள். நீ ஒருத்தி மட்டும் என் விருப்பத்தின்படி நடக்கச் சந்தோஷத்துடன் சம்மதித்தாய்! இந்த உதவியை என்றும் மறக்க மாட்டேன், சமுத்திரகுமாரி!"

பூங்குழலியின் உடம்பு ஒரு யாழ் ஆயிற்று. அவளுடைய நரம்புகள் எல்லாம் அந்த யாழின் நரம்புகள் ஆயின. பொன் வண்ண விரல்கள் அந்த நரம்புகளை மீட்டித் தேவகானத்திலும் இனிய இசையை எழுப்பின.

"சேநாதிபதியும் பார்த்திபேந்திரனும் சேர்ந்து என் பிரயாணத்தைத் தடை செய்வதற்குச் சூழ்ச்சி செய்தார்கள்! சேநாதிபதி நாம் வரும் வழியில் பல இடையூறுகளை உண்டு பண்ணினார். நமக்கு முன் அவசரமாக ஆள் அனுப்பிக் கிராமவாசிகளை உபசாரம் நடத்துவதற்கு ஏற்பாடு செய்தார். பார்த்திபேந்திரர் விரைந்து திரிகோணமலைக்குப் போயிருக்கிறார். அங்கிருந்து கப்பல் ஏறி நமக்கு முன்னால் தொண்டைமானாற்றின் முகத்துவாரத்துக்கு வந்து விட வேண்டுமென்பது அவருடைய உத்தேசம். ஆகா! அவர்களுடைய சூழ்ச்சி எனக்குத் தெரியாது என்று நினைத்தார்கள்! உன் உதவியினால் அவர்களுடைய சூழ்ச்சியைத் தோற்கடித்தேன்..."

பூங்குழலிக்குச் சட்டென்று தான் செய்த காரியம் என்னவென்பது நினைவு வந்தது. அவளை நரக லோகத்தில் யமதூதர்கள் உயிரோடு செக்கிலே போட்டு ஆட்டுவது போலிருந்தது.

"ஐயா! அவர்கள் எல்லாரும் தங்களை எதிரிகளிடம் சிறைப்படாமல் தப்புவிக்க முயன்றார்கள். நான் பாவி! தங்களைச் சிறைப்படுத்த அழைத்துப் போகிறேன்!" என்று கூறிவிட்டு விம்மினாள் பூங்குழலி.

"அடேடே! இது என்ன? உன்னைப் பற்றி நான் எவ்வளவோ நல்ல அபிப்பிராயம் கொண்டிருந்தேன். நீயும் அவர்களைப் போல் ஆகிவிட்டாயே!"

"என் சுய புத்தியினால் இந்தப் பாதகத்தை நான் செய்யவில்லை. தங்களுடைய ஆசை வார்த்தையில் மயங்கிப் பைத்தியமாகி விட்டேன். இப்போது புத்தி தெளிந்தது. நான் போகிறேன்..." என்று சொல்லி விட்டுப் பூங்குழலி குதித்து எழுந்தாள்.

அவள் ஓடிப் போகாமல் தடுப்பதற்கு இளவரசர் அவளுடைய கரத்தை இலேசாகத் தொட்டுப் பற்றினார்.

அச் சமயத்தில் தேவலோகத்துக் கன்னிகைகளுக்கு வேறு வேலை இருக்கவில்லை. அவர்கள் வெண்ணிலவின் சாற்றைச் சந்தனக் குழம்புடன் கலந்து பூங்குழலியின் மீது தெளித்தார்கள்.

அவள் முற்றும் சக்தி இழந்து, செயலிழந்து, மீண்டும் கீழே உட்கார்ந்தாள். இரண்டு கரங்களினாலும் முகத்தை மூடிக் கொண்டு விம்மத் தொடங்கினாள்.

"சமுத்திரகுமாரி! உன்னிடம் ஒரு முக்கியமான விஷயம் சொல்ல எண்ணினேன். நீ இப்படி அழுவதாயிருந்தால் சொல்வதற்கில்லை. உடனே புறப்பட வேண்டியதுதான்."

பூங்குழலி கண்ணீரைத் துடைத்துக் கொண்டு அவரை நிமிர்ந்து பார்த்தாள்.

"அதுதான் சரி; கேள்! இவர்கள் எல்லாரும் என்னைச் சிறைப்படாமல் காப்பாற்ற முயல்கிறார்கள் என்று சொன்னாயே? அது உண்மைதான், அது எதற்காகத் தெரியுமா?"

"தங்கள் பேரில் அவர்கள் வைத்திருக்கும் அன்பினால்தான். நான் ஒருத்தி மட்டுந்தான் பாதகி...!"

"பொறு, பொறு! என் பேரில் எல்லாருக்கும் அன்புதான்! எதற்காகத் தெரியுமா? யாரோ ஜோசியர்களும் ரேகை சாஸ்திரிகளும் சொல்லியிருக்கிறார்களாம், - நான் ஒரு காலத்தில் சக்கரவர்த்தி ஆகப்

போகிறேன் என்று. ஆகையால் ஒவ்வொருவரும் என்னைச் சிம்மாசனத்திலே தூக்கி வைத்து என் தலையிலே ஒரு கிரீடத்தையும் சுமத்தி விடப் பார்க்கிறார்கள். பேராசை பிடித்தவர்கள்!"

"ஐயா! அவர்கள் அப்படி ஆசைப் பட்டால் அதில் தவறு என்ன? இந்த லோகத்துக்கு மட்டுந் தானா, மூன்று உல





கத்துக்கும் சக்கர வர்த்தியாகத் தாங்கள் தகுதி வாய்ந்தவர் அல்லவா?"

"ஆகா! நீயும் அவர்களைப் போலத்தான் பேசுகிறாய்! பெண்ணே! இவ்வுலகில் அரண்மனையைப் போன்ற சிறைக்கூடம் வேறில்லை; சிம்மாசனத்தைப் போன்ற பலிபீடமும் இல்லை; கிரீடம் அணிவது போன்ற தண்டனை வேறு கிடையவே கிடையாது. இதையெல்லாம் மற்றவர்களிடம் சொன்னால் ஒப்புக்கொள்ள மாட்டார்கள்; நீயாவது ஒப்புக்கொள்ளுவாய் என்று நினைத்தேன்."

பூங்குழலியின் கண்ணிமைகள் பட்டுப்பூச்சியின் சிறகுகளைப் போல் அடித்துக் கொண்டன. அவள் ஆர்வம் ததும்பிய அகன்ற கண்களினால் அரசிளங்குமாரரை நோக்கினாள்.

"சமுத்திரகுமாரி! உண்மையாகச் சொல்! உன்னை வாழ்நாளெல்லாம் ஒரு சிம்மாசனத்தில் உட்கார்ந்திருக்கும்படி சொன்னால் உட்கார்ந்திருப்பாயா?" என்று இளவரசர் கேட்டார்.

பூங்குழலி சிறிது நேரம் யோசனை

செய்தான். பின்னர், "மாட்டேன்!" என்று தெளிவாகச் சொன்னாள்.

"பார்த்தாயா? பின்னே என்னை மட்டும் அந்தத் தண்டனைக்கு ஏன் உள்ளாக்க விரும்புகிறாய்?"

"தாங்கள் இராஜ குலத்தில் பிறந்தவர் அல்லவா?"

"இராஜ குலத்தில் பிறந்ததினால் என்ன? நல்லவேளையாகக் கடவுள் என்னை அந்தத் தண்டனைக்கு உள்ளாக்க விரும்பவில்லை. இராஜ்யம் ஆளுவதற்கு என் மூத்த சகோதரர் இருக்கிறார்; என் பெரிய பாட்டனாரின் மகன் ஒருவரும் இருக்கிறார். அவரும் இராஜ்யம் ஆள ஆசைப்படுகிறார்..."

"ஆகா! அது தங்கள் காதுக்கும் எட்டி விட்டதா?" என்றாள் பூங்குழலி.

"நல்ல கதை! எனக்குத் தெரியாது என்று நினைத்தாயா, என்ன? ஆகையால் தஞ்சாவூர் சிம்மாசனம் அதன் பேரில் உட்காருவதற்கு ஆள் இல்லாமல் தவிக்கப் போவதில்லை. அத்துடன் எனக்குக் கிரீடம் சுமந்து இராஜ்யம் ஆளும் ஆசையும் இல்லை...!"

"தங்களுக்கு எதிலேதான் ஆசை?" என்று கேட்டாள் பூங்குழலி.

"அப்படிக் கேள், சொல்லுகிறேன்! சற்றுமுன் இந்த மத்தகஜத்தின் மீது உட்கார்ந்து பிரயாணம் செய்தோமே? அம் மாதிரி வனங்கள், வனாந்தரங்கள் எல்லாம் புகுந்து சண்டமாருதம்போல் சுற்றி வருவதில் எனக்கு ஆசை. கப்பல்களில் ஏறிக் கடல்களைக் கடந்து செல்வதில் ஆசை. உயரமான மலைகளின் உச்சிச் சிகரங்களின் மேல் ஏறுவதில் ஆசை. கடல்களுக்கு அப்பால் இந்த இலங்கையைப் போல் எத்தனையோ இலங்கைகளும் பரத கண்டத்தைப் போல் எத்தனையோ பெரிய பெரிய கண்டங்களும் உண்டு என்று கேள்விப் பட்டிருக்கிறேன். அங்கேயெல்லாம் போய் அந்தந்த நாடுகளில் உள்ள அதிசயங்களைப் பார்க்க வேண்டும் என்று ஆசை...!"

இளவரசர் கூறும் மொழிகளை அப்படியே விழுங்குவாள் போல் பூங்குழலி வாயைத் திறந்தபடி கேட்டுக் கொண்டிருந்தாள். ஆர்வம் கட்டுக்கடங்காமல் போகவே, "ஐயா! அங்கேயெல்லாம் போகும்போது என்னையும் அழைத்துப் போவீர்களா?" என்று கேட்டாள்.

"நான் சொன்னவையெல்லாம் என் ஆசைகள். அவை நிறைவேறப் போகின்றன என்று யார் கண்டது?" என்றார் இளவரசர்.

பூங்குழலி கனவு லோகத்திலிருந்து பூலோகத்துக்கு வந்தாள். "ஐயா! அப்படியானால் தாங்கள் எதற்காக இப்போது தஞ்சாவூருக்குப் போக வேண்டும்?" என்றாள்.

"அதைச் சொல்லத்தான் ஆரம்பித்தேன். அதற்குள் நீ பேச்சை மாற்றி எங்கேயோ கொண்டு போய் விட்டாய். சமுத்திரகுமாரி! இந்த இலங்கைத் தீவில் வாய் திறந்து பேசும் சக்தியற்ற ஊமை ஸ்திரீ ஒருத்தி அங்குமிங்கும் சித்தப்பிரமை கொண்டவள் போல் சுற்றிக் கொண்டிருக்கிறாளே? அவளை உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார் இளவரசர் அருள்மொழி வர்மர்.

பூங்குழலி அடங்கா வியப்புடன் "தெரியும். இளவரசே! எதற்காகக் கேட்கிறீர்கள்?"என்றாள்.

"காரணம் பிறகு சொல்லுகிறேன். அந்த ஸ்திரீயை உனக்கு எப்படித் தெரியும்? அவளைப் பற்றி என்ன தெரியும்?" என்று கேட்டார்.

"ஐயா! நான் குழந்தை வயதில் என்னைப் பெற்ற தாயை இழந்தேன். பிறகு எனக்கு அன்னையின் அன்பை அளித்தவள் அந்த மூதாட்டிதான். அவள் என் குரு; என் தெய்வம். அவளைப் பற்றி வேறு என்ன கேட்கிறீர்கள்?"

"அந்த மூதாட்டிக்கு நிரந்தரமான வாசஸ்தலம் ஏதாவது உண்டா? எப்போதும் சுற்றித் திரிந்து கொண்டேயிருப்பவள்தானா?"

"கோடிக்கரையிலிருந்து இலங்கையை நெருங்கி வரும்போது பூதத் தீவு என்று

ஒரு தீவு இருக்கிறது. அதில் ஒரு பாறைக் குகை இருக்கிறது. அங்கேதான் அந்த அம்மாள் பெரும்பாலும் இருப்பாள். அவ்விடத்தில்தான் தங்களை நான் முதன் முதலில் பார்த்தேன்."

"என்னை அங்கே பார்த்தாயா?"

"ஆம்! அந்தப் பாறைக் குகையில் சில அழகான சித்திரங்களை அந்த அம்மாள் எழுதியிருக்கிறாள். அந்தச் சித்திரங்களில் தங்கள் உருவத்தையும் கண்டேன்! பிறகு ஒருநாள் கோடிக்கரையில் தங்களை நேரில் பார்த்தபோது, அதனால்தான் பிரமித்துப் போனேன்."

"ஓ! இப்போது எல்லாம் எனக்குத் தெரிகிறது. விளங்காத விஷயமும் விளங்குகிறது. சமுத்திரகுமாரி! அந்த மூதாட்டிக்கும் எனக்கும் உள்ள உறவைப் பற்றியும் உனக்குத் தெரியுமா?"

"ஏதோ உறவு இருக்க வேண்டும் என்று ஊகித்தேன். ஆனால் இன்ன உறவு என்று தெரியாது!"

"பூங்குழலி! அந்த மூதாட்டி என் பெரிய தாயார். நியாயமாகத் தஞ்சாவூர் சிங்காதனத்தில் வீற்றிருக்க வேண்டிய பெருமாட்டி அவள்..."

"கடவுளே, அப்படியா?"

"ஆனால் விதியின் எழுத்து வேறு விதமாயிருந்தது. யார் என்ன செய்ய முடியும்? என் தந்தையின் உள்ளத்தில் ஏதோ ஓர் இரகசியத் துன்பம் இருந்து வேதனைப் படுத்தி வருகிறது என்று சிலசமயம் எனக்குத் தோன்றுவதுண்டு. அதன் உண்மையை இப்போதுதான் கண்டுபிடித்தேன். என் பெரிய தாயார் இறந்து விட்டதாக என் தந்தை எண்ணிக் கொண்டிருக்கிறார். தம்மால் இறந்து விட்டதாகவும் எண்ணிக் கொண்டிருக்கிறார். அவள் இறக்கவில்லை. உயிரோடிருக்கிறாள் என்பதை அவருக்கு நான் போய்ச் சொல்ல வேண்டும். சொன்னால் அவர் இருதயத்தின் தாபம் தணியும்; அவரை அரித்துக் கொண்டிருக்கும் மன வேதனை தீரும். சக்கரவர்த்தியின் உடல் நிலை சரியாக இல்லை என்றுதான் உனக்குத் தெரிந்திருக்குமே? மனித வாழ்க்கை அநித்தியமானது. எப்போது என்ன நேரிடும் என்று யாரும் சொல்வதற்கில்லை. வானத்தில் சில நாட்களாகத் தூம கேது ஒன்று தோன்றி வருகிறது. அதைப் பற்றி ஜனங்கள் பலவாறு பேசிக் கொள்கிறார்கள். சக்கரவர்த்தியின் மனமும் அதனால் பாதிக்கப்பட்டிருக்கிறது என்று தெரிகிறது. இந்த நிலைமையில், விபரீதமாக எதுவும் நேர்வதற்கு முன்னால், நான் கண்டுபிடித்த விவரத்தை அவருக்குத் தெரிவித்து விட வேண்டும். சமுத்திரகுமாரி! அதற்காகவேதான் நான் அவசரமாகத் தஞ்சைக்குப் போக விரும்புகிறேன். நீ எனக்குச் செய்யும் உதவி எவ்வளவு முக்கியமானது என்று இப்போது தெரிகிறது அல்லவா?"

ஆர்வத்துடன் இளவரசரின் வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டிருந்த பூங்குழலி ஒரு பெருமூச்சு விட்டாள். "கடவுளே! மனித வாழ்க்கையில் ஏன் இத்தனை இன்பத்துடன் துன்பத்தையும் வைத்தாய்?" என்று முணுமுணுத்தாள்.

பிறகு இளவரசரைப் பார்த்து, "ஐயா! இந்தப் பேதையினால் தங்களுக்கு ஏதேனும் உதவி ஏற்பட்டால் அது என் பூர்வ ஜன்ம பாக்கியம். ஆனால் இதற்கு என் உதவி ஏன்? சேநாதிபதி முதலியவர்களிடம் சொல்லியிருந்தால் அவர்கள் தங்களைத் தஞ்சைக்கு அனுப்பியிருக்க மாட்டார்களா?" என்றாள்.

"இல்லை; அவர்கள் யாரிடமும் சொல்ல நான் விரும்பவில்லை. என்னை எப்படியாவது சிம்மாசனம் ஏற்றுவதில் முனைந்திருக்கும் அவர்களுக்கு இது ஒன்றும் முக்கியமாகத் தோன்றாது. என் தந்தையின் அந்தரங்கத்தை அவர்களிடமெல்லாம் சொல்வதற்கும் நான் இஷ்டப்படவில்லை. சொன்னால் அவர்கள் புரிந்து கொண்டிருக்கவும் மாட்டார்கள் உன்னிடம் இன்னோர் உதவியும் கோருகிறேன், சமுத்திரகுமாரி! அதற்காகவே முக்கியமாக இங்கே யானையை நிறுத்தினேன். எனக்குச் சக்கரவர்த்தி பட்டமும் சாம்ராஜ்ய சிம்மாசனமும் அளித்த ஜோசி



யர்கள் என் வாழ்க்கையில் பல அபாயங்கள் - பல கண்டங்கள் - ஏற்படும் என்றும் சொல்லியிருக்கிறார்கள். இந்தப் பிரயா

ணத்தில் அப்படி ஏதாவது எனக்கு நேர்ந்து விட்டால்... என் தந்தையை நான் சந்திக்க முடியாமல் போய் விட்டால்... நீ சக்கரவர்த்தியிடம் போக வேண்டும். எப்படியாவது அவரைச் சந்தித்து என் பெரியம்மை உயிரோடிருக்கிறாள் என்பதை அவரிடம் சொல்ல வேண்டும். அவர் இஷ்டப்பட்டால் அந்த மூதாட்டியை அவரிடம் அழைத்துப் போக வேண்டும். இந்தக் காரியத்தையெல்லாம் செய்வாயா, பூங்குழலி?"



"தங்களுக்கு ஒரு கண்டமும் நேராது; அபாயம் தங்களிடம் நெருங்கப் பயந்து ஓடும். கட்டாயம் பத்திரமாய்த் தஞ்சாவூர் போய்ச் சேர்வீர்கள்..."

"ஒருவேளை எனக்கு ஏதாவது நேர்ந்தால் நான் கோரியபடி செய்வாய் அல்லவா?"

"கட்டாயம் செய்கிறேன், இளவரசே!"

"இந்த முக்கியமான காரியத்தை வேறு யாரிடம் நான் ஒப்புவிக்க முடியும்? நீயே சொல் பார்க்கலாம்."

"என்னிடம் ஒப்புவிக்க வேண்டிய காரியத்தை ஒப்புவித்தாகி விட்டது. இத்துடன் என் உபயோகம் தீர்ந்து விட்டதல்லவா? நான் விடைபெற்றுக் கொள்ளலாமா?" என்றாள் பூங்குழலி. அவளுடைய குரல் கண்ணீரின் ஈர்ப்பசையோடு கலந்து வந்தது.

"ஆகா! அது எப்படி? தொண்டைமானாற்றின் முகத்துவாரத்தை இன்னும் நாம் அடையவில்லையே? சோழ நாட்டுப் போர்க் கப்பல்களை இன்னும் காணவில்லையே? அதற்குள் எப்படி விடைபெற்றுக் கொள்ளலாம்? கோபித்துக் கொள்ளாதே! இன்னும் சிறிது நேரம்

பல்லைக் கடித்துக்கொண்டு என்னுடைய சகவாசத்தைப் பொறுத்துக்கொள். யானை மேல் மறுபடியும் ஏறி இன்னும் கொஞ்ச தூரம் என்னுடன் வா! புலிக் கொடி பறக்கும் கப்பலைத் தூரத்தில் கண்டதும் நீ என்னை விட்டுப் பிரிந்து செல்லலாம்!'' என்றார் இளவரசர்.

மறுமொழி ஒன்றும் சொல்லாமல் பூங்குழலி யானை நின்ற இடத்தை நோக்கி நடந்தாள். இளவரசரும் சென்றார். அவருடைய வார்த்தைக்குப் படிந்து யானை மண்டியிட்டுப் படுத்தது. இருவரும் அதன் முதுகில் ஏறிக் கொண்டார்கள். முன் போல் யானையை இளவரசர் விரட்டவில்லை. ஆயினும் விரைவாகவே நடந்து சென்றது.

''சமுத்திரகுமாரி! எனக்கு மிகவும் பிடித்த சில காரியங்களைப் பற்றிச் சொன்னேனே? உனக்குப் பிடித்தவை என்னவென்று சொல்ல வேண்டாமா?'' என்றார் அருள்மொழிவர்மர்.

''எருமை வாகனத்தின் மீது வரும் யமனை எனக்கு ரொம்பப் பிடிக்கும். நள்ளிரவில் பாறை உச்சியின் மீது நின்று கொண்டு கொள்ளி வாய்ப் பிசாசுகளை நேரம் போவதே தெரியாமல் பார்ப்பதற்கு ரொம்பப் பிடிக்கும்...''

''நல்ல விசித்திரமான குணமுள்ள பெண் நீ!''

''தங்கள் சிநேகிதர் கூறியதுபோல் 'பைத்தியக்காரப் பெண்' என்று சொல்லுங்கள். அதற்காக நான் வருத்தப்பட மாட்டேன். அப்புறம் சிறிய படகில் ஏறி அலை கடலின் நடுவில் போய்க் கொண்டே இருப்பதற்குப் பிடிக்கும். அதிலும் கடலில் சுழற்காற்று' அடித்ததோ, என் உற்சாகம் எல்லை கடந்து விடும். அப்போது படகு ஒரு சமயம் அலை உச்சியில் ஏறி வானுலகத்தை எட்டிப் பிடிக்கும்; மறுகணம் பாதாளத்தில் தடாலென்று விழும். அதைப் போல் எனக்குப் பிடித்த காரியம் வேறொன்றுமில்லை. சற்று முன்னால் இந்த யானை வெறிகொண்டது போல் ஓடி வந்ததே, அப்போதும் எனக்கு அவ்வளவு உற்சாகமாகவே இருந்தது!''

''ஆ! பூங்குழலி! முருகப் பெருமான் உன்னுடைய புன்னகையை நாடி வந்திருந்தால் அடியோடு தோற்றிருப்பார். யானை முகனை அனுப்பிக் குறமகள் வள்ளியைப் பயமுறுத்தினாரே, அந்த யுக்தி ஒன்றும் உன்னிடம் பலித்திராது!'' என்றார் இளவரசர்.

அவர்கள் தொண்டைமான் நதியின் முகத்துவாரத்தை அணுகியபோது ''ஆ! இது என்ன?'' என்று பூங்குழலி கூச்சலிட்டாள்.

''என்ன? என்ன?'' என்று இளவரசர் ஆவலுடன் கேட்டார்.

''புலிக் கொடியுடன் கூடிய மரக்கலங்கள் நான் பார்த்த இடத்தில் இல்லையே! என்னைப் பற்றித் தாங்கள் என்ன நினைப்பீர்கள்? சேநாதிபதி என் மீது சந்தேகப்பட்டதுபோல் தங்களை ஏமாற்றி அழைத்து வந்தவள் ஆகி விட்டேனே!'' என்றாள்.

''அப்படி நான் ஒருநாளும் நினைக்க மாட்டேன், பூங்குழலி! நீ பொய் சொல்லி என்னை வஞ்சித்து அழைத்து வர எவ்வித முகாந்தரமும் இல்லை...''

''ஏன் இல்லை, இளவரசே! காதல் காரணமாக இருக்கலாம் அல்லவா? உலகமெல்லாம் அழகில் மன்மதனையும் வீர பராக்கிரமத்தில் அர்ச்சுனனையும் நிகர்த்தவர் என்று போற்றும் பொன்னியின் செல்வர் மீது மோகங்கொண்டு ஒரு பேதைப் பெண் இம்மாதிரி செய்திருக்கலாம் அல்லவா?''

''பெண்ணே! சேநாதிபதி இங்கே இச்சமயம் இருந்திருந்தால் ஒருவேளை அவ்வாறு சந்தேகப்பட்டிருக்கலாம்.

ஆனால் உன் மனத்திலும் என் மனத்திலும் அத்தகைய பைத்தியக்கார எண்ணங்களுக்கு இடமில்லை."

"ஐயா! பழையாறை அரண்மனையில் வானதி தேவி என்று வீரர் குலத்து இளவரசி ஒருத்தி இருக்கிறாளே, அவளைப் பற்றியும் அப்படித் தாங்கள் சொல்வீர்களா?"

"ஆம், ஆம்! அதை நான் மறந்துவிடவில்லை. இந்தச் சேநாதிபதியும் என் தமக்கையும் சேர்ந்து அந்தப் பெண்ணை என் கழுத்தில் கட்டி விடப் பார்க்கிறார்கள். சோழ குல சிம்மாசனத்தில் அமர வேண்டும் என்ற ஆசையினால் அந்தப் பேதைப் பெண்ணுக்கும் அத்தகைய ஆசை ஒருவேளை இருக்கலாம். அதற்கு நான் பொறுப்பல்ல, பூங்குழலி! அது போகட்டும்! நீ பார்த்தபோது கப்பல்கள் எங்கே இருந்தன?" என்று இளவரசர் கேட்டார்.

"அதோ அந்த முனையில்தான் நின்று கொண்டிருந்தன! எனக்கு மிக நன்றாக நினைவிருக்கிறது!" என்றாள் பூங்குழலி.

"அதனால் என்ன? கொஞ்சம் அப்பால் இப்பால் நகர்ந்து சென்று நிற்கக் கூடும் அல்லவா? எல்லாவற்றுக்கும் கடற்கரை வரையில் போய்ப் பார்த்து விடுவோம்!" என்றார் இளவரசர்.

"கப்பல்கள் போயிருந்தால் நல்லதாய்ப் போயிற்று. இப்பொழுது எதற்காகப் போய்த் தேட வேண்டும்?" என்றாள் பூங்குழலி.

"ஆகா! நீ அப்படி நினைக்கலாம். ஆனால் எனக்கு அதைப் போல் ஏமாற்றம் தருவது வேறொன்றுமில்லை!" என்றார் இளவரசர்.

மூந்நூறு வருஷத்துக்கு முன்னால் இலங்கை இளவரசனாகிய மானவன்மன் காஞ்சிபுரத்தில் வந்து சரண் புகுந்திருந்தான். அவனுக்கு இராஜ்யத்தை மீட்டுத் தருவதற்காக மாமல்ல சக்கரவர்த்தி ஒரு பெரும் படையை அனுப்பினார். அவர் அனுப்பிய படைகள் இந்தப் பிரதேசத்திலே தான் வந்து இறங்கின. அச்சமயம் தொண்டைமான் ஆறு உள்ள இடத்தில் ஒரு சிறிய ஓடைதான் இருந்தது. கப்பல்கள் வந்து நிற்பதற்கும் படைகள் இறங்குவதற்கும் சௌகரியமாவதற்கு அந்த ஓடையை வெட்டி ஆழமாகவும் பெரிதாகவும் ஆக்கினார்கள். பிறகு அந்த ஓடை தொண்டைமானாறு என்று பெயர் பெற்றது. முகத்துவாரத்தின் அருகில் அந்த நதி வளைந்து வளைந்து சென்றது. இருபுறமும் மரங்கள் அடர்ந்திருந்தன. இதனால் கடலிலிருந்து பார்ப்போருக்குத் தெரியாதபடி கப்பல்கள் நிற்பதற்கு வசதியாக இருந்தது.

அவ்வாறு பூமிக்குள் ஆறு புகுந்து தண்ணீர் நிறையத் தேங்கியிருந்த இடம் ஒன்றிலேதான் இளவரசரைச் சிறைப் பிடிக்க வந்த மரக்கலங்களைப் பூங்குழலி பார்த்திருந்தாள். முதலில் பார்த்த இடத்தில் அந்த மரக்கலங்கள் இப்போது காணப்படவில்லை. அதாவது பாய்மரங்கள், கொடிகள் முதலியவை தென்படவில்லை. அந்த இடத்தை மேலும் நெருங்கிப் பார்த்தபோது ஓர் அதிசயமான காட்சி புலப்பட்டது. கப்பல் ஒன்று வெள்ளத்தை விட்டு அதிக தூரம் பூமிக்குள்ளே சென்று சேற்றிலே புதைந்து போயிருந்தது. அதன் பாய் மரங்கள் கொடிகள் முதலியவை ஒடிந்தும் சிதைந்தும் கிடந்தன. அதில் மனிதர்கள் யாரும் இருந்ததாகத் தெரியவில்லை. இரண்டு நாளைக்கு முன்னால் அவள் பார்த்த கப்பல்களிலே அது ஒன்று என்பது பூங்குழலிக்கு நன்கு தெரிந்தது.

இளவரசரைச் சிறைப்பிடித்துக் கொண்டு போவதற்கென்று வந்த கப்பல்களில் ஒன்று, அதுவே சேற்றில் சிறைப்பட்டுக் கிடப்பதைக் கண்டு பூங்குழலி ஆச்சரியக் கடலில் முழுகினாள்!

(தொடரும்)

# விநாயக புராணம்!

முன்னொரு காலத்தில் தூர்வாச முனிவர் கைலாசத்துக்குச் சென்றபோது, முன் வாசலில் வீற்றிருந்த விநாயகப் பெருமானைக் கவனியாமல் விடுவிடு என்று உள்ளே போய் விட்டார். அதைக் கண்ட விநாயகர் ஒரு வேடிக்கை செய்ய எண்ணித் தமது தும்பிக்கையை நீட்டித் தூர்வாச முனிவரின் முதுகின்பேரில் தீர்க்க சுவாசம் ஒன்று விட்டார். உடனே தூர்வாச முனிவர் அலறிப் புடைத்துக் கொண்டு தலைகுப்புற விழ, அதைக் கண்டு பூத கணங்கள் எல்லாம் சிரித்தன.

தூர்வாச முனிவர் மீண்டும் எழுந்து தமக்கு என்ன நேர்ந்தது என்பதை ஞான திருஷ்டியினால் அறிந்து கொண்டதும், கோபம் அவருடைய ஜடா மகுடத்துக்கு மேலே போய்விட்டது. விநாயகரைப் பார்த்து, "நீர் பூலோகத்தில் நாற்சந்திகளிலும் குளத்தங்கரை மரத்தடிகளிலும் கேட்பாரற்று வெயிலில் காய்ந்து கொண்டும் மழையில் நனைந்து கொண்டும் இருப்பீராக! உமக்குத் தோப்புக்கரணம் போடுவோரும், வேண்டுதல் செய்து கொண்டு தேங்காய் உடைப்போரும், கொழுக்கட்டை நைவேத்தியம் செய்வோரும் நாளுக்கு நாள் குறைந்து போவார்களாக!" என்று சாபங் கொடுத்து விட்டுப் பூத கணங்களை நோக்கித் திரும்பினார். "நான் விழுந்தபோது சிரித்தவர்கள் அத்தனை பேரும் பூலோகத்தில் நாத்திகர்களாகப் பிறக்கக் கடவீர்களாக!" என்று சபித்த உடனே, பூதகணங்கள் நடுநடுங்கிப் போய் முனிவரின் அடிகளில் விழுந்து வணங்கி, "முனிபுங்கவரே! தாங்கள் மூக்குக்கு மேலே முன் கோபம் உடையவர் என்று தெரிந்திருந்தும், நாங்கள் சிரித்தது என்னமோ குற்றந்தான்! கருணை கூர்ந்து மன்னித்துச் சாப விமோசனத்துக்கு வழி கூற வேண்டும்!" என்று கேட்டுக் கொண்டனர்.

விநாயகரும், "தூர்வாசரே! உனக்குப் பசி எடுத்துக் கோபம் பொங்கி வந்த போதெல்லாம் பல தடவை நானாகவே உம்மை அழைத்து மோதகம்-நாளிகேரம் ஆகியவற்றில் பங்கு கொடுத்திருந்தும், ஒரு சிறிய வேடிக்கை செய்ததற்காக இப்படிச் சாபம் கொடுத்து விட்டீரே? எனக்கு ஒருவரும் பூஜை நைவேத்தியம் செய்யாமற் போனால் உம்முடைய கதி என்ன ஆவது?" என்று கேட்டார். அவ்வளவுதான்; தூர்வாச முனிவரின் கோபம் பறந்து போய் விட்டது.

"ஆமாம்; சற்று அவசரப்பட்டுத்தான் சாபங் கொடுத்து விட்டேன். ஆயினும் பரவாயில்லை. உலகில் நாஸ்திகர்களாகப் பிறக்கப் போகும் இந்தப் பூதகணங்கள் ஒரு நாள் 'மண் பிள்ளையார் செய்து உடைக்கப் போகிறோம்' என்று கிளம்பி, அவ்விதமே சில இடங்களில் செய்யவும் செய்வார்கள். உடனே, ஆஸ்திக மகாஜனங்களும் பக்த கோடிகளும் விழித்துக் கொள்வார்கள். முன்னைக் காட்டிலும் விநாயகக் கடவுளாகிய தங்களிடம் அதிக பக்தி கொள்வார்கள். அர்ச்சனைகள், அபிஷேகங்கள், நைவேத்தியங்கள், ஆரத்திகள், அலங்காரங்கள், வீதி வலங்கள், உற்சவங்கள் எல்லாம் பதின் மடங்கு அதிகமாகவும் அமோகமாகவும் நடத்துவார்கள். அந்தச் சமயத்தில் மட்டும் என்னை மறந்துவிட வேண்டாம்!" என்று முனிவர் கூறினார்.

தூர்வாச முனிவரின்

**அமரர் கல்கி**



திராவிடக் கழகத்தார் மிகப் பெரிய ஆர்ப்பாட்டங்கள் செய்து விட்டுப் பிறகு ஆங்காங்கே ஏதோ பெயரளவில் நடத்திய 'மண் பிள்ளையார் உடைப்பு' நிகழ்ச்சிகள், தமிழ் நாடெங்கும் அவர்கள் எதிர்பார்த்ததற்கு நேர்மாறான ஆஸ்திக உணர்ச்சியை எழுப்பி, நாத்திகத்தில் வெறுப்பை வளர்த்து, பக்தி வெள்ளம் பெருகும்படி செய்து விட்டன.

பல்லவ சேநாதிபதி பரஞ்சோதியார் வடக்கே படை எடுத்துச் சென்று, வாதாபி நகரை எரித்து அழித்த பிறகு, அங்கிருந்து வாதாபி கணபதியை வெற்றி முழக்கத்துடன் ஊர்வலமாக எடுத்து வந்து தமிழ் நாட்டில் நிலை நாட்டினார் அல்லவா?

அந்தக் காலத்தில் தமிழ் மக்கள் விநாயகர் விஷயத்தில் காட்டிய பக்தி வெறியை இத்தனை நூற்றாண்டுகளுக்குப் பிறகு இன்று மறுபடியும் தமிழ் நாட்டில் கண்டோம்.

மூலை முடுக்குகளிலும் சந்து பொந்துகளிலும் இடிந்த கோயில்களிலும் குளத்தங்கரை ஆற்றங்கரைகளிலும் மரத்தடிகளிலும் வீற்றிருந்த விநாயகர்களுக்கெல்லாம் யோகம் பிறந்தது. அபிஷேக அர்ச்சனைகளும் உற்சவ ஊர்வலங்களும் அமோகமாக நடைபெற்றன. அறுவகைச் சமயங்களில் ஒன்றான 'காணா பத்தியம்' என்னும் சமயமே புத்துயிர் பெற்று விட்டதாகத் தோன்றியது.

இவ்விதம் ஆஸ்திக உணர்ச்சி

வாக்கின்படியே பூலோகத்தில் பரத கண்டத்தின் தென் பகுதியில் கலியுகம் விஜய வருடம் வைகாசி மாதத்தில் எல்லாம் நடந்தது...

மேற்கண்டவாறு விநாயக புராணத்தில் ஒரு புதிய படலம் சேர்க்கப்பட்டு வருங்காலத்தில் நம் சந்ததிகள் படித்து மகிழும்படி நேருமானால் அதில் யாரும் வியப்பு அடைவதற்கு இடமிராது. நம் நாட்டில் புராண இதிகாசங்களில் இடைச் செருகல்கள், முன்பின் செருகல்கள் முதலியவை தொன்று தொட்டு நடந்து வரும் பழக்கங்களாகும். அந்த மரபு திடீரென்று மாறிவிடும் என்று எப்படி எதிர்பார்க்க முடியும்?

பொங்கிப் பெருகி ஓடியது குறித்து ஆஸ்திகர்கள் எல்லாரும் அளவிலா மகிழ்ச்சி கொள்வது இயற்கைதான். தெய்வத்தை எந்த உருவத்தில் தியானித்தாலும், உருவங் கடந்த பரம்பொருளையே தியானித்ததாகும் என்பது ஸநாதன ஹிந்து தர்மத்தின் அடிப்படைக் கொள்கையல்லவா? எனவே, பரம் பொருளை விநாயகர் வடிவத்தில் இத்தனை லட்சக் கணக்கான பக்த கோடிகள் ஏக காலத்தில் வழிபட்டது பற்றி ஆஸ்திக மகாஜனங்கள் மகிழ்ச்சி அடைய வேண்டியதுதானே!

# அன்பே ஆஸ்திகம்!

**உ**ண்மையான ஆஸ்திகர்கள் அவ்வளவாக மகிழ்ச்சி கொள்ள முடியாத, ஏன், வருத்தமே கொள்ளத்தக்க சில நிகழ்ச்சிகளும் நடை பெற்றதை இங்கே குறிப்பிட வேண்டியிருக்கிறது.

திராவிடக் கழகத் தலைவரின் உருவப் படங்களைக் கொளுத்துதல், அவரைப் போல் பொம்மைகளைச் செய்து உடைத்தல், கொடும்பாவி கட்டி இழுத்தல் போன்ற செயல்கள் ஆஸ்திகத் தன்மைக்குச் சிறிதும் பொருந்தாத அநாகரிகமான காரியங்கள்.

"அன்பே சிவம்" என்பது திருமூலரின் அருள் வாக்கு. "அன்பே கடவுள்" என்னும் கருத்தை ஒவ்வொரு மதமும் ஒவ்வொரு விதத்தில் வலியுறுத்தியிருக்கிறது. உலகத்தில் தோன்றிய அவதார புருஷர்கள், மகான்கள் எல்லாரும் இதே கருத்தை வெவ்வேறு விதமாக வெளியிட்டிருக்கிறார்கள். எத்தனையோ பெரியோர்கள் தங்கள் செயல்கள் மூலமும் காட்டியிருக்கிறார்கள்.

ஆகையால் அன்பு நெறிக்கு மாறான செயல் எதுவும் ஆஸ்திகம் ஆக முடியாது. வாயினால் மட்டும் ஆஸ்திகம் பேசிக் கொண்டு உள்ளத்தில் நீசத்தனமான துவேஷத்தை நிரப்பி வைத்துக் கொண்டிருப்பவர்கள்தான், நாஸ்திகர்கள் மீது பழிக்குப் பழி வாங்க நினைத்து மேற்கூறியவை போன்ற செயல்கள் புரிவார்கள்.

உண்மை ஆஸ்திகர்களுக்கு நாஸ்திகத்தின் மீது வெறுப்பு இருக்கலாம்; ஆனால் நாஸ்திகர்கள் மீது வெறுப்பு இருக்கக் கூடாது. அந்த வெறுப்பைக் காட்டிக் கொள்ள இம்மாதிரி அருவருப்பான காரியங்களிலும் இறங்கக் கூடாது.

இவ்விதக் காரியங்கள் செய்ய வேண்டுமென்று விநாயகப் பெருமான் அவருடைய பக்த கோடிகளிடம் ஒரு நாளும் எதிர்பார்க்க மாட்டார். நாஸ்திகர்களை வேறு விதத்தில் தண்டிக்க வேண்டுமென்று கடவுள் விரும்பினால் அவரே அந்தக் காரியத்தைச் செய்து கொள்வார்.

ஆஸ்திகர்கள் தங்கள் பக்தியை வளர்த்துக் கொள்ளட்டும். ஆலயங்களில் ஆராதனை, கூட்டுப் பிரார்த்தனை, பஜனை போன்ற காரியங்களில் மனதைச் செலுத்தட்டும். நாடெங்கும் இறைவனுடைய ஆயிரமாயிரம் திருநாமங்களும் முழங்கி ஒலிக்கும்படி செய்யட்டும்.

உருவ உடைப்பு, கொடும்பாவி இழுத்தல் முதலிய அநாகரிகமான காரியங்களை நாஸ்திகர்களுக்கே விட்டு விடுவதுதான் முறை.

"அன்பே கடவுள்" என்பதை ஆஸ்திகர்கள் ஒரு நாளும் மறந்துவிடக் கூடாது. அன்பு நெறியைக் கடைப்பிடிப்பதன் மூலம் ஆஸ்திகர்கள் தங்களை உயர்த்திக் கொள்வது மட்டுமல்ல; நாஸ்திகர்களையும் மனம் மாறும்படி செய்வது சாத்தியமாகும். அன்பு நெறிக்கு மாறான முறைகளைக் கடைப்பிடிப்பதினால் ஆஸ்திகத்துக்கு எல்லாவிதத்திலும் தீங்கே உண்டாகும்.

**(கல்கி, ஜூன் 14, 1953)**



## அமரர் கல்கி

# குறைத்துக் கொடுங்கள்!

**வி**லைவாசிகள் மணிக்கு மணி விஷத்தைப் போல் ஏறி வருகின்றன. எனவே, 'சம்பளம் போதவில்லை' என்ற கூக்குரலும் நாளுக்கு நாள் அதிகமாகி வருகிறது. இத்தகைய நிலைமையில், "எங்களுக்கு இவ்வளவு அதிக சம்பளம் வேண்டாம். கொஞ்சம் குறைத்துக் கொடுங்கள்" என்று யாராவது சொல்வார்களா? ஆனால் இந்திய சர்க்காரைச் சேர்ந்த உயர்தர அதிகாரிகள் அவ்விதம் தங்களுடைய சம்பளத் தொகைகளை வலுவில் குறைத்துக் கொள்ள முன் வந்து எல்லோரையும் ஆச்சரியத்தில் மூழ்க வைத்திருக்கிறார்கள்.

ஏற்கெனவே, கவர்னர் ஜெனரல் ராஜாஜி நமது நாட்டின் செல்வ நிலையை நன்குணர்ந்து தமது சம்பளத்தில் பெரும் பகுதியைக் குறைத்துக் கொண்டதை யாரும் மறந்திருக்க முடியாது. அந்த முன்னுதாரணத்தைப் பின்பற்றி இப்போது பல உயர்தர அதிகாரிகளும் தங்களுடைய சம்பளத்தில் சுமார் பத்தில் ஒரு மடங்குத் தொகையைக் குறைத்துக் கொள்ள முன் வந்திருக்கிறார்கள். ஐயாயிரம் ரூபாய் சம்பளம் பெறுவதற்கு உரிமையுள்ள ஆடிட்டர் ஜெனரல் தமக்கு நாலாயிரம் ரூபாய்க்குமேல் வேண்டாம் என்று இந்திய சர்க்காருக்கு அறிவித்திருக்கிறார். இந்திய சர்க்கார் மந்திரிகளும் தங்களுடைய சம்பளத்தில் பதினைந்து சதவிகிதம் குறைத்துக் கொள்ள உத்தேசித்திருக்கிறார்கள். இவற்றைத் தவிர இருநூற்றைம்பது ரூபாய்க்கு மேல் சம்பளம் வாங்குவோர் மாதா மாதம் குறிப்பிட்ட தொகையைக் கட்டாயமாகச் சேமித்து வைக்க வேண்டும் என்றும் இந்திய சர்க்கார் நிர்ணயித்திருக்கிறார்கள். சிக்கன முறையை யொட்டி வாயளவில் இடைவிடாது செய்து வந்த பிரசாரத்தைக் காட்டிலும் சர்க்கார் அதிகாரிகளின் மேற்படி செய்கை எத்தனையோ மடங்கு அதிக பலனைக் கொடுக்கும். ●

**(கல்கி, நவம்பர் 13, 1949)**

சுர்ரென்று மின்னல் தாக்கின மாதிரி கடைவாய்க் கன்னத்தோரம் வலி. கீழிருந்து மேலே செல்லும். முதலில் இலேசாகத் தோன்றி மறைந்து விடும். பிறகு ஒரு மாதம் கழித்து, ஒரு வாரம் கழித்து, நாள் விட்டு விட்டு வந்து தொடர்ந்து, பிறகு மணிக் கணக்கில் இருக்கும். இது பல் வலி என்று தவறான டாக்டர்களிடம் சென்று பற் களையெல்லாம் பிடுங்கி விட்டு நிவாரணம் கிடைக்காமல் அவதிப்படுபவர்கள் உண்டு என்கின்றனர் டாக்டர்கள்.

"உண்மையில் இது பல் வலி அல்ல. நரம்புக் கோளாறு. 'ட்ரைஜெமினல் நியூ ரால்ஜியா (Trigeminal Neuralgia)' என்னும் முகவலி நோய். இது பதினேழாம் நூற்றாண்டில் பிரான்ஸில் கண்டுபிடிக்கப் பட்டது என்றாலும் இன்னமும் நம் மக்களிடம் இதுகுறித்த விழிப்புணர்வு வராதது பெரும் அதிசயம்!" என்கிறார் நரம்பியல் மருத்துவர் நடராஜன்.

"இந்த வியாதிக்கு டெஸ்ட் 'ஸ்கேன்'தான். மூளையில் கட்டி இருந்தாலும் இந்த வலி வரும். அப்படி கட்டியிருந்தால் அதற்கான ஆபரேஷன் செய்து விடுவோம். கட்டியில்லாதபட்சத்தில்தான் அது இந்த நோய்க்கான அறிகுறியாகக் கொள்ளப் படுகிறது. இந்நோய் தாக்கப்பட்ட நோயாளிக்கும் தொடர்ச்சியான வலி இருக்கும். இதற்கான காரணம் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை. முகத்திலிருந்து மூளைக்கு வரும் நரம்பை இரத்தக் குழாய் அழுத்திக் கொண்டிருப்பதால் இவ் வலி என்று நம்பிக் கொண்டிருந்தோம். எல்லா

# முகவலியைப் போக்க முதன்முதலாக ஒரு சிகிச்சை!



• நோயைக் கண்டறிய ஸ்கேன்...

நோயாளிகளுக்கும் இந்த அழுத்தம் இல்லாததால் அந்த நம்பிக்கை அடிபட்டு விட்டது. சில நோயாளிகளுக்கு நரம்பு கேபின் கோளாறாகி விடுகிறது. அதனாலும் இரத்த ஓட்டம் தடைபடுகிறது. அப்போது முகத்தில் காற்றுப்படும் போது வலி ஏற்படும். குறைந்த வயதுள்ளவர்களை விட முதியவர்களுக்கும்



• எக்ஸ்-ரேயில் தெரியும் பலூன் சிகிச்சை

பெண்களுக்கும் இந்தக் கோளாறு அதிகம் எனக் கணக்கிட்டுள்ளோம்...''

கொடுமையான இந்த வலி வந்தால் சாப்பிட, பேச, முகம் கழுவ, முகம் துடைக்க கூட முடியாதாம். குளிர்ந்த காற்றுப் பட்டாலே உயிர் போகிற வலி ஏற்படுமாம்.

சரி இதற்கு மருத்துவ முறைகள்?

'Carbomazepine என்கிற 'நரம்பு இளக்கு' மருந்து – ஒரு நாளைக்கு 200 மி.கிராம் – வலியின் தன்மையைப் பொறுத்து 600 மி.கி. – 1000 மி.கி. வரை கொடுக்கப்படுகிறது. எங்களின் அனுபவத்தில் ஆறு மாதத்திற்கு இம்மருந்து வேலை செய்கிறது. அப்படியும் நோய்க்கு நிவாரணம் கிடைக்கவில்லையென்றால் பலூன் கம்ப்ரஸர் முறையோ, அறுவை சிகிச்சையோ (நோயாளிக்கு எது பொருத்தமோ அது) கையாளப்படுகிறது!'' என்கிறார் டாக்டர் நடராஜன்.



• டாக்டர் நடராஜன்

''பலூன் கம்ப்ரஸர் முறையில், வலி உண்டாகும் பகுதியைப் பலவித எக்ஸ்ரே கருவிகள் மூலம் கண்டறிந்து, 'Baloon Catheter'ஐ உடலுக்குள் செலுத்தி அந்த பலூனை விரிவடையச் செய்வோம். பலூன் விரிவடையும் போது நரம்பு மண்டலத்தை அது அழுத்துகிறது. இந்த அழுத்தத்தை ஐந்து நிமிடத்திலிருந்து பத்து நிமிடம் வரை வைத்திருப்பதன் மூலம் நரம்பில் ஏற்பட்டிருக்கும் மாற்றம் சரிசெய்யப்படுகிறது. இந்த சிகிச்சை முறை அரை மணி நேரத்திற்கும் குறைவானது. வலியிலிருந்து உடனடியாக நிவாரணமும் கிடைத்து விடுகிறது. அறுவை சிகிச்சை என்பது அப்படியல்ல. பல நாள் பெட் ரெஸ்ட் இருக்கும்.

''இந்த பலூன் சிகிச்சை முறையை நான்தான் — கோவையிலுள்ள கே.ஜி. மருத்துவமனையில்தான் இந்தியாவிலேயே முதன் முதலாகச் செய்கிறேன். மற்றபடி வெளிநாடுகளில்தான் இந்த சிகிச்சை முறை செய்யப்படுகிறது!'' என்கிறார் டாக்டர் நடராஜன்.

சந்திப்பு :

**கா.சு. வேலாயுதன்**

# ஜெயித்த கதை!

வெற்றி என்று நீங்கள் எதைக் கருதுகிறீர்கள்? என்னைப் பொறுத்தவரை, நாம் ஈடுபடுகிற துறையில், 'நம்மை விடச் சிறந்தவன்' என்று இன்னொருவனை யாரும் அடையாளம் காட்டக் கூடாது. அதாவது, எதிலும் நாம்தான் முதலாவதாக இருக்க வேண்டும். ஜெயிக்க வேண்டும்.

இது எனக்கு யாரும் சொல்லித் தந்த விஷயம் அல்ல. பள்ளி நாட்களிலிருந்தே எனக்குள் நான் எண்ணி வந்த கருத்து இது!

மனத்தில் அணையாமல் கனன்று கொண்டிருக்கும் இந்தத் தீப்பொறிதான் எண்ணற்ற சோதனைகள் வந்தபோதெல்லாம் என்னை நிலை குலைந்து போகாமல் காப்பாற்றி வந்திருக்கிறது. 'இன்னும் செல், மேலே செல்' என்று தூண்டிவிட்டுக் கொண்டிருக்கிறது.

**நா**ம் முன்னுதாரணமாகக் கொள்ளும் பெரியவர்கள்தாம் நமது வாழ்க்கைப் பயணத்தின் சீரான ஓட்டத்துக்குக் காரணமாக அமைகிறார்கள் என்று சொல்லுவேன்.

சின்ன வயதில் என்னை ரொம்பக் கவர்ந்தவர் என் தாத்தா. கலிங்கப்பட்டி கிராமத்தில் அவர் ஒரு முக்கியஸ்தர். கிராம முன்சீப்பாக இருந்தவர். நடமாடும் நீதிமன்றமாக, ஊர் விவகாரங்களையெல்லாம் தீர்த்து வைத்தவர். அற்புதமான மனுஷர். பிரமாதமான கலையுணர்வு கொண்டவர்.

கலிங்கப்பட்டியில் எங்கள் வீடு ஒரு சிற்பக்கூடமாகவே காட்சியளிக்கும்! வீடு முழுக்க அப்படி சிற்பங்களால் இழைத்து இழைத்து, ஒரு கலைக் கோயிலாகவே ஆக்கினார்!

தாத்தா இந்த வகையில் என்னை பாதித்தார் என்றால், என் தந்தை வேறொரு வகையில் என்னை பிரமிக்கச் செய்தார். அவரது



தமிழ்ப்பற்று இவ்வளவு அவ்வளவு அல்ல! குறிப்பாகத் திருக்குறள் மேல் மாளாக் காதல் கொண்டிருந்தார் என் தந்தை.

1330 குறட்பாக்களும் அவருக்குத் தலைகீழ்ப் பாடம். அது மட்டுமல்ல! திருக்குறளுக்குப் பத்து உரையாசிரியர்கள் உண்டல்லவா? அந்தப் பத்துப் பேரின் உரைகளும் கூட அவருக்கு மனப்பாடமாகி இருந்தன!

தினசரி காலை நாலு மணிக்கு எழுந்தார் என்றால் எட்டு மணி வரை திருக்குறள் - உரை படிப்பதுதான் அவரது முதல் பணி. இதைப் பல வருடங்களாக அவர் செய்து வந்தார். எங்கள் வீட்டில் ஒரே ஒரு படம் தான் மாட்டப்பட்டிருக்கும். அது வள்ளுவர் படம்!

இம்மாதிரியான குடும்பம் அமைந்ததாலோ என்னவோ, இயற்கையிலேயே எனக்குக் கலைகளின் மீதும் தமிழ் மீதும் பற்று வந்து விட்டது! வீட்டில் சுதேசமித்திரனும், கல்கியும் தவறாமல் வாங்குவார்கள். ஒரு வரி விடாமல் படித்து விடுவேன்.

அமரர் கல்கியின் தொடர்கதைகள் சிறு வயதில் என்னை மிகவும் பாதித்திருக்கின்றன. எனக்குள் நிறைய கனவுகளை அவை விதைத்தன. எல்லாவற்றுக்கும் மேலாக, படிக்கிற பழக்கத்தை இன்றளவும் விடாமல் தொடருவதற்கும் அவையே காரணமாகியிருக்கின்றன!

லைப்ரரிக்குப் போவேன். அகிலனின் நாவல்கள், வடுவூர் துரைசாமி ஐயங்காரின் துப்பறியும் கதைகள் என கிடைக்கிற அனைத்தையும் ஒரே மூச்சில் படிக்கிற வழக்கம் பத்து வயதிலேயே எனக்கிருந்தது!

கதை படிப்பதில் கவனம் சென்று விட்டால் பாடப் புத்தகங்கள் மண்டையில் ஏறாது என்பார்கள். என் விஷயத்தில் அந்தப் பிரச்னையே இல்லை. நாவல்களுக்கு இணையாகப் பாடங்களையும் நான் காதலித்தேன். வகுப்பில் எப்போதும் முதல் மாணவன் நான்தான்! படிப்பு விஷயத்தில் ஒழுங்காக இருந்து விட்டதால் கதை படிப்பது பற்றி வீட்டில் யாரும் விமர்சனம் செய்யவில்லை.

**அ**ந்த வயதில் படிப்பு தவிர என்னை ஆக்கிரமித்த இன்னொரு விஷயம் மேடைப் பேச்சு! ஆசிரியர் எழுதிக் கொடுத்த மேடைப் பேச்சை மனப்பாடம் செய்து பள்ளி விழா ஒன்றில் என் எட்டாவது வயதில் முதலில் பேசினேன்.

அதற்குக் கிடைத்த வரவேற்பு என்னை

## — சொல்கிறார் வைகோ

மிகவும் ஊக்குவித்தது. 'அசோகர்' நாடகம் போட்டார்கள். அதிலும் கலந்து கொண் டேன். அடுத்தடுத்து பள்ளியில் நடந்த பேச்சுப் போட்டிகளில் கலந்து கொண் டேன். இதனால் 'இவனுக்குப் படிப்பைத் தவிரவும் சில தகுதிகள் இருக்கின்றன' என்கிற மாதிரி ஊரில் ஒரு கவனம் கிடைத் தது.

பள்ளிப் படிப்பு முடிந்ததும் நான் ஒரு ஐ.ஏ.எஸ். அதிகாரி ஆக வேண்டும் என்று உறுதி எடுத்துக் கொண்டேன். இயல்பாகவே நாம் சார்ந்த மக்களுக்கு நம்மாலானதைச் செய்ய வேண்டும் என்கிற எண்ணம் எனக்கு இருந்தது. அதற்கு ஐஏஎஸ் படிப்பு




உதவும் என்று நம்பி, அந்த முயற்சியின் முதல் கட்டமாக பாளையங்கோட்டை செயின்ட் சேவியர் கல்லூரியில் பி.ஏ. பொருளாதாரம் படிக்கச் சேர்ந்தேன்.

கல்லூரிக் காலம் எனக்குப் பல உற்சாக மான அனுபவங்களைத் தந்தது. ஒரு கிரா மத்தானாகவே பிறந்து, வளர்ந்து, திடீரென நகரச் சூழலில் கல்லூரியில் காலெடுத்து வைத்ததே பெரிய வித்தியாசமான அனு பவமாக இருந்தது. சற்றே மிரண்டாலும், விரைவில் சுதாரித்துக் கொண்டேன்.

இன்றைக்குச் சிறந்த பேச்சாளராக விளங்கும் வலம்புரி ஜான் அன்று என் கல்லூரித் தோழர்! இயல்பாகவே எனக்கும் பேச்சார்வம் இருந்ததால், தோதான நண் பரும் வாய்த்ததால் கல்லூரியிலும் என் பேச் சாற்றலை வளர்த்துக் கொண்டு, வெளிப் படுத்த ஆரம்பித்தேன்.

பேசுவது எப்படி? நிறையப் படிக்க வேண்டும். அனுபவங்களைச் சேர்க்க வேண்டும். தொகுத்து, பிசிறில்லாத ஒரு மாலை போல் அள்ளித் தரத் தெரியவேண் டும்.

ஆகவே, நான் என் படிப்பைத் தொடர்ந் தேன். மு.வவின் எழுத்துகளும் வி.ஸ. காண் டேகரின் எழுத்துகளும் அங்கேதான் எனக்கு அறிமுகமாயின.

குறிப்பாக, கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழி பெயர்ப்பில் வந்த காண்டேகரின் 'கிரவுஞ்ச வதம்' போன்ற நாவல்கள் என்னைக் கிறங்க வைத்தன. என்ன மொழி! என்ன அழகு! மொழியை எப்படி மயக்கும்விதமாகக் கையாள்வது என்பதை கா.ஸ்ரீ.ஸ்ரீ.யின் மொழிபெயர்ப்பு நாவல்கள் மூலமே நான் கற்றுக் கொண்டேன்.

நிறைய மேடைகளில் பேசினேன். பேசும் போது என்னை மறந்து, பேசும் விஷயத்தில் ஒன்றிப்போய், அதனோடே கரைந்துருகும் வழக்கம் ஏற்பட்டது. ஒரு சின்ன அதிர்வில் என் சிந்தனையோட்டம் கலைந்தால், தொடர்பு அறுந்து விடும்! பேசுவது ஒரு தவம் போன்ற விஷயமாக எனக்குப் பட்டது.

**பி.**ஏ. முடித்தபின் சென்னை வந்து, மாநிலக் கல்லூரியில் எம்.ஏ. சேர்ந்த போது தான் அண்ணாவின் பேச்சை முதன் முதலில் கேட்டேன். அவரது தமிழும் தமிழ்நாட்டின் வளர்ச்சி குறித்து அவருக் கிருந்த கனவுகளும் என்னை ஈர்த்தன. அதுவரை மேடைப் பேச்சு என்பதை ஒரு கலையாக மட்டும் எண்ணியிருந்தவன், அதற்கொரு நோக்கமும் அர்த்தமும் உண் டென்பதையும் சமூகத்தின்பால் ஆழ்ந்த அக்கறை கொண்டதாக அது அமைய வேண்டும் என்பதையும் புரிந்து கொண் டேன்.

திராவிட இயக்கத்தின் தொடக்க காலம் முதலே அதில் செயல்பட்டு வந்த செயல் வீரர் எல். கணேசனுடன் தொடர்பு ஏற் படுத்திக் கொண்டேன்.

அவருடனான தொடர்புதான் எனக்குள் பல வாசல்கள் திறப்பதற்குக் காரண மாயிற்று. என்னைச் செதுக்கிய உளியாக அவரே இருந்தார்.

**1964.** கோகலே ஹாலில் ஒரு கூட்

டம். நான் பேசுகிறேன். அண்ணா வந்திருந்தார். அவர் முன்னால் நான் பேசிய முதல் பேச்சு அது! 'யார் இந்த இளைஞன்?' என்று அவர் கேட்டதே எனக்குத் தரப்பட்ட முதல் பெரிய அங்கீகாரமாக அமைந்தது.

அண்ணா பேசினார். அந்தக் கூட்டத்திலும் அடுத்தடுத்துப் பல கூட்டங்களிலும் அவர் பேசிய பேச்சுகள் என்னை மிகவும் சிந்திக்க வைத்தன. என்னையறியாமல் அவர் வழிநடத்திச் சென்ற ஒரு பேரியக்கத்தில் என்னை இணைத்துக் கொள்ளத் தொடங்கினேன்!

அப்போதும் படிப்பை விடவில்லை. எம்.ஏ.வில் பல்கலைக்கழக 'ரேங்க் ஹோல்டரா'கத் தேறி வந்தேன்! உடனே சட்டக் கல்லூரியில் சேர்ந்து படிக்க ஆரம்பித்தேன்.

தேர்வு அறையில் விறுவிறுவென எழுதிக் கொண்டிருப்பேன். எனக்கு முன்னதாக வேறு யாராவது 'அடிஷனல் ஷீட்' வாங்கி விட்டால் துடித்துப் போவேன். ராட்சஸ வேகத்தில் விடைகளை எழுதி, அந்த 'அடிஷனல் ஷீட்' வாங்கிய பையன் அடுத்த தாள் கேட்கும் முன்பாக நான் நான்கு முறை 'அடிஷனல் ஷீட்' வாங்கி எழுதி விடுவேன். அறுபது பக்கம். எழுபது பக்கம் என்றுதான் என் கணக்கு.

குறிப்பாக வரலாற்றுப் பாடங்களை மிக விரிவாக எழுதுவதில் எனக்கு ஒரு சுகம் உண்டு. நன்றாகவும் விடை எழுத வேண்டும்; நிறையவும் எழுத வேண்டும்; முதலில் எழுதி முடிப்பவனும் நானாக இருக்க வேண்டும்; முதல் மதிப்பெண்ணும் எனதாகவே இருக்க வேண்டும்!

இது பேராசை அல்ல! முயன்றால், சுட்டாயம் முடியும்!

**ப**டிப்பில் மட்டும்தான் என்றில்லை. எனக்கு விளையாட்டிலும் ஆர்வம் உண்டு. கிராமத்தில் படிக்கும்போதே எனக்கு 'வாலிபால்'.ஆடுவதில் விருப்பமும் திறமையும் தேர்ச்சியும் உண்டு. ஆனால், நான் கல்லூரிக்குச் சென்றபோது அங்கிருந்த வாலிபால் அணியில் எனக்கு இடம் கிடைக்கவில்லை.

காரணம், அந்த அணியில் ஏற்கெனவே விளையாடிக் கொண்டிருந்த மாணவர்களில் பலர் என்னை விடத் தேர்ச்சி பெற்றவர்களாக இருந்தார்கள்; மாநில அளவில் விளையாடச் செல்பவர்களாகவும் இருந்தார்கள். ஆகவே, என்னை அணியில் சேர்க்க மாட்டார்கள் என்று வெளிப்படையாகத் தெரிந்தது!

அதற்காக என் விளையாட்டு ஆர்வத்தை விட்டு விட நான் தயாராக இல்லை.

'வாலிபால் அணியில் தானே நமக்கு இடம் கிடைக்காது? நாம் கூடைப் பந்து ஆடக் கற்றுக் கொள்வோம். அந்த அணியில் இடம்பிடிப்போம்' என்று முடிவு செய்து, அந்தக்கணமே 'பேஸ்கட்பால்' விளையாடக் கற்றுக் கொள்ளத் தொடங்கினேன். தீவிரமாக உழைத்ததில், வெகு விரைவிலேயே அந்த ஆட்டத்திலும் தேர்ச்சி காண முடிந்தது. கூடைப்பந்து அணியிலும் இடம்பெற்று விட்டேன்!




– சீர்காழி கே.ஆர்.வி.

**இ**ந்தி எதிர்ப்புப் போராட்டத்தில் கலந்து கொண்டு, தீவிரமாக அண்ணாவைப் பின்பற்றத் தொடங்கியபோதும் என் சட்டப் படிப்பை வீணாக்க விரும்பாமல் ரத்னவேல் பாண்டியனிடம் ஜூனியராகச் சேர்ந்தேன். வழக்கறிஞராகப் பயிற்சி பெற ஆரம்பித்தேன். கூடவே தி.மு.க.விலும் என்னை இணைத்துக் கொண்டு, படிப்படியாக ஈடுபாட்டை வளர்த்துக் கொண்டு, கழகத்தின் மாணவர் அணியின் மாவட்டச் செயலாளராக உயர்ந்தேன். கூடவே என் பேச்சுத் திறனையும் வளர்த்துக் கொண்டு வந்தேன்.

உண்மையில் சொல்லப் போனால், ஒரு அரசியல்வாதி ஆக வேண்டும் என்கிற எண்ணமே எனக்குக் கிடையாது. பொதுநல நோக்கில் பணியாற்ற வேண்டும் என்பது தான் என் எண்ணம். ஐ.ஏ.எஸ். படிக்க

# 'உலகம் இன்று!!'

**பி**.பி.சி. நிறுவனம் 'உலகம் இன்று' என்ற பெயரில் ஒரு புதிய ஒலிபரப்பை ஆசியநாடுகளுக்காகத் துவங்கு கிறது. அதற்காக, சென்னையில் நடந்த பத்திரிகையாளர் சந்திப்புக்கு வந்திருந்தார் பி.பி.சி- உலகச் சேவையின் தலைமை நிர்வாகி மார்க் பை போர்டு.

அவரிடம், ''இன்று இருபத்து நான்கு மணி நேர ஒலிபரப்பு நடத்தும் சாட்டிலைட் சானல்கள் ஏகமாய் இருக்கும்போது, புதிய ரேடியோ ஒலிபரப்பை ஆரம்பிக் கிறீர்களே! இப்போது ரேடியோவெல்லாம் யார் கேட்கிறார்கள்?'' என்று நாம் கேட்டோம்.

''இத்தனை டெலிவி ஷன் சானல்கள் ஒளிபரப்பு என்பது இந்தியாவில்தான் சமீபத்திய விஷயம். ஆனால் பிரிட்டனில், பல்லாண்டுகளாக, நிறைய சாட்டிலைட் சேனல்கள் இருந்தாலும், ரேடியோவை அவை பாதிக்கவில்லை. ஆண்டு தோறும் பி.பி.சி. யின் ஒலிபரப்புக்கு லட்சக் கணக்கில் புதிய நேயர்கள் உருவாகிறார்கள் ரேடி யோவின் வீச்சு என்பது நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே இருப்பதை நாங்கள் கண்கூடாகக் காண்கிறோம். ரேடியோ என்பது மனித குலத் தின் தோழன். எங்கு சென்றாலும், சுலபமாகக் கையோடு கொண்டு போய் விடலாம். ரேடியோ ஒலிபரப்புக்கு வர வேற்பு இல்லை என்றால், பி.பி.சி. ஒலிபரப்புக்கு பிரிட்டிஷ் அரசு இவ்வளவு செலவு செய்யுமா? இல்லை, பி.பி.சி.தான் புதிய ஒலிபரப்புப் சேவைகளைத் தொடங்குமா?'' என்றார்.

**பி**ரஸ் மீட்டில் கேட்கப்பட்ட ஒரு கேள்வி:

''பி.பி.சி. செய்திகளில், பி.ஜே.பி.யை 'இந்து நேஷனிஸ்ட் கட்சி' என்றும், சோனியாவை 'இத்தாலிய விதவை' என்றும் குறிப்பிடுகிறீர்களே! அது ஏன்?''

பதில்: ''சோனியாவையும், பி.ஜே.பி.யையும் இந்தியாவில் அனைவரும் அறிவார்கள். ஆனால், பி.பி.சி. நியூஸ், உலகளாவிய நேயர்கள் கொண்டது. எனவே, அவர்களுக்கு, பி.ஜே.பி. என்றால், அது எத்தகைய கொள்கை கொண்ட கட்சி என்றும் சோனியா யார் என்றும் மிகச் சுருக்கமாக, ஆனால் புரியும்படியாக குறிப்பிட வேண் டிய அவசியம் உள்ளது. இதில் யார் மனதையும் புண்படுத் தும் நோக்கமில்லை!''

– சி.எம்.

நினைத்ததும் அதனால்தான். ஐ.ஏ.எஸ். படிப்பு, சுதந்தரமாகச் செயல்படும் வசதியைத் தராது என்பது புரிந்த பிறகுதான் அந்த எண்ணத்தைக் கைவிட்டேன். அரசி யல் அதற்கான சந்தர்ப்பங்களை உருவாக்கித் தரும் என்று நம்பிய தால் அரசியலுக்கு வந்தேன்.

**க**லிங்கப்பட்டி பஞ்சாயத்து சேர்மனாக இருந்ததுதான் அரசியலுக்கு வந்து, நான் வகித்த முதல் பதவி. அதற்கு நடந்த தேர் தலில் நான் ஜெயித்ததே ஒரு பெரிய கதை.

காங்கிரஸ் கோலோச்சிக் கொண்டிருந்த நேரம் அது. ஆனால், நான் தி.மு.க. சார்பில் தேர்தலில் நின்றபோது, ''எம்.ஏ. பி.எல். படிச்சவன் சேர்மனாக வர்றது பெருமைதான்; உனக்கு வோட்டுப் போடறோம். ஆனா தி.மு.க. சார்பில் நிற்காதே'' என் றார்கள். நான் மறுத்தேன். தி.மு.க. வேட்பாளராகவே நின்றேன். கடும் முயற்சி, உழைப்புக்குப் பின் ஜெயிக் கவும் செய்தேன்.

அந்த ஐந்து வருட காலத்தில் ஒரு கெட்ட பெயர் என் மேல் ஏற் பட்டு விடாதபடி கவனமாகப் பணியாற்றினேன். பரம ஏழை களைத் தேடித் தேடி வேலை வாய்ப்புகளை உருவாக்கித் தந்தேன். 'ஊழலற்ற கிராம நிர்வாகம்' என்கிற பெயர் கிடைத்தது. அதுதானே வேண்டும்!

அப்போதிலிருந்தே கழகத்தின் இளைஞர்களுக்கு என் மேல், என் பேச்சின் மேல் ஒரு ஈர்ப்பு உருவாகி விட்டது.

**அ**ண்ணாவின் மறைவுக்குப் பின் கலைஞரை என் தலைவராக ஏற்றுக் கொள்வதில் எனக்கு இரண் டாவது அபிப்பிராயமே இருக்க வில்லை. அண்ணா எப்படி ஒரு பன்முகத் திறமை கொண்ட மேதை யாக இருந்தாரோ, அதே போலக் கலைஞரும் சிறந்த சிந்தனையாள ராக, செயல்வீரராக, மக்கள் நலனில் அக்கறை கொண்டவராக

இருந்தார். அவரது வழி காட்டுதலில், நான் கழகப் பணிகளில் முழுமூச்சாக இறங்கினேன்.

மாநிலம் முழுவதும் சுற்றிச் சுற்றி எத்தனை கூட்டங்கள் பேசியிருப்பேன்! தொண்டர்களை – மொத்தமாகத் தொண்டர்கள் என்று பார்க்காமல் தனித்தனியே அவர்களுடன் நெருக்கம் ஏற்படுத்திக் கொண்டேன். இயக்கத்தின் தூண்கள் அல்லவா அவர்கள்?

கழகம் நடத்திய போராட்டங்களில் மிகத் தீவிரமாக ஈடுபட்டதன் விளைவாக இருபத்திரண்டு முறை சிறை சென்றிருக்கிறேன்.

சிறையில் மேல் வகுப்பை நான் எப்போதும் விரும்பியதில்லை. 'சி' கிளாஸில், சாதாரணத் தொண்டர்களுடன்தான் தங்குவேன். அவர்களுடனே உண்டு, உறங்கி, பேசி, சிரித்துப் பொழுதைக் கழிப்பேன். இது திட்டமிட்டுச் செய்ததல்ல. உண்மையில் அதுவே என் இயல்பாக இருந்தது!

சொல்லப் போனால், பின்னாளில் எனக்கேற்பட்ட மாபெரும் சோதனைக்கும் இதுவே முதல் காரணமாகவும் அமைந்தது.

ஒரு கூட்டத்துக்குப் பின் கழகத் தொண்டர்கள் என்னுடன் மிக நெருக்கமாக, மிக மிக அன்னியோன்னியமாக – ஒரு சொந்தச் சகோதரன் போலப் பழக ஆரம்பித்தார்கள். என் கூட்டங்களில் மிக உற்சாகமாகப் பங்கெடுத்து, வேலைகளை இழுத்துப் போட்டுக் கொண்டு செய்வார்கள். எங்கு போனாலும் என்னைச் சுற்றி வருவார்கள். எதிர்பார்ப்பு இல்லாத அன்பு அவர்களுடையது. இந்த அன்பு, இந்தப் பிணைப்பு – கலைஞரின் குடும்பத்தினருக்குப் பிடிக்கவில்லை. மிகவும் எரிச்சலடைந்தார்கள்.

சற்று விலகியிருந்து கலைஞரை அணுகியதில் தெரிந்த தோற்றமும் பிம்பமும் அவருடன் நெருங்கிச் சென்றபோது வேறு விதமாகக் காட்சியளித்தது.

அந்தக் கட்டத்தில் கனவிலும் நான் கலைஞருக்கெதிராக நினைத்ததில்லை; செயல்பட விரும்பியதில்லை. அவர் தலைவர் – நான் தொண்டன் என்கிற உணர்வு மட்டும்தான் மேலோங்கியிருந்தது.

**ஆ**னால் அப்படியொரு சோதனை வரும் என்று நான் எதிர்பார்க்கவில்லை. மதுரையில் கலைஞரின் மகன் வீட்டில் முக்கியஸ்தர்கள் கூடிப் பேசிக் கொண்டிருந்தார்கள். நாஞ்சில் சம்பத் ஓடிவந்து என்னிடம் சொன்னார் : "உங்களுக்கு விடுதலைப் புலிகளுடன் தொடர்பு இருப்பதாகக் காரணம் சொல்லி, கட்சியை விட்டு நீக்கப் போகிறார்கள்!"

அதிர்ந்தேன். ஆனால் இந்த அதிர்ச்சியைத் தூக்கிச் சாப்பிட்டு விட்டது இன்னொரு விஷயம்.

'புலிகளுடன் இணைந்து நான் கலைஞரைக் கொலை செய்யத் திட்டமிட்டிருப்பதாக' ஒரு வதந்தி திட்டமிட்டுப் பரப்பப்பட்டது.

வாழ்வில் அதுமாதிரி ஒரு சோதனை – மன உளைச்சல் வேறெப்போதும் எனக்கு வந்ததில்லை.

என் பேரதிர்ஷ்டம், தொண்டர்கள் அதை நம்பவில்லை. 'இது அபாண்டம்; வீண் பழி' என்று குரல் கொடுத்து, நாலைந்து பேர் எனக்காகத் தீக்குளித்தபோது கதறி விட்டேன்.

**கொ**லைப்பழி வேலை செய்யாததால் வேறொரு பழி சுமத்தினார்கள்.

ஜெயலலிதாவிடம் பணம் வாங்கிக் கொண்டு கட்சியை உடைக்க முயற்சி செய்வதாக செய்தி பரப்பப்பட்டது!

இனி தி.மு.க. இல்லை என்ற நிலை நான் விரும்பாமலே எனக்கு வந்து சேர்ந்தது. என்னை ஒழித்துக் கட்ட விதவிதமான 'ஆயுதங்களுடன்' கட்சி முனைப்புடன் பணியாற்றிக் கொண்டிருந்தது.

அரசியல் வாழ்வு அஸ்தமிப்பது பற்றி எனக்குக் கவலையில்லை. ஆனால் ஓர் அவப்பெயருடன் வெளியேறுகிறோமே என்கிற வருத்தம்தான் மேலோங்கியிருந்தது.

தண்டபாணி என்கிற இன்னொரு தொண்டன் எனக்காகத் தீக்குளித்துப் பரிதாபமாக இறந்திருந்தான். என் நெஞ்சு வெடித்து விடும் போலிருந்தது. இன்னும் எத்தனை உயிர்கள் என்னால் பறிபோகப் போகிறதோ என்று அஞ்சினேன். அவனைத் தோளில் தூக்கிச் சென்று கொண்டிருந்தபோது மனத்தில் இனம்புரியாத வேகமும் வெறியும் உண்டாயிற்று. போராடும் வெறி. என் மீது சுமத்தப்பட்ட பழிகளைக் களைந்தெறியும் வெறி! ம.தி.மு.கவைத் தொடங்க நினைத்தது அப்போதுதான்! அந்தத் தொண்டனைத் தோளில் சுமந்து சென்ற கணத்தில் தான்!

**க**ழகத்தில் என் உயிராக இருந்த இளைஞர்கள் அனைவரும் அப்போது எனக்குத்




தோள் கொடுத்தார்கள். கட்சி வலுவாகவே வளர்ந்து வந்தது.

'96 தேர்தலில் ம.தி.மு.க. கணிசமான இடங்களை வென்றிருக்க முடியும். எங்கள் உழைப்பும் மக்கள் ஆதரவும் சம விகிதத் திலேதான் இருந்தன.

ஆனால் அப்போது பல விஷயங்கள் எதிர்பாராமல் நடந்தன. அ.தி.மு.க. எதிர்ப்பு அலை ஒரு பக்கம். தன்மானப் பிரச்னை யால் மூப்பனார் காங்கிரஸிலிருந்து விலகி தனிக்கட்சி தொடங்கி எழுச்சி பெற்றது ஒரு பக்கம். எல்லாவற்றுக்கும் மேலாக தி.மு.க. – த.மா.கா. கூட்டணிக்கு ஆதரவாக ரஜினி என்கிற பெரியதொரு சக்தி வெளிப்படை யாக வோட்டுப் போடச் சொல்லிக் கேட் கும்போது மக்கள் மனம் மாறுவது இயல்பு தானே?

என் கணிப்பில், அந்தத் தேர்தலில் முன் சொன்ன விஷயங்கள் நடந்திராவிட்டால் குறைந்தது பதினைந்து இடங்களாவது எங்களுக்குக் கிடைத்திருக்கும். ஆனால் கிடைத்தது என்ன? படுதோல்வி! ஒரு இடம் கூட இல்லை.

அப்போதும் சொன்னார்கள், 'வை.கோ. வின் எதிர்காலம் அவ்வளவுதான்' என்று.

என் இயல்பு, தோல்வி வரும்போது வெறித்தனமாக உழைப்பது! தோல்வி பற்றிக் கலங்காமல் அடுத்த வெற்றியை நோக்கி நடைபோடுவது.

அப்போதும் அப்படித்தான் செய்தேன். தேர்தல் முடிவுகள் வந்த இரவு மிக உற் சாகமாகவே இருந்தேன். உற்சாகமாகத்தான் இருக்க வேண்டும் என்கிற உறுதியில் இருந் தேன் என்றும் சொல்லலாம்.

நானே அந்த இரவில் போய் ஒரு திருமண மண்டபத்தை ஏற்பாடு செய்து மறுநாள் நிர்வாகக் குழு கூட்டத்தைக் கூட்டினேன். "போர்க்களம் என்று வந்து விட்டால், தோல்விகள் ஒரு பொருட்டல்ல. தோல்வியில் கலங்குவது வீரனுக்கு அழ கல்ல'' என்று பேசியதில் தொண்டர்கள் இழந்த உற்சாகத்தை மீண்டும் பெற்றார்கள்.

புராண – இதிகாசங்களில் வரும் வீரம் மிக்க பாத்திரங்கள் எப்போதும் எனக்குப் பிடிக்கும். இந்திரஜித், அபிமன்யு போன்ற பாத்திரங்கள் நமக்கு மன உறுதியும் எழுச்சியும் தருவதற்காகவே படைக்கப் பட்டவை என்று நம்புகிறவன் நான்.

மக்களுக்கு ஏதாவது செய்ய வேண்டு மென்றால் முதலில் நாம் நிலைத்திருக்க வேண்டும். தேர்தல் வெற்றி என்பது மக்கள் பணிக்கான துருப்புச் சீட்டு. அதை அடை வதற்காகச் சில விஷயங்கள் அரசியலில் தவிர்க்க இயலாமல் செய்யப்பட வேண்டிய வையாக இருக்கின்றன.

அ.தி.மு.க.வுடன் நாங்கள் கூட்டணி அமைத்தபோது கூட, பா.ஜ. அரசுக்கான எங்களது நிபந்தனையற்ற ஆதரவை வெளிப்படையாக அறிவிக்கவே செய்தோம் – ஜெயலலிதாவுக்கு அது பிடிக்காத போதிலுங்கூட. நிர்ப்பந்தங்களால் ஏற்படும் அரசியல் ஒப்பந்தங்களால், கட்சியின் தனித் தன்மை அழிந்து விடக் கூடாது என்பதில் எப்போதும் உறுதியாக இருப்பவன் நான்.

ஒழுக்கம், கட்டுப்பாடு, உறுதி, விடா முயற்சி. வெற்றிக்கு ஆசைப்படும் யாவ ருக்கும் நான் வலியுறுத்த விரும்புவது இவற் றைத்தான்.

எனக்கேற்பட்ட சரிவுகள் எதுவும் என்னை சலிப்புறச் செய்யவில்லை. மாறாக இன்னும் உறுதி; இன்னும் முயற்சி என்று உத்வேகம் கொள்ள அவையே காரணமாகி யிருக்கின்றன. வெற்றி பெற முதல் தேவை – வெல்வோம் என்ற நம்பிக்கை. அசைக்க முடியாத நம்பிக்கை! அந்த நம்பிக்கை தரும் பலத்தினால்தான் உயிர்த்திருக்க முடிகிறது; செயல்பட முடிகிறது!

சந்திப்பு : **ஔரங்கசீப்**

அட்டை வண்ணப்படம், படங்கள் : **ரவிசங்கரன்**

# நிகரில்லாக் கல்கியோசை




அங்கிங்கே எனாதபடி படிப்போர் கூட்டம்
அத்துணையும் ஒருசேர ஈர்க்கும் ஆற்றல்
கங்குகரை காணாத வகையில் அந்தக்
கல்கியிடம் பொங்கியது. தொடர்க தையில்
எங்கவர்தான் விட்டாரோ அவ்வி டத்தை
எப்படித்தான் தொடர்வாரோ என்றே ஏங்கி
அங்கங்கே பெண்களினம் பேசு மென்றால்
அளப்பரிய அவராற்றல் யார எப்பார்?

சிலையோசை சிவகாமி சபத மென்றால்
சிந்தையினை ஒருமுகமாய் ஈர்த்து வென்ற
அலையோசை நாட்டுப்பற் றோசை யாகும்.
அகவோசை தனைமீட்டும் ஆடல் பாடல்
கலையோசை விமர்சனத்துக் கட்டு ரைகள்
கலைஞர்க்கு மதிப்புயர்ந்த பதக்க மாகும்
நிலையாக இன்றைக்கும் ஒலிக்கும் ஓசை
நிகரில்லாக் கல்கியோசை அய்ய மில்லை.

பலகலையின் வல்லுநராய், நகைச்சு வையைப்
பகிர்ந்தளிக்கும் நல்லவராய், மேடை யெல்லாம்
கலகலக்க வைப்பவராய், விமர்ச னத்துக்
கலையினிலே வல்லவராய், மெதுவாய் வாழைப்
பழத்தினிலே ஊசியினை ஏற்று தல்போல்
பக்குவமாய்க் குத்தலினைக் கலந்து பேசும்
நலத்தினிலே கல்கியினை விஞ்ச இந்த
நாட்டினிலே இன்னொருவர் தோன்ற வில்லை.

— ச. சவகர்லால்

"அம்மா... அம்மா..." என்று கூப்பிட்டான் ரமேஷ். ஊன்றுகோலை சுவரில் சாய்த்து விட்டு, சேலை நுனியைப் பற்றி இழுத்தான். எரிச்சலுடன் பார்த்தாள் வத்சலா.

"புது வீட்டுக்கு எப்பம்மா போறோம்?"

"நாளைக்கு."

"விடிஞ்ச பெறகா?"

"ம்..."

"காரா? மாட்டு வண்டியா?"

"இந்த ஊர்ல மாட்டு வண்டியெல்லாம் கெடையாது."

"ஏம்மா?"

"பேசாம இரு ரமேஷ். பாரு... அம்மாவுக்கு எவ்ளோ வேலை கெடக்கு." - கைகளை அரை வட்டம் போல சுற்றி இறைந்து கிடந்த சாமான்களைக் காட்டினாள். எல்லாம் தாறுமாறாகக் கிடந்தன. சோபாவின் மீது டீவி. கிரைண்டருக்குள் மிக்ஸி. ஒன்றன் மீது ஒன்றாக நாற்காலிகள். சாக்கு மூட்டைகள். அட்டைப் பெட்டிகள்....

அம்மா பொய் சொல்லவில்லை.

ரமேஷுக்கு உற்சாகமாக இருந்தது. அவனுக்காகவே புது வீடு. வழுவழுக்கும் புதுத் தரை. வண்ணம் பூசிய சுவர். சமைக்கவும் படுக்கவும் தனித்தனி அறைகள். விளையாட அகலமான ஹால். உடலை நகர்த்தாமல் தனக்கு என்ன விளையாட முடியும்?

"புது வீட்ல தோட்டம் இருக்காம்மா?"

"ம்..."

"என்ன தோட்டம்?"

வத்சலா சாக்கு மூட்டையை இறுக்கிக் கட்ட கயிறு பட்டென்று அறுந்தது. மூட்டை சரிந்தது. பாத்திரங்கள் பெரிய சப்தத்துடன் வெளியே விழுந்தன. திருகுணிச் சொம்பும், பால் பாத்திரமும் சுவரோரம் உருண்டன. கிண்ணங்களும், கரண்டிகளும் சிதறின. எல்லாவற்றையும், திரும்பவும் உள்ளே திணித்துக் கட்டுவதற்கு இனி இன்னொரு ஆள் துணை வேண்டும்.

"சொல்லும்மா... என்ன தோட்டம்?"

"காய்கறித் தோட்டம்"

"ரோஜாச் செடி இருக்கா?"

"ம்..."

"நாந்தான் பூப்பறிப்பேன்..."

"பேசாம இருடா... அம்மா வேலையா இருக்கேன்ல?" குரல் கடுகடுத்தது. பூப்பறிக்க விட மாட்டாளா?

"போ... உன்னோட காய்..." விரல்களை அவளை நோக்கி நீட்டி முறித்தான். இந்த அம்மா வேணாம். இனி பேசப் போவதில்லை.

தடுமாறி எழுந்து ஊன்றுகோலை எடுக்க முயன்றான். டேபிள் விளிம்பில் முழங்கை இடித்து 'க்ளிங்' கென்ற சப்தம். வாட்டர் ஜார் உடைந்து தரையில் கண்ணாடிச் சில்லுகள். மூடி மட்டும் தனியே உருண்டு போய்க் கிடந்தது - பளபளவென்று தரையில் ஈரம் படர்ந்தது.

"ரமேஷ்..." அம்மா உஷ்ணமாகக் கத்தினாள்

"போயி... பேசாம உன் சக்கர நாற்காலியில் உக்காரு. அப்பா வர்ற நேரமாச்சு இல்லைன்னா... அடிப்பேன்."

ரமேஷ் அவளுக்கு 'உவ்வே' காட்டி விட்டு திரும்பிக் கொண்டான்.

பாட்டியின் ஞாபகம் வந்தது. பாட்டி ஒருபோதும் இப்படி கொடூரமாக முகத்தைக்

காட்டியது இல்லை.

"நீ யாரு கண்ணு... அம்மா புள்ளையா... அப்பா புள்ளையா?"

"பாட்டி புள்ளை."

"சரி... யார் நல்லவங்க. அம்மாவா... அப்பாவா?"

"பாட்டி..."

"அட என் கண்ணு



மகனே..." பாட்டி அணைத்துக் கொள்வாள். சிரித்து மகிழ்ந்து, "கேட்டீகளா?" என தாத்தாவையும் கூப்பிடுவாள். கால் நீட்டி அமரும் பாட்டியின் மடி மீது தலைவைத்துப் படுப்பது சுகம். பாட்டிக்கு ஓயாத நாக்கு. எப்போதும் ஏதாவது பேசிக் கொண்டே இருப்பாள். அதனாலேயே அவனுக்கும் கேள்விகள் தோன்றியபடி இருக்கும்.

"பாட்டி... அப்பாவை நீதான் பெத்துப் போட்டியாம்?"

"யாரு சொன்னா?"

"தாத்தா..."

"ஆமாடா... என் ராசா?"

"எப்படி முடியும்? அப்பா உன்னை விட ஒசரமா இருக்காரு."

"அது வந்து... எப்படின்னா..., ம்... முன்னெல்லாம் இந்தப் பாட்டி ரொம்ப பெரிசா இருந்தேனாக்கும்..."

"எம்புட்டு... இவ்னோ பெரிசா?" இரு கைகளையும் அகல விரித்துக் காட்ட –

"ம்ஹூம்... இதை விடப் பெரிசு."

"இம்புட்டா?" இன்னும் விரிக்க, "ம்ஹூம்... இம்புட்டு" பாட்டி விரித்துக் காட்டினாள். "அம்மாடியோவ்... பூதம் மாதிரியா?"

பாட்டி பொக்கை வாயை அகலத் திறந்து எச்சில் ஒழுகும்படி, "ஹஹ்ஹஹாஹா..."வென்று சிரிப்பாள். பாட்டியை நினைக்கும்போது இந்த சிரிப்புத்தான் ஞாபகம் வருகிறது.

அம்மா சாக்கு மூட்டையைக் கட்டி விட்டு அவனைத் திரும்பிப் பார்த்தாள். "ரமேஷ் கண்ணா..."

அவன் கண்களை மூடிக் கொண்டான்.

"அம்மா மேல கோவமா?" தோள் மீது படர்ந்த அவளது கரங்களைத் தட்டி விட்டான்.

"ஆங்... கோவந்தான் துரைக்கு" பின்னும் நெருங்கி வந்து தலையோடு தலை மோதினாள். "எங்கே... எம்புட்டுக் கோவம்னு பாப்பம்..." கக்கத்தில் விரல்களால் நடந்தாள். சிரிப்பு பொத்துக் கொண்டு வந்தது.

"என் கூடப் பேச வேணாம்... போ..."

"ஏண்டி... கண்ணு..."

"நீதான்... தோட்டம் இல்லேங்கிறே..."

"அப்படியா சொன்னேன்... இல்லையே?"

"அப்ப... என்னைப் பூப்பறிக்க விடுவியா?"

"ம்..."

## அருள்வாக்கு

பொருளில்லார்க்கு இவ்வுலகம் இல்லை என்றார் திருவள்ளுவர். எல்லோரும் வீடு வாசலை விட்டு ஆத்ம விசாரத்தில் ஈடுபட முடியாது. உலக வாழ்க்கையை நடத்துவதானால் பணம் வேண்டித்தான் இருக்கிறது. இப்படிச் சம்பாதித்து குடும்பம் நடத்துபவர்கள் இருப்பதனால்தான் வேறு சிலர் ஆத்ம விசாரம் செய்ய முடிகிறது. பொருள் தேடி வாழ்க்கை நடத்தும் கிருகஸ்தர்கள்தான்

"சரீன்னு சொல்லு..."

"சரி..."

"நல்ல அம்மா...." ரமேஷ் சிரித்தான். வத்சலாவின் கண்களில் நீர் கோத்தது. என்ன பிள்ளையோ போ.

அவன்தான் கடைசி பையன். சிவாவையும், ராஜியையும் விடவும் சிவப்பு. சுறுசுறுப்பு, சூட்டிகை எல்லாம் கூட அதிகம். ஐந்து மாதத்திலேயே முகம் பார்த்து சிரிக்கத் தெரிந்தது. வேண்டியவர் வேண்டாதவரைப் பிரித்துப் பார்த்து சிணுங்கத் தெரிந்தது. ஏழு மாதத்திலேயே குப்புறப்படுத்தான். ஒண்ணே கால் வருடத்திற்குள் நடை. எந்த உயரத்தைத் தொடக் காத்திருந்தானோ? சாதாரண காய்ச்சல் போல வந்தது. இரண்டு கால்களையும் முடக்கிப் போட்டு விட்டது. எங்கெங்கோ தூக்கிக் கொண்டு போனார்கள். பார்த்தார்கள். செயற்கை சாதனங்களைப் பொருத்தி கொஞ்சம் நடை பழக்க முடிந்தது.

"இனி என்னதான் வழி டாக்டர் ஸார்..."

"எங்களுக்கு தெரிஞ்சது இவ்னோதான்... இது ஒரு குறை. இப்படித்தான் இனி வாழ்க்கைன்னு வாழப் பழக்கிருங்க. வேற வழி இல்லை..."

ராஜாராமனுக்கு இரண்டு வருடங்களுக்குள் மூன்று ஊருக்கு மாற்றல் வந்தது. ஒவ்வொரு ஊருக்கும் போய், வீடு பார்த்து, அவளையும் தனியே நடக்க முடியாத அவனையும் கூட்டிப் போய், சூழ்நிலைகளைப் பழக்கி....

அவனுடைய அம்மா வந்த போது அவஸ்தைகளை நேரடியாகப் பார்த்தாள். "ஏம்ப்பா கஷ்டப்படறே... பையனை வேணா எம் பொறுப்புல விடு. நான் பார்த்துக்கறேன்..."

"உனக்கேம்மா சிரமம்?"

ஆத்ம விசாரத்தில் ஈடுபட்ட சந்நியாசிகளுக்கு பிக்ஷை அளித்து அவர்களை ரட்சிக்கிறார்கள். கிருஹஸ்தர்கள் இல்லா விட்டால் பொருளைப் பற்றி நிர்விசாரமாக சந்நியாசிகள் என்று சிலர் ஞானம், பக்தி இவற்றிலேயே ஈடுபட்டிருக்க முடியாது. ''பொருள் (பணம்) என்பது பொருள் இல்லாதது'' ''அர்த்தம் அனர்த்தம்'' என்று சொன்ன அதே ஆதிசங்கராசாரியாள், அதே ''பஜ கோவிந்த''த்தில் ''பணப் பேராசை பிடித்து அலையாதே!



ஆனால் உனக்கு உரிய கர்மத்தினால் நீ சம்பாதிக்கிற பொருளைக் கொண்டு நியாயமாக வாழ்ந்து உன்னையே உயர்த்திக் கொள்'' என்றார்.

யல்லபஸே நிஜ
கர்மோபாத்தம்
வித்தம் தேன விநோதய சித்தம்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி
ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி
சங்கராச்சார்ய சுவாமிகள்.

''சிரமத்தைப் பார்த்து எதை நிறுத்த முடியும் சொல்லு....''

கிராமத்தில் பெரிய வீடு. வாசல்படி ஏறியதும் ஆள் உயரத் திண்ணை. சதுர ஆசாரம். ஊஞ்சல் பலகை. பெரிய பெரிய அறைகள். சமையல் கூடம். பின்கட்டு....

அவனுக்குப் பிடித்தது பின்கட்டுதான்.

கதவைத் திறந்ததும் குப்பென்று வீசுகிற நித்திய மல்லிகை, துளசி மாடம், மிளகாய்ச் செடி, அவரைப் பந்தல், சத்திரிச் செடி, வாடா மல்லிகை, ரோஜாச் செடிகள். தாத்தாவும் அவனும் ஐந்தாறு தடவை சுற்றி வருவார்கள். வியர்வை அரும்பியதும் தாத்தா, "போதுமாய்யா..." என்று கேட்பார். தலையாட்டுவான். கிணற்றில் நீர் சேந்திக் குளிப்பார்கள். வாளி நீரை தலையில் கவிழ்த்து விடுவார் தாத்தா. சில்லென்று குளுமை படர, திமுதிமுவென்று வழியும் நீரில் மூச்சுத் திணறும். சிரிப்பாக வரும்.

"நம்ம வீடு பெரிசாம்மா?"

"ம்...."

"தாத்தா வீடு மாதிரியா?"

"அத விடப் பெரிசு..."

"அப்ப... தோட்டமும் பெரிசாப் போடலாம்மா..."

"சரி... நீ போய் சமர்த்தா அங்க உக்காரு. அம்மா கை வேலையை முடிச்சுட்டு வர்றேன்."

அம்மா ஓரமாக நாற்காலியைக் காட்டினாள். ரமேஷ் மெதுவாக நடந்து போய் உட்கார்ந்து கொண்டான். அவனுக்காகவே பிரத்யேகமாக வாங்கிய நாற்காலி அது. ஏறவும், இறங்கவும் சிரமம் இல்லை.

அம்மா நல்லவள்தான் போலிருந்தது.

மாதம் தவறாமல் அவனைப் பார்க்க வந்து விடுவாள். மடியில் தூக்கி வைத்துக் கொண்டு தின்பண்டங்கள் ஊட்டுவாள். புதுப்புது உடுப்பாக மாட்டி விட்டு அழகு பார்ப்பாள். "என் கண்ணு எப்படி இருக்கான். பாருங்க இப்ப..."

அவனை நிற்க வைத்து எல்லோருக்கும் காட்டுவாள். அவனுக்கு வெட்கம் பிடுங்கும்.

ஒருநாள் பாட்டி கேட்டாள். "ஏண்டா கண்ணு... உங்கம்மா உன்னைக் கூட்டிக்கப் போறாளாம். போவியா நீ?"

"ஓ..."

"பார்த்தீங்களா இவனை... என்னதான் வளர்த்தாலும் அதது பெத்ததுதான் அதுக்கு..."

"ம்... ம்... இந்த பட்டிக்காட்டுல வச்சுக்கிட்டு என்ன பண்றது.... படிக்கிற வயசு வந்துருச்சே..."

"என்னமோ போங்க... எனக்குக் கஷ்டமா இருக்கு மனசு."

"மகளைப் பிரிஞ்சவனுக்கு பேரனைப் பிரிய முடியலையா?" தாத்தா சிரித்தார். அதுவும் உண்மையான சிரிப்புப் போல இல்லை.

தான் இல்லாமல் தாத்தாவும், பாட்டியும் என்ன பண்ணுவார்கள்? தோட்டம் என்ன வாகும்? அவன் கிளம்புகிறபோது சுத்தரிச் செடியில் பூ விட்டிருந்தது. ஊதாப்பூ.

புது வீட்டிலும் தோட்டம் போட வேண்டும் என்று நினைத்துக் கொண்டான் ரமேஷ்.

அப்பாவுக்குத் துணையாக அவரது நண்பர் வந்திருந்தார். லாரியில் ஒவ்வொரு சாமானாக ஏறிக் கொண்டிருந்தது.

"அப்பா... வீடு அலாட் ஆகறதுக்குள்ள எத்தனை பாடுங்கறீங்க. குலுக்கல்ல விழுந்தும் எனக்கு இன்டிமேஷன் வரலை. போய்க் கேட்டா எப்பவோ அனுப்பியாச்சு. வராதது உங்க தப்புங்கிறான். வக்கீலைப் பார்த்தேன். கேஸ் போட்டா நிக்கும்னார். கோர்ட் நோட்டீஸ் போன பெறகுதான்

மறுபடியும் இன்டிமேஷன் வருது... அதுவும் பதினஞ்சு நாள்ல பணம் கட்டணும்னு... நம்ம ஆபீஸ்ல உடனே லோன் குடுத்துரு வாங்களா? ...ம்ஹூம்... அப்படியும் இப்படியும் புரட்டி... ஒருவழியா பணத்தையும் கட்டி... சாவியும் வாங்கியாச்சு..."

"நீங்க கிரவுண்டு ஃப்ளோரைக் கேட்டிருக்கலாம்..." அம்மா கொடுத்த காப்பியை சமர்த்தாக வீல்சேரில் அமர்ந்து குடித்துக் கொண்டிருந்த ரமேஷைப் பார்த்தபடியே பேசினார் - நண்பர்.

"ம்... இதுக்கே இவ்ளோ சிரமம்... கிடைச்சது போதும்னு விட்டுட்டேன்"

"பையனை உங்க கூடத்தான் வச்சுக்கப் போறீங்களா?"

"அப்படித்தான் யோசனை.. ஸ்கூல்ல சேர்க்கணுமே..."

"மூணாவது மாடி... லிஃப்ட் கூட கிடையாது..."

"சிரமம்தான். சொந்த வீட்டு ஆசைக்குக் குடுக்கிற விலைன்னு நினைச்சுக்க வேண்டியதுதான்.... இதுவும் இல்லைன்னா எந்தக் காலத்துல நாம பணம் மொத்தமா சேமிச்சு வீடு கட்டப் போறம்?"

"அதுவும் சரிதான்...." என்றார் அப்பாவின் நண்பர்.

"போலாம்ங்களா சார்..." எனக் கேட்டார் டிரைவர். வேலையாட்கள் லாரியில் ஏறி இருந்தார்கள்.

"சரி..."

லாரி மெதுவாக நகர்ந்தது. எல்லோரும் டாக்சியில் ஏறிக் கொண்டார்கள்.

"அதா.. தெரியுது பாரு... அதான் நம்ம வீடு..." டாக்சியில் இருந்து கொண்டே வத்சலா விரல் சுட்டிக்காட்டினாள்.

அடுக்கடுக்காக கட்டடங்கள் தெரிந்தன. புதிதாக உருவான குடியிருப்புப் பகுதி அது. சாலைகள் பளிச்சென்று நேர்கோடாய்....

இருபுறமும் மரம் நட்டிருந்தார்கள். கம்பி வலைக்குள் அவன் உயரத்திற்கு முளை விட்டிருந்தன.

தாத்தா ஒருநாள் முழங்கை ஆழத்திற்கு குழிதோண்டி கன்றை நடச் சொன்னார். "என்ன தாத்தா செடி?"

"செடியில்லை. மரம்... கொய்யா மரம்."

"இவ்ளூண்டா இருக்கு."

"ஆரம்பத்துல அப்படித்தான். இப்ப... நீ இல்லையா?"

"எப்பப் பெரிசாகும்?"

"நீ வளர வளர..."

"நான் எப்ப பெரிசாவேன்..."

"இது வளர வளர..."

"இது எப்பப் பெரிசாகும்?"

தாத்தா மீண்டும் அதே பதிலைச் சொல்ல, இருவருக்கும் ஒரே சமயத்தில் குபீரென்று சிரிப்பு வந்தது. தாத்தா அவனைத் தூக்கிக் கொண்டு உள்ளே போனார்.

"என்னத்தைக் கண்டுகளாம். தாத்தாவும் பேரனும் இப்புடிச் சிரிக்கிறீங்க?"

சொன்னார். பாட்டி சிரிக்கவில்லை. கொஞ்ச நேரம் அமைதியாக இருந்து விட்டுச் சொன்னாள். "மரமும் சீக்கிரம் வளர்ந்துரும். நீயும் வளர்ந்துருவே. அதைப் பார்க்க நாங்க இருப்போமான்னுதான் தெரியலை..." அப்போது அவளது கண்கள் பளபளத்து முகம் கூட வெளிச்சமாகத் தெரிந்தது.

டாக்சி நின்றது. சிவாவும், ராஜியும் குதித்துக் கொண்டு ஓடினார்கள். ரமேஷை அம்மா இறக்கி விட்டாள். அவன் எதிரில் பிரம்மாண்டமான கட்டடம் எழும்பி நின்றது.

"இதாம்மா நம்ம வீடு?"

"ஆமா..."

அவனது முகத்தில் பிரமிப்பு. தாத்தாவின் வீடு ஓட்டு வீடு. வெள்ளைச் சுவரும், கீழ் விளிம்பில் செங்காவிப் பட்டையும். இப்படி காம்பவுண்டோ, கம்பிக் கிராதியோ கிடையாது. வீட்டு முன்னால்தான் எவ்வளவு காலி இடம். எத்தனை செடிகள் வேண்டுமானாலும் நடலாம். ரோஜா, சாமந்தி, மல்லிகை... குப்பென்று மணத்துடன் அவனது ஜன்னலில் காற்று வீசும். ஆபீஸ் முடிந்து வரும்போது அப்பா கேட்கிறார். "இதென்ன வாசம்... இவ்ளோ நல்லா வீசுது?"

அம்மா சொல்கிறாள். "இதெல்லாம் ரமேஷ் வேலைங்க... அவன் நட்ட செடிகள்லாம் இப்பப் பூக்குதுக..."

பக்கத்து வீட்டு வாசல்களிலிருந்து தலைகள் நீட்டின. ஒரிருவர் அப்பாவுக்கு அருகில் வந்தார்கள். சினேகிதமான புன்னகை. சுய அறிமுகம். "சார் புதுசா குடி வர்றீங்களா... ப்ளாட் நம்பர்?"

"டு எய்ட்டி ஃபோர்..."

"மை குட்னஸ்... மூணாவது மாடி..." வந்தவர்களின் கண்கள் ரமேஷைத்தான் முதலில் பார்த்தன. அப்பா முகத்தைத் திருப்பிக் கொண்டார்.

சாமான்கள் மேலே போய்க் கொண்டிருந்தன. "வத்சலா.... இவனையும் கூட்டிக்கிட்டு நீயும் போ..."

"வாடா கண்ணு..."

"மேலேயாம்மா..."

"ஆமா...."

ரமேஷ் அண்ணாந்து பார்த்தான். பின்னந்தலை பிடரியில் படும் போலிருந்தது. "ஏம்மா... கீழேயும்தானே வீடு இருக்கு..."

"அதெல்லாம் அடுத்தவங்க ப்ளாட்..."

"ப்ளாட்ன்னா?"

"என் கூட வா சொல்றேன்..." அவனைத் தூக்கிக் கொண்டு படியேறினாள். அவளுக்கு மூச்சிரைப்பதைக் கண்டு பாவமாக இருந்தது. கீழேயும் வீடுகள் இருக்க சிரமப்பட்டு ஏன் மேலே போக வேண்டும்? இதுதான் ப்ளாட்டா?

அம்மா அவனை இறக்கி விட்டு, "ஷ்ஷ்... அப்பாடா..." என்று உட்கார்ந்தாள். நெற்றி, கழுத்தில் வியர்வைக் கோடுகள். தரை சில்லென்று இருந்தது. அம்மா சொன்னது மிகையில்லை. பெரிய வீடுதான். ஹாலில் சாமான்கள் முன்பின்னும் முடிச்சுமாய்...

சிவாவும், ராஜியும் இங்கும் அங்கும் ஓடினார்கள். கும்மாளம் போட்டார்கள். ஒவ்வொரு அறையாகத் திறந்து வெளியே எட்டிப் பார்த்து, "ஏ ராஜி... அங்க பாரு காரு... எவ்ளோ சிறிசாத் தெரியுது...."

"ம்ம்... ரோட்டைப் பாரேன்... ஆளுக குட்டி குட்டியா...."

ரமேஷ் சுவரைப் பிடித்தபடி நடந்து ஜன்னலோரத்தில் போய் நின்றான். பழகியவற்றை இதுவரை பார்க்காத கோணத்தில் காண விசித்திரமாக இருந்தது. தென்னை மர உச்சி. மின்சாரக் கம்பி வரிசையாய் குருவிக் கூட்டம்....

சிலுசிலுவென்று காற்று வீசியது. காற்று மட்டும் போதுமா... பூமி எங்கே? இவ்வளவு உயரத்திற்குச் செடி வளருமா? தன் வீட்டு ஜன்னலில் வாச மணம் எட்டுமா?

"அம்மா... செடி வைக்கலாம்னு சொன்னியே... எடம் எங்கே?"

"இருக்கு. உனக்கு அப்புறம் காட்டறேன்."

"போம்மா... பொய் சொல்றே..."

"சரி... அப்புறம் பேசலாம்... பாரு அம்மாவுக்கு வேலை கெடக்கு." அம்மா ஏதோ ஒரு சாக்கு மூட்டையைப் பிரிக்க ஆரம்பித்தாள். சிவாவும், ராஜியும் படி அதிர கீழே ஓடினார்கள்.

காற்று வராத பழைய வீடே தேவலாம் போலிருந்தது ரமேஷுக்கு. அங்காவது வேடிக்கை பார்க்க முடியும். சைக்கிள் மணிச் சப்தம் கேட்கும். தெருச் சண்டைகள் சுவாரஸ்யம் தரும். தெரு ஓர கிரிக்கெட், கத்திரிக்காய் விற்கிறவன், பூக்காரக் கிழவி, பால்காரர். அவனை நோக்கிச் சிரிக்கும் சினேகிதங்கள்...

திடீரென அவனுக்குக் கீழே இறங்கி தரையில் உட்கார்ந்து கொள்ள வேண்டும் போலிருந்தது.

"அம்மா... நான் கீழே போகணும்..." என்றான்.

"வேணாம்... அப்புறம் யாரு உன்னைத் தூக்கிட்டு வர்றது?" என்றாள் அம்மா.

"நான் மேலே வரலை..." என்றான் ரமேஷ்.

"என்னடா உளர்றே?"

"நான் கீழே போறேன்...." என்றான் மீண்டும்.

"பேசாம இருக்க மாட்டே.... பாரு எவ்ளோ வேலை கெடக்கு..." இரண்டு கையிலும் இரண்டு அட்டைப் பெட்டிகளைத் தூக்கி வந்து இறக்கிய அப்பா அவனை மிரட்டினார்.

"மிரட்டாதீங்க... அவனுக்குத் தாத்தா பாட்டி ஞாபகம் வந்திருச்சு..." என்றாள் அம்மா.

ரமேஷுக்கு அவர்களது ஞாபகம் வந்தது. அதே அகலத் திண்ணை வீடு. மாட்டுத் தொழுவம். பின் வாசல் கொல்லை. கிணறு. பூத்துக் குலுங்கும் செடிகள்...

"நான் தாத்தா வீட்டுக்குப் போறேன்..." என்றான் ரமேஷ்.

"சும்மா இரு... அடிப்பேன்..."

"நான் இப்பவே போகணும்..." என்று மீண்டும் கத்தினான் ரமேஷ். ●




– அம்பை தேவா



**மேஷம் :** *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

தாமதங்களும் தடைகளும் தவிர்க்க முடியாதுங்க. குருவோட பார்வையிருக்கறதால சங்கடங்களை ஒரளவுக்கு சமாளிப்பீங்க. ஆனாலும் சோர்வாத்தான் ஃபீல் பண்ணுவீங்க. நண்பர்கள், உறவினர்களாலும் தொல்லைகள் வர்றதுக்குத்தான் சான்ஸ் இருக்கு. அபூர்வமா சிலருக்குப் பயணத்தால நன்மை ஏற்படலாம். ஆனாலும் பணவிஷயத்துல உஷாரா இருங்க. ஸ்பெகுலேஷன், கொடுக்கல் - வாங்கல் சமாசாரமெல்லாம் வேணவே வேணாம். உத்தியோகஸ்தர்களும் வேலைல கவனம் காட்டலேன்னா, ஆபீஸர் கிட்ட செமத்தியா வாங்கிக் கட்டிக்க வேண்டி வரும். எல்லோருமே டூவீலர் பயணத்தைத் தவிர்க்கறது தான் பெட்டர்!

**ரிஷபம் :** *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க பேச்சுல இந்த வாரம் ஜெகஜாலம் ஜொலிக்கும். அப்புறமென்ன அந்த ஹோதாவுலயே பல காரியங்களைச் சாதிச்சிடுவீங்க. புதுசு புதுசா ஏதாவது வாங்குவீங்க. குடும்பத்துலயும் குதூகலம் கொப்புளிக்கும். வெளிநாட்டுத் தொடர்போ, வியாபாரமோ நல்ல பலனைக் கொடுக்கும். கொடுக்கல் வாங்கலிலும் ஆதாயம் கிடைக்கும். எதிரிங்க சைடு வாங்கிடுவாங்க. ஆனாலும் தந்தையின் ஆரோக்கியத்துல ஆக்கறை காட்டுங்க. அரசாங்க விஷயங்களில் கவனமா இருங்க. பக்தி மார்க்கத்துல ஒரு தெளிவு கிடைக்கறதுக்கு சான்ஸ் இருக்கு.

**மிதுனம் :** *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

இந்த வாரம் நீங்க ரங்கராட்டினம் ஆடற மாதிரிதான். எல்லாமே மாறி மாறித்தான் வரும். பண விஷயம் திருப்திகரமாவே இருக்கும்னாலும், வாரிசுகளால் சின்னச் சின்ன பிரச்னைகள் வர்றதுக்கு சான்ஸ் இருக்கு. மறுபக்கம் சுபகாரியங்கள் கூடி வரும். சமூக சேவகர்களுக்குப் பாராட்டு கிடைக்கும். பயணத்தால சிலருக்கு ஆதாயம் உண்டு. வாழ்க்கைத் துணையின் ஆரோக்கியத்தில் அக்கறை காட்டறது அவசியம். மத்தவங்க உதவி இருக்கறதால எல்லாத்தையும் சுலபமா சமாளிச்சிடுவீங்க.

**கடகம் :** *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

முக்கியமான கிரகங்களெல்லாம் உங்க சைடு இருக்கறதால நினைச்சதெல்லாம் சாதிச்சுக் காட்டுவீங்க. ராஜாங்க விவகாரங்களில் நல்ல திருப்பம் ஏற்படும். அரசியல்வாதிகளை குரு பார்க்கறதால அவுங்க காட்டுல மழைதான். போட்டி, பந்தயங்களில் நல்ல பலன் உண்டு. வியாபாரிகளுக்கு பளிச்சினு முன்னேற்றம் தெரியும். வெளிநாட்டுலேர்ந்து உற்சாகமான சேதி வரும். கணவன் - மனைவிக்குள்ள சிறு சிறு கருத்து மாறுபாடுகள் வரும்கிறதால ஊடலும் கூடலும் மாறி மாறித்தான் இருக்கும்.

**சிம்மம் :** *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

இந்த வாரம் சில பிரச்னைகள் தலை தூக்கறதைத் தவிர்க்க முடியாதுங்க. பேச்சிலும் செயலிலும் ரொம்ப கவனமா இருக்கணும். குடும்ப அமைதிக்குப் பங்கம் வர்ற சான்ஸும் இருக்கு. அரசுத் துறையினருக்கும் அரசியல்வாதிகளுக்கும் கவலையே இருக்காது. வழக்கமான 'மாமூல்' வாழ்க்கை பாதிக்காது. பெண்களின் உடல் நலனில் அக்கறை தேவை. கூடப் பிறந்தவங்க ஆரோக்கியத்திலும் கவனம் காட்டணும். வாரிசுகளால சில பிரச்னைகள் வரலாம். பண விஷயம் சீராவே இருக்கும். கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷனில் எச்சரிக்கை அவசியம்.

**கன்னி :** *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

மதிப்பு, அந்தஸ்து, புகழ், கௌரவம், இத்யாதிகளுக்கெல்லாம் குறைச்சலே இருக்காதுங்க. எல்லாப் பக்கத்திலிருந்தும் உதவிக்கரம் கிடைக்கும். வியாபாரிகளுக்கு ஓகோ வாரம்தான். கலைத் துறையினருக்கும் சபாஷ் சொல்லும்படியான வாரம். புதுப் பொருள்கள் வாங்குவீங்க. தந்தையாலும் பெண்களாலும் பயன் பெறுவீங்க. சிலருக்குத் திடீர் அதிர்ஷ்டம் அடிக்கும். பண விஷயத்தில் நல்ல முன்னேற்றம் இருக்கும். ஆனாலும் பேச்சில் இனிமை, பொறுப்புணர்ந்து செயல்படும் குணம் இவற்றை மட்டும் எந்த நிலையிலும் மறந்துடாதீங்க.

**துலாம் :** *(சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம் 3-ம் பாதம் வரை)*

**சிம்ம ராசிக்காரரான ஸ்ரீகாந்த் கொடுக்கல் வாங்கல்**

விசேஷமான வாரம். உங்களுக்கு ஆற்றல்கள் முழுமையாக வெளிப்படுகிற வாரம். நிர்வாகப் பொறுப்புகளில் இருப்பவர்கள், உத்தியோகஸ்தர்கள் ஆகியோருக்கு புதிய உற்சாகமான சூழ்நிலை உருவாகும். புரமோஷன், புதிய பொறுப்புகள் உங்களைத் தேடி வரவும் சான்ஸ் இருக்கு. கலைத் துறையினருக்குச் சாதகமான ஒப்பந்தங்கள் ஏற்படலாம். பெண்களுக்கும் உற்சாகமான வாரம்தான். பட்டுப் புடைவை, நகைகள் வாங்கற சான்ஸ் இருக்குன்னா சும்மாவா! சிலருடைய வாழ்க்கையில் திடீர் வசதி வர்ற யோகம் இருக்கு. பயணத்தைத் தவிர்த்திடுங்க. இயந்திரப் பணியாளர்கள் எச்சரிக்கையா இருங்க. அலைச்சல் அதிகமாயிருக்கேன்னு உற்சாகத்தை இழந்துடாதீங்க.



**விருச்சிகம் :** *(விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)*

கிரகங்களின் அருள் பார்வை உங்க பக்கம் இருக்கறதால எதிரிங்களெல்லாம் காணாம போயிடுவாங்க. வழக்கு விஷயங்கள் ஏதும் பெண்டிங்கா இருந்தா உங்களுக்கு அனுகூலமாவே முடியும். பேச்சில ஒரு வசியமும் தோற்றத்தில் ஒரு மிடுக்கும் உங்களை அறியாமலே கூடும். நண்பர்கள் உடுக்கை இழந்தவன் கை மாதிரி வருவாங்க. கூட்டுத் தொழில் பண்றவங்களுக்கு இது குறிப்பிடும்படியான வாரம். தொழிலாளர்களுடைய கோரிக்கைகள் நிறைவேற்றப்படும். எதிர்பாராத செலவு வந்தாலும் பண விஷயம் திருப்தியா இருக்கும். கொடுக்கல் வாங்கல், ஸ்பெகுலேஷன் விஷயங்களும் ஆதாயம் தருவதாகவே இருக்கும். வீண் வம்புக்கு மட்டும் போகவே போகாதீங்க.



**தனுசு :** *(மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)*

செய்யற அத்தனை காரியங்களிலும் வெற்றிக்கான வாய்ப்புகளே கூடிவரும்; எதிர்ப்புகள் மறையும். கூடப் பிறந்தவங்களும் உதவிகரமா இருப்பாங்க. போலீஸ், மிலிட்டரி மாதிரியான காவல் துறையினருக்கு நல்ல பலனுக்கு உத்தரவாதமே தரலாம். வீடு, மனை, நிலம் விஷயங்களும் சாதகமாவே இருக்கும். கலைத் துறையினருக்கு ரேஷன் மாதிரியான பலன்தான். குடும்பவசதிக்கான பொருள்களை வாங்குவீங்க. விருந்து, உல்லாசம்னு குடும்பத்தில ஒரே குதூகலம்தான். ஆனாலும் சில திடீர்த் திருப்பங்களால சில பிரச்னைகள் வர்றதுக்கான சான்ஸ்ும் இருக்கறதால எதிலும் கவனமா இருக்கறதுதான் நல்லது.



**மகரம் :** *(உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)*

இடர்ப்பாடுகள், குறுக்கீடுகளெல்லாம் உங்க பக்கம் பார்வையைத் திருப்பியிருக்கறதால எதிலும் எச்சரிக்கை அவசியம். உடல் நலத்துல கவனம் காட்டணும். மனசுல துணிச்சலும் தன்னம்பிக்கையும் இருக்கறதால எல்லா இடையூறுகளையும் சமாளிச்சிடுவீங்க. பொருளாதார ஏற்றத் தாழ்வுகள் இருக்கறதால சிக்கனம் ரொம்ப ரொம்ப அவசியம். குடும்பத்திலும் சலசலப்புகள், கருத்து வேறுபாடுகள் வரும். கொடுக்கல் - வாங்கல் வேண்டாம். புது ஆளுங்ககிட்ட உஷாரா இருங்க. வியாபாரிங்க அகலக்கால் வைக்கக் கூடாது. உத்தியோகஸ்தர்களுக்கு மட்டும் 'மாமூல்' வாழ்க்கை தொடரும்.



**கும்பம் :** *(அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)*

எண்ணங்களும் திட்டங்களும் சுலபமா நிறைவேறுகிற வாரம். உங்க திறமை முழுசாப் பயன்படும். விவசாயிகள், தொழிலாளர்கள் என்று எல்லோருக்குமே ஆதாயமான வாரம். கம்ப்யூட்டர், எலக்ட்ரானிக் தொழில் சம்பந்தப்பட்டவங்களுக்குச் செழிப்பான நேரம் இது. கவர்மென்ட் விஷயங்களில் ஏதும் பெண்டிங் இருக்கா? இந்த வாரம் முடிஞ்சிடும். சுபகாரியங்களில் பங்கு பெறுகிற சான்ஸ் இருக்கறதால குடும்பத்திலும் குதூகலம் நிலவும். பண விஷயம் சீராவே இருக்கும்னாலும் கொடுக்கல் - வாங்கல் வேண்டாம். பெண்கள், ஆரோக்கியத்தில் கவனமா இருக்கணும்.



**மீனம் :** *(பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)*

உங்கள் திறமை போற்றப்படும்; பாராட்டும் புகழும் வந்து குவியும். அரசு விவகாரங்களிலும் உங்களுக்கு அனுகூலமான பலன்களே ஏற்படும். வெளிநாட்டுத் தொடர்பும் ஆதாயமே தரும். மத்தவங்களோட உதவியும் கேட்டதும் கிடைக்கும். சிலருக்கு புரமோஷன் சான்ஸ்ும் இருக்கு. செலவு நிறைய இருந்தாலும் பண விஷயம் சீராவே இருக்கும். சிலருக்கு அதிர்ஷ்ட வாய்ப்புகளுக்கும் சான்ஸ் இருக்கு. ஆனாலும் பேச்சில் நிதானம் காட்டுங்க. பயணத்தில் எச்சரிக்கையா இருங்க. பாத்ரூமில் வழுக்கி விழுந்து போன்ற விபத்துகள் ஏற்படலாம், ஜாக்கிரதை!



விஷயத்தில் எச்சரிக்கையா இருக்கணுமாம்!



# அஞ்சலி

மிகச் சிறந்த கவிஞரும் அமரர் கல்கி யின் மறைவுக்குப் பின் கல்கி இதழின் ஆசிரியராக இருந்தவருமான மீ. ப. சோமு 15.1.99 அன்று காலமாகி விட்டார். தமிழுக்கு இழப்பு இது.

சோமுவின் மேல் அமரர் கல்கிக்கு அபாரமான பிரியம் உண்டு. , தாம் எழுதவிருக்கும் கதைகள் பற்றி அவர் சோமுவிடம் 'டிஸ்கஸ்' பண்ணுகிற விதமே அலாதி.

திருநெல்வேலியில் டி.கே.சியின் 'வட்டத் தொட்டி' சபைக்கு அடிக்கடி செல்வார் அமரர் கல்கி. நெல்லையில் சுலோசனா முதலியார் பாலம் என்றொரு பாலம் வெகு பிரசித்தம். கீழே தாமிரபரணி சலசலக்க, மேலே தென்றல் தவழ, அந்தப் பாலத்தின் மேல் உலாவியபடியே தம் மனத்தில் தோன்றிய கதையை சோமுவிடம் விவரிப் பார் கல்கி.

'தம்பி, தம்பி' என்று அன்புடன் விளித்து, 'இங்கே தொடங்குகிறேன். இப்படிக் கொண்டு போகிறேன், இங்கே சஸ்பென்ஸ்' 'என்று விரிவாகக் கதையைச் சொல்லி, இறுதியில் 'இப்படி முடிச்சுடறேன் தம்பி' என்று முற்றிலும் எதிர்பாராத ஒரு கிளை மாக்ஸைச் சொல்லி முத்தாய்ப்பு வைப்பார் கல்கி.

சோமுவின் இலக்கிய ரசனை மிக உயர் வானது. சமகாலச் செய்திகளின் அடிப் படையில் தம் கதைகளை அமைக்கவே அவர் விரும்புவார்.

சிறந்த கவிஞராக மட்டுமின்றி ஆன்மிகத் தில் ஆழ்ந்த ஈடுபாடு கொண்டவராகவும் இருந்தார் அவர். அவரது பல கதைகளில் இதன் எதிரொலி இருக்கும். சித்தர் பாடல் களுக்கு உரை எழுதியது இவர் தமிழுக்குச் செய்த முக்கியப் பணி.

சோமு அவர்களின் இசை ரசனை – அவ ரது கவியுள்ளம் போலவே மிக உயர்வானது. சங்கீதப் பரம்பரையில் வந்தவர் அவர்.

'சாரங்கி' என்றொரு இசைக் கருவியைக் கையாள்வதில் அவரது முன்னோர்கள் பெரும் விற்பன்னர்களாக இருந்தவர்கள் அக்காலத்தில் தமிழ்நாட்டுக் கோயில்களில் சாரங்கி வாசிப்பு இருந்திருப்பதாகவும் தம் தந்தையார் காலத்துக்கு முன்பு அது வழக் கொழிந்து போய் விட்டதையும் சொல்லி வருத்தப்படுவார்.

இசையையும் கவிதையையும் விடச் சற்று அதிகமாக அவர் நேசித்தது – அமரர் கல்கி அவர்களையும் அவரது எழுத்தையும் தான்.

கல்கி அமரராகி ஒரு வருடம் ஆகியிருந்த சமயம். 'சரித்திர புருஷர்' என்றொரு கட் டுரை எழுதினார் மீ.ப. சோமு.

அப்போது அந்தத் தலைப்புக்கு வந்த எதிர்ப்பைப் பார்க்க வேண்டுமே!

'எப்படி இதுபோல் ஒரு தலைப்பு வைக் கலாம்? அப்படியென்ன சாதனை புரிந்து விட்டார் கல்கி?' என்ற கூக்குரல்கள் கிளம் பின.

இன்றைக்குக் கல்கி நூற்றாண்டு விழா நாடெங்கும் கொண்டாடப்படும் கோலா கலத்தைப் பார்க்கும்போது சோமுதான் எத்தனை தீர்க்கதரிசனத்துடன் அப்படி யொரு தலைப்பைச் சூட்டினார் என்று எண்ணாமல் இருக்க முடியவில்லை.

— ஆனந்தி

சிவசேனைத் தலைவராய் சிராக மூச்சு விட முடியவில்லை என்று அவரை லீலாவதியில் அட்மிட் செய்தார்களோ இல்லையோ, அன்று மதியமே அவர் சிவபதம் அடைந்து விட்டதாகப் பலத்த வதந்திகள் உலா வரத் தொடங்கிவிட்டன. மதிய ஷிஃப்டுக்கு தாய்க்குலங்கள் தங்கள் குழந்தைகளைப் பள்ளிக்கு அனுப்பத் தயங்கினர். ஆனால், பொது மக்களின் பொது அறிவு ஏகமாக உயர்ந்து விட்டது! 'ஒரு கல்லெறி இல்லை; ஒரு கதவடைப்பில்லை; அதெல்லாம் தலைவருக்கு ஒன்றுமாகியிருக்காது' என்று தெரிந்து, தைரியமடைந்து விட்டனர். இப்படி எல்லாம் வதந்திகள் வந்தால், சம்பந்தப்பட்டவர் நீடூழி வாழ்வாராமே? தாக்கரேயும் பல்லாண்டு வாழட்டும்; தில்லியிலுள்ள ஃபெரோஸ் ஷா கோட்லா பிச் ஒன்றைத் தானே பிச்சுப் போட்டிருக்கிறார்கள்? இன்னும் எத்தனை பிட்சுகள் பாக்கி? அவற்றை ஒரு கை பார்க்கும் அச்சுப் பிச்சுகளை எல்லாம் 'தேச பக்தர்கள்' என்று தட்டிக் கொடுக்க ஒரு தலைவர் வேண்டாமா?

## மோ 'தல்'

அண்டை மாநிலமான குஜராத்தில் கிறிஸ்துவர்கள் அலைக் கழிக்கப்பட்டால் நாங்கள் பார்த்துக் கொண்டு சும்மா இருப்போமா? அதுவும் மும்பையில் இருந்து கொண்டு 'கம்'மென்றிருப்பது 'வீரத்து'க்கே இழுக்கல்லவா? பார்த்தார்கள் லோக்கல் 'பஜ்ரங்தள்' வீரர்கள். போரிவிலியில் இரண்டு ஹவுஸிங் சொஸைட்டிகளில், கிறிஸ்துவர்களின் புது வருடக் கொண்டாட்டங்கள் 'களை' கட்டுகையில் இவர்கள், புகுந்து ரகளை செய்திருக்கிறார்கள். விருந்துக்கு வந்தவர்கள், மருந்துக்குக் கூட கௌரவமான உடைகளைப் போட்டுக் கொண்டு வரவில்லை என்பது இவர்கள் வாதம். 'விழா ஒழுங்காக நடக்க வேண்டுமென்றால் 50,000 ரூபாய் கொடுங்கள் என்று ஆரம்பித்து, பேரத்தை முப்பத்தைந்தாயிரத்தில் முடித்தார்கள். 'செக்' வாங்குவதில்லை; 'காஷ்' ஆகக் கொடுங்கள் என்றார்கள்; நாங்கள் ஒப்புக் கொள்ளாததால்தான் தகராறு' என்கிறார்கள் அவர்கள். கலாசாரக் காவலர்கள் எல்லாவற்றுக்கும் ஒரு விலை வைத்திருக்கிறார்கள்!

## பாந்த்ராவில் பயங்கரம்

பொழுது விடிந்தால் ஒரு கொலை, சில பல கொள்ளைகள் என்பது மும்பையில் சகஜமாகிவிட்டது. ஆனால் வர வர எதற்காக, ஏன் இந்தக் கொலைகள் என்பதுதான் விசித்திரமாகி வருகிறது. பாருங்களேன்... பாந்த்ராவில், தன் ஃப்ளாட்டில், செல்ல பொமரேனியன் நாய்க்குட்டியுடன் விளையாடிக் கொண்டிருந்த 13 வயது ஹன்னா சோட்டானியை கழுத்தை நெறித்துக் கொல்ல என்ன காரணமென்றே யாருக்கும் தெரியவில்லை. எதிர்த்த கப்போர்டில், நூறு ரூபாய் கட்டு ஒன்று கேட்பாரற்றுக் கிடந்ததாம். நாய்க் குட்டியை வேறு ஷூ லேசால் குரல் வளையை நெருக்கிக் கொன்றிருக்கிறார்கள். 'அறிமுகமற்றவர்களுக்கு என் பெண் கதவைத் திறக்கவே மாட்டாள்; இது தெரிந்தவர்களின் சதிதான்' என்று 'ஜிம்'முக்கு சென்றிருந்த அம்மா விம்முகிறார். வீட்டைப் பூட்டினாலும் பயங்கரம், வீட்டில் மனிதர்கள் இருந்தாலும் பயங்கரம்,

பல்லாண்டு வாழ்க!

தெரிந்தவர்களாலும் தொல்லை, தெரியாதவர்களாலும் தொல்லை என்றிருந்தால் எங்கே, எப்படித்தான் வசிப்பது என்று மும்பைவாசிகள் கலங்கிப் போயிருக்கிறார்கள்.

## ரிஸர்வேஷன் பிரச்னைகள்

பிற்பட்ட வகுப்பினருக்கு இருக்கும் ''ரிஸர்வேஷன்''களெல்லாம் தனக்கும் வேண்டும் என்று, அவுரங்காபாத்திலிருந்து ஆஜாத் மைதான் நோக்கி போராடப் புறப்பட்ட 'பஞ்சாரா கிராந்திதள் (அப்படி ஒரு 'தள்'ளா?) காரர்கள், முதல் வகுப்பு ''ரிஸர்வேஷன்'' வைத்திருந்த ஏராளமான டூரிஸ்டுகளை, பூட்டிய இரண்டாம் வகுப்பு பெட்டி

யில் ஓரிரவு சிறைவாசம் அனுபவித்து போராட வைத்தார்கள்... ச்சொ... ச்சொ... ''பாத்ரூம் கூடப் போக முடியவில்லை'' என்று பொருமினார், இவர்கள் குடித்து விட்டு செய்த கலாட்டாவில் அரண்டிருந்த ஒரு ''டச்'' போட்டோகிராஃபர். 'அஜந்தா எல்லோராவில் அனுபவித்த இரண்டு நாள் சொர்க்கத்தை இந்த ஓரிரவு நரகம் மறக் கடித்து விட்டதே' என்று யு.எஸ். பேரா சிரியை புலம்புவது, 1999ஐ ''விசிட் இண்டியா இயர்'' ஆக அறிவித்திருக்கும் டூரிஸம் டிபார்ட்மெண்ட் காதில் விழுமா?

## காயம் யாருக்கு?

'**செ**குலரிசம்' என்றால் இதுவல்லவோ 'செகுலரிசம்'? 'மகேஷ் பட்'டின் (கடைசி) பட மான 'ஜக்ம்' (காயம்) ஐச் சொல்கிறோம்... இஸ்லாமுக்கு விரோதமானது என்று சவுதி அரேபியாவில் இதற்குத் தடை விதித் திருக்கிறார்கள். இந்து மதத்தின் எதிரி என்று இங்கேயும் தடை விதிக்கும் முயற்சிகளில் வழக்குப் போட்டிருக்கிறார் பிரதீப் என்ற இளைஞர் முன்னேற்றக் குழுத் தலைவர் ஒருவர். இந்தத் தலைவலிகள் போதாதென்று, இவரது தந்தையான 'நானுபாய் பட்' புதுப் பிரச்னைகளைக் கிளப்பியுள்ளார். 'என் கதையைத்தான் என் படங்கள் மூலமாகச் சொல்கிறேன்' என்று மார்தட்டிக் கொண்டு, ''I am a bastard so what...'' என்று பேசி வந்தாரல்லவா? இப்போது அவரது தந்தையே, ஒரு தின சரியில், ''எனக்கு illegitimate குழந்தைகளே கிடையாது'' என்று அறிவித்து, தம் இரண்டு மனைவியர், ஆறு குழந்தை களைப் பற்றிய ''ஃபாமிலி ட்ரீ'' ஒன்றை வெளியிட்டிருக்கிறார். குடும்பம் முழுவதுமே (பப்ளி சிடி) ஸ்டண்ட் மாஸ்டர்கள் தான் போலும்!

## அப்பப்பா...

''**நா**ன் அவ்வளவு பெரிய ஆர்டிஸ்டெல்லாம் இல்லை; என்னுடைய வனவிலங்கு புகைப்படக் கண்காட்சியைப் பார்ப்ப தற்கு ஐந்து ரூபாய் நுழைவுக் கட்டணம் கொடுத்தெல்லாம் யாரும் வரமாட்டார் கள்'' என்று சொல்லி, கண்காட்சியை நுழைவுக் கட்டணம் வசூலிக்கும் NGMA ஹாலி லிருந்து, இலவச என்ட்ரி உள்ள ஜெஹான் கிர் ஆர்ட் கேலரிக்கு மாற்றிய பெரிய இடத் துப் பிள்ளை யார் தெரியுமா? உதவ் தாக்கரே தான்! தம் குறை நிறைகளைத் தெரிந்து வைத்திருக்கிறாரே... அதுவே பாராட்டப்பட வேண்டிய விஷயம்தான்; 'அப்பா'வின் பெரு மையான நிழலில் குளிர் காய நினைக்கும் பப்பாவாக இல்லாமலிருக்கிறாரே... அது இன்னும் அதிகமாகச் சந்தோஷப்பட வைக் கும் விஷயம்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# 94

**தா**ம் கொடுத்த ஸ்ரீலக்ஷ்மி பிரசாதத்தை இந்திரன் அலட்சியப் படுத்திவிட்ட கோபத்தில் சபித்தார் துர்வாசர்:

"ஏய்! என்ன ஐச்வர்யச் செருக்கு உனக்கு...? நான் கொடுத்த அந்தத் தாயார் பிரசாதத்தை யானையிடம் கொடுத்து காலின் கீழ்ப் போட்டுத் தேய்க்க வைக்கிறாயா...? இப்போதே உன் ஐச்வரியம் மொத்தமும் உன்னை விட்டு அகல வேண்டும்! மொத்தமும் பாற்கடலில் போய் விழுந்து விட வேண்டும்!" என்று உடனே சாபம் கொடுத்து விட்டார்.

தாயார் பிரசாதம் கையை விட்டுப் போனவுடனே கோபம்தான்; மஹா கோபம்! மொத்த ஐச்வர்யமும் போகணும் என்று சொல்லி விட்டார்; – கிடுகிடுவென்று மொத்தமும் போய் விட்டது!

தாடகையின் மார்பிலே ராமனின் பாணம் எப்படிப் பாய்ந்தது என்று கம்பன் வர்ணிக்கிறான் பாருங்கள். ஒரு மஹரிஷி சாபம் கொடுத்தால் அந்தச் சாபம் எவ்வளவு வேகமாகப் போகுமோ, அதைக் காட்டிலும் வேகமாகப் போயிற்றாம்!

இங்கேயிருந்து ஒருத்தர் பத்ரிகாசிரமத்துக்குப் போய் மஹரிஷியிடம் அபசாரம் பண்ணி விட்டார். அப்புறம் இங்கே வந்து துஷ்பிரசாரம் பண்ணுகிறார் – அந்த மஹரிஷியைப் பற்றி... பத்ரிக்குப் புண்யம் சம்பாதிக்கப் போய் இப்படி அபசாரம்!

இங்கே வந்து அபசாரம் பண்ணியதை அங்கே அவர் ஞான திருஷ்டியிலே பார்த்தார். 'இவன் நம்மைப் பற்றி துஷ்பிரசாரம் பண்ணுகிறானே... பஸ்மோ பவ!' என்றார். அந்தச் சாபம் என்ன மெதுவாக டெல்லிக்கு வந்து ஜி.டி. எக்ஸ்பிரஸைப் பிடித்து அப்புறமாகவா வரும் இங்கே...?! உடனே இங்கே இவர் பஸ்மமாக வேண்டியதுதான்! அனுக்கிரஹ வாக்கும் அப்படித்தான் 'சுகிபவா'ன்னா... உடனே சுகம்தான்!

அப்படி அங்கே துர்வாசர் சாபம் கொடுத்தவுடனே எல்லாம் போய் விட்டது! ஐச்வர்யம் எல்லாம் போய் முப்பத்து முக்கோடி தேவர்களும் உடுத்தியிருக்கிற வஸ்திரத்தோடு நிற்கிறார்கள்! செய்வதறியாது திகைக்கிறார்கள்... துர்வாஸர் திருவடியில் விழுந்து அடிபணிந்து, "அபுத்திபூர்வமாகத் தெரியாத்தனமாகப் பண்ணி விட்டேன்; என்னை மன்னிக்கணும்" என்று கேட்டான் இந்திரன்...

"என்ன நினைத்துக் கொண்டிருக்கிறாய் நீ...' நான் என்ன வசிஷ்டரா? இல்லை என்னை பிருஹஸ்பதி என்று நினைத்துக் கொண்டிருக்கிறாயா...' நீ போடுகிற நமஸ்காரத்துக்கெல்லாம் மயங்கிப் போய் மாறிப் போவதற்கு...! துர்வாஸர் என்று என்னைத் தெரிந்து கொள் நீ... என்னிடத்தில் இந்த வணக்கமெல்லாம் விலை செல்லாது. கொடுத்தது கொடுத்ததுதான்!" என்று கூறி மீதி மஹரிஷிகளையும் ஒரு பிடி பிடித்து இழுக்கிறார் துர்வாஸர்!

என்ன பண்ணுவான் இந்திரன், பாவம்! முழிக்கிறான்! என்ன பண்ணுவதென்றே தெரியவில்லை அவனுக்கு. அங்கேயிருந்து வந்து பரமாத்மா எம்பெருமானை முன்னிட்டு அவனிடத்திலே சரணடைந்தார்கள்.

சரணாகத வத்ஸலனான பரமாத்மா உபாயம் சொல்கிறான்: "அந்த மந்தர பர்வதத்தை எடுத்து வந்து பாற்கடலிலே இட்டுக் கடைந்தால், சுலபமாக வந்துவிடும் எல்லாம்..."

அப்படியானால் சரி, என்று உடனே இந்த முப்பத்து முக்கோடி தேவர்களும் மந்தர பர்வதத்தைப் போய்த் தூக்குகிறார்கள். அசைக்கவே முடியலை! என்ன பண்ணுகிறார்கள்...?' மறுபடியும் நாராயணனிடத்திலே ஓடி வருகிறார்கள்.

''சுவாமி, அசைக்கவே முடியலையே...!''

''இதைப் போய் நான் சொல்லித் தர வேண்டுமா...? ஏதாவது காரியம் ஆக வேண்டுமானால் விரோதிகளையும் நம் பக்கத்திலே சேர்த்துக் கொள்ள வேண்டும்...'' என்று பகவான் உபாயம் சொல்கிறான் பாருங்கள்:

''அதுதான் சாதுர்யம். உங்களில் இரண்டு பங்கு இருக்கிறார்களே... நீங்கள் முப்பத்து மூன்று கோடி என்றால் அவர்கள் அறுபத்தாறு கோடி!

''இதிலிருந்தே தெரிந்து கொள்ளலாம் - உலகில் நல்லது குறைவு; தீயவை அதிகம்! நம்மிடத்திலேயும் நல்ல குணங்கள் குறைவு. தீமைகள் அதிகம்.

துஷ்டர்கள் - துரியோதனாதிகள் நூறு பேர்! பாண்டவர்கள் ஐந்து பேர்...

ஆகையினாலே அறுபத்தாறு கோடி அசுரர்களையும் கூப்பிட்டுக் கொள்ளுங்கள்' என்றான். ஆக 99 கோடி பேர்... எல்லோருமாகச் சேர்ந்து அந்தப் பர்வதத்தை மெதுவாகத் தூக்கி, அங்கேயிருந்து கொண்டு வந்து நடு சமுத்திரத்திலே வைத்தார்கள். அது உள்ளே போய்விட்டது!

அது மூழ்கிப் போகுமே என்கிற ஞானமே இல்லையே இந்திராதி தேவர்களுக்கு...! ஏன்...?

எவ்வளவுதான் ஞானியாக இருந்தாலும், படிப்பு இருந்தாலும்... ஐச்வர்யம் அவர்களை விட்டுப் போய் விட்டதானால் எல்லாம் போய் விடுகிறது! ஐச்வர்யம் இருக்கும்வரை எல்லாம் இருக்கும்... அது கொஞ்சம் போய் விட்டால், பந்து ஜனங்களெல்லாம் விரோதியாக மாறி விடுவார்களாம்; எல்லோருமே வெறுத்து ஓடுவார்களாம். ஆனால் இந்த ஐச்வர்யம் இருக்கிறதே... அது வருவதும் தெரியாது; போவதும் தெரியாது. வரும்போதும் சொல்லி விட்டு வராது; போகும்போதும் சொல்லி விட்டுப் போகாது! வரும்போது தேங்காய்க்குள் தண்ணீர் மாதிரி வரும். தேங்காய்க்குள் தீர்த்தம் வருவதை நாம் பார்க்கிறோமா...! போகிறபோது, யானை சாப்பிட்ட விளாம்பழம் அப்படியே முழுசாக அதன் சாணத்தில் வெளியேறுகிற மாதிரி போய்விடுமாம்...!



தேவர்களை நாம் ஸ்தோத்திரம் பண்ணு கிறோம்... ஆனால் இந்த இந்திராதி தேவர் களுக்கு என்ன நிலைமை பாருங்கள்... ஐச் வர்யம் விட்டுப் போனதனாலே, மலையை சமுத்திரத்திலே இறக்கினால் உள்ளே போய் விடும் என்கிற ஞானமும் இல்லை!

அப்படி உள்ளே போனவுடனே, விச்வ சப்தத்தினால் சொல்லக்கூடிய அந்த கூர் ருபதரன், கூர்மாவதாரம் பண்ணி, சமுத்திரத் துக்கடியிலே போய் அந்தப் பர்வதத்தைத் தூக்கி, அப்படியே நிறுத்துகிறான்... இதற்கு மேல் என்ன பண்ணுவது...? கயிறு வேண் டுமே கடைய... அதற்காக வாஸுகி என்ற பாம்பைக் கயிறாக்கி, அதைப் போட்டு



– பர்வதவர்த்தினி

இழுத்தால்...

இப்படி இழுத்தால் அப்படிப் போகிறது; அப்படி இழுத்தால் இப்படிப் போகிறது!...

கடைய வேண்டுமே வேகமாக... எப்படிக் கடைவது...? மத்தின் மேலே ஒரு பிடிமானம் வேண்டாமா... மேலே ஒரு கயிறு போட வேண்டாமோ...?

இங்கே, மேலே அந்த சிகரத்தை அமுக்கிப் பிடிப்பதற்கு எதுவும் இல்லையே என்று கேட்டபொழுது, பர்வதத்தைத் தாங்குகிறானே பரமாத்மா – கூர்ம ரூபியாக- அவனே கை கொடுத்து மேலேயும் அமுத்திப் பிடித்துக் கொண்டான். "இப்போது கடையுங்கள்" என்றான்.

கடைந்தால்... மெதுவாக ஓர் அலை யோடு இன்னொரு அலை சேர்கிறது... கடைய முடியவில்லை! அப்போது பர மாத்மா, தானே அசுர பலமாகவும் தானே தேவ பலமாகவும் மாறினான் – லோகமெல் லாம் நிறைந்திருக்கிற பரமாத்மாவுக்கு இது என்ன பெரிய சமாசாரம்... பகவான்தான் கடைகிறான்! மஹரிஷிகளெல்லாம் பார்க் கிறார்கள்.

ரொம்ப சிரமப்பட்டுக் கடைகிறானா...! வியர்வை கொட்டுகிறதாம் பரமாத்மாவுக்கு! எவனுக்கு வியர்வை என்பதே கிடையாதோ, அவனுக்கே சிரமப்பட்டு சிரமப்பட்டு வியர்வை... அப்படி கடைகிறான்!

ஒருத்தர் கேட்கிறார்... இவ்வளவு சிரமம் ஏன்...? அவன் ஏன் சிரமப்பட வேண்டும்?

இதராளுக்காக ஒரு வேலை செய்கிறவர் "என்ன அவசரம் ஒரு மாதம் போகட்டுமே..." என்பார்கள். ஆனால் அதிலே தங்களுக்கு ஒரு லாபம் இருந்தது என்று வைத்துக் கொள் ளுங்கள்... "இவ்வளவு கால தாமதமா...? இப் போதே போகலாம் வாருங்கள்" என்று கிளம்பி விடுவார்கள் – ஏனென்றால் அதிலே அவர்களுக்கு ஒரு லாபம் இருக்கிற தனாலே...

இதிலே பரமாத்மாவும் விதிவிலக்கில்லை என்று சொல்லி விட்டார்கள்! ஏனென்றால் அவன் காரணம் என்றால் நாம் காரியம்! அவனிடத்திலே இருக்கிற குணம்தான் நம்மிடத்திலேயும் இருக்கும்!

ஆகையினாலே பரமாத்மா, காரியம் ஆக வேண்டும் என்பதற்காக, உபாயத்தையும் சொல்லி விட்டுத் தானே கடைகிறான்! எதற்காகக் கடைகிறான்...?

'தேவர்கள் அமுதுண்ண, அமுதில் வரும் பெண்ணுண்டானே!' என்று ஆழ்வார் சொல்கிறார் இங்கே!

தேவர்களுக்கெல்லாம் அல்ப சாரமான அமிர்தத்தைக் கொடுத்துவிட்டு, முக்கிய மான விஷயத்தைத் தான் எடுத்துக் கொண் டான்! யாரை...? மஹாலக்ஷ்மியை!

ஆகையினாலே, அமுதில் வரும் பெண் ணுண்டபிரான் ஆனான்!

மஹாலக்ஷ்மியைத் தாம் அடைவதற் காக பரமாத்மா இவ்வளவு சிரமப்பட்டான். என்றால் இங்கே இன்னொரு சாஸ்திரத் தையும் தெரிந்து கொள்ள வேண்டும்.

லக்ஷ்மியை அடைவதற்காக பகவானே அவ்வளவு சிரமப்பட்டான் என்றால் நாமெல்லாம் எவ்வளவு சிரமப்பட வேண்

டும்! ஆகையினால்தான், எவ்வளவு பரிசிரமப்பட்டால் லக்ஷ்மி நம்மை வந்து அடைவாள் என்பதை அவனே காட்டிக் கொடுத்திருக்கிறான்...

'நானே சிரமப்படுகிறேன் பாருங்கள்' என்று பரமாத்மா பாற்கடலைக் கடைந்த போது எத்தனையோ வஸ்துக்கள் அதிலிருந்து தோன்றின. அப்போது உத்தமோத்தமமான சந்திரன்கூட அதிலே தோன்றினான்.

மஹாலக்ஷ்மிக்கு அர்ச்சனை பண்ணுகிறோம்... சந்திர சகோதர்யை நம: என்று வரும் அதிலே... கவனிக்க வேண்டும்... சந்திர சம்பந்தம் அவளுக்கு -

லக்ஷ்மி சஹஸ்ரம் என்றொரு ஸ்துதி. அரசாணி பால வெங்கடாத்ரி என்பவர் பண்ணியது. அவர் காஞ்சிபுரத்துக்கு அருகே அரசாணிபாலை என்கிற இடத்திலே இருந்தார்... 1008 சுலோகங்கள் கொண்ட இந்த ஸ்துதியை அத்யாஸ்சர்யமாகப் பண்ணியிருக்கிறார். இதை இயற்றியவுடனே அவருக்கு இழந்திருந்த கண்பார்வை திரும்பி விட்டதாம்.

அதிலே அவர் சொல்கிறார்... "அம்மா...! நீ அனுக்ரஹம் பண்ண வேண்டாம்; உன்னோடு சம்பந்தப்பட்டவர்களுடைய சம்பந்தம் இருந்தாலும் போதும்" என்கிறார். "அந்த சம்பந்தமே பெருமை ஏற்படுத்தும்" என்கிறார். எப்படி...? லக்ஷ்மியோடு சம்பந்தப்பட்ட சகோதரன் சந்திரன். சந்திரனுக்குரிய கிழமை திங்கள். அடுத்து வரும் செவ்வாய்க் கிழமை பாருங்கள்... தோஷமான நாள். ஆனால் மங்களவாரம் என்று பெயர் - லக்ஷ்மியோடு சம்பந்தப்பட்ட சந்திரனுக்கு அருகே வருவதனாலே!

'என்னே உன் பெருமை!' என்கிறார் லக்ஷ்மி சஹஸ்ரத்திலே...

அப்படி விசேஷமுடைய லக்ஷ்மி விசேஷமாகத் தோன்றினாள்... அமுதத் திருமகள் என்று இவளை முன்னிட்டு எம் பெருமான் சேர்ந்திருக்கிறான். இப்படி லக்ஷ்மியோடு சேர்ந்திருப்பதனாலே அவளை முன்னிட்டுத்தான் நாம் பகவானுடைய திருவடியை ஆச்ரயிக்க வேண்டும் என்பது தெரிகிறது.

இந்த லக்ஷ்மி என்ன பண்ணினாள்...? அத்தனை பேர் முன்னிலையிலும், எல்லோரும் பார்த்துக் கொண்டேயிருக்கிறபோது, பகவானுடைய வக்ஷஸ்தலத்திலே ஏறி உட்கார்ந்து கொண்டு விட்டாள். **இதைத்தான் விஷ்ணுபுராணத்திலே** பராசரர் **லக்ஷ்மி கல்யாணம் என்று குறிப்பிடுகிறார்!**

அதாவது, லக்ஷ்மி கல்யாணம் என்றால் என்ன...? எல்லோரும் பார்த்துக் கொண்டேயிருக்கிறபோது, விஷ்ணுவினுடைய வக்ஷஸ்தலத்திலே மஹாலக்ஷ்மி நிர்பயமாக, வெட்கமில்லாமல் ஏறி உட்கார்ந்தாள்.

எல்லோருக்கும் ஒரு சந்தேகம் வரும். இந்த மாதிரி மஹாலக்ஷ்மி பண்ணலாமா...? - இத்தனை பேர் பார்க்கையில் ஏறி மஹாவிஷ்ணுவின் வக்ஷஸ்லத்தில் உட்காரலாமா...? அந்த பகவான் முன்னிலையில் எல்லோருமே ஸ்த்ரீகள்தான். அவன் மட்டுமே மஹா புருஷன் என்பதால் மஹாலக்ஷ்மி அவ்வாறு உட்கார்ந்தாள்.

அப்போது இந்த தேவதைகள் எல்லோரும் ஸ்தோத்திரம் பண்ணுகிறார்கள். விசேஷமாக மஹாலக்ஷ்மியை.

நாமும் லக்ஷ்மியோடு கூடிய நாராயணனைச் சரணடைந்து, கல்யாண குணங்களை அடைவோம்; குறையொன்றுமில்லாத நிறை வாழ்வு அடைவோம்.




– அம்பை தேவா

**இரண்டாம் பாகம் நிறைந்தது.**

# ராகு கேது ரங்கசாமி

“**சா**மி, நான் இப்பத்தான் விஷயம் கேள்விப்பட்டேன். பாட்டிக்கு இப்ப எப்படியிருக்கு?'' என்று வந்து நின்றான் ரங்கசாமி. சட்டென்று வாயில் புகையிலை கசந்தாற் போலிருந்தது. ஆத்திரத்தில் கண் சிவந்து உடலே கிடுகிடுவென்று நடுங்கியது.



4

''எல்லாம் உன்னாலதான்யா''

''சாமி கோவத்துல இருக்கிங்க'' என்று ரங்கசாமி புன்னகைத்தான். ''நல்லவேளை, உங்ககிட்ட பணம் குடுத்து வெச்சிருந்தேன். இப்ப அவசர ஆத்திரத்துக்கு உதவிச்சா இல்லையா.''

''அவசரமாவது ஆத்திரமாவது, என் அவசரத்துக்கும் ஆத்திரத்துக்குக் காரணமே அந்தப் பணம்தான். அதுனாலதான் பாட்டிக்கு உடம்புக்கு வந்தது.''

''எல்லாம் காக்கா உக்கார பனம்பழம் விழுந்த கதைதான். நல்லதுக்குக் காலமில்ல இது.''

''சரி, பாட்டி வீட்டுக்கு வரட்டும்... பணத்தை வாங்கிக்கங்க.''

''ஏன்?''

''ஏனா? நான் வீட்டை விக்கிறதா இல்ல.''

''என்னாச்சி சாமி?''

''நாம எதுவுமே பேசல. அக்ரிமெண்ட் போடல. அதுக்குள்ள எப்படி ரியல் எஸ்டேட் போர்டு மாட்டுவ நீ?''

''அதான் கோவங்களா? நம்ம சாமி தானே, அக்ரிமெண்ட் பின்னால போட்டுக்கிறலாம்னு பாத்தேன். இப்பவும் நான் உங்களை நம்பறேன். அந்த நம்பிக்கைலதான், எந்த சாட்சியும் இல்லாம பணம் குடுத்திட்டுப் போனேன். போனேனா இல்லியா?''

இப்படிப் பேசிப் பேசித் தானேடா என்னைக் மழுங்கடிச்சே நாயே, என்று கத்த வேண்டும் போலிருந்தது. ஒழியறான், இவன்ட்ட ஏன் வெட்டியாப் பேசணும். வார்த்தையை வளர்த்துக்க வேண்டாம், என்றிருந்தது.

''சரி சாமி. அப்ப நான் குடுத்த பணத்தை ரெண்டு வட்டி போட்டு திருப்பிக் குடுத்திருங்க.''

''ரெண்டு வட்டின்னா?''

''அதான் நாங்க குடுக்கறது வாங்கறது,

ரூபாய்க்கு ஒரு நாளைக்கு ரெண்டு பைசா."

"பரவால்ல அவ்ளதானே" என்றான் அவசரமாய். "அப்ப எவ்ள வருது?"

"ஒருநாளைக்கு வட்டி ரெண்டாயிர ரூவா."

"அவ்ளவா!" என்றான் மலைப்பாய்.

"பின்ன பிசினெஸ்னா சும்மாவா?"

சீச்சி, என்று சபேசன் தன்னையே வெறுத்துக்கொண்டான். அதென்ன, சனி ஒழியறதுன்னு அப்பிடி வேகமாய்த் தலை யாட்டினோம்.

'இங்கபார் ரங்கசாமி, நீங்க இடத்துக்கு அட்வான்ஸ்னு சொல்லிப் பணம் குடுக்க லியே, இப்ப எப்படி வட்டி கேப்பீங்க? முறையாப் பேசணுமில்ல?"

"முதல்ல அப்பிடிச் சொல்லல, ஒத்துக் கறேன். பின்னாடி சொல்லிட்டேன்ல, எப்ப உங்ககிட்ட நான் விவரம் சொல்லிட் டேனோ, அப்பவே பணத்தைத் திருப்பிக் குடுத்திருக்கணுமே நீங்க, இப்ப அஞ்சி நாளாச்சி. அதும்படி நீங்க திருப்பிக் குடுக்கல... நான் போர்டு போட் டேன்."

மேற்கொண்டு அவ னிடம் என்ன பேச, என்று சபேசனுக்குத் தெரியவில்லை.

"சாமி இப்பவும் சொல்றேன். பயப் படாதீங்க. நான் அடாவடி ஆள் இல்ல. மொதல்ல பெரியம்மா எழுந்து நடமாடட் டும். நாம சாவகாசமா உக்கார்ந்து பேசுவம். ரெண்டு வட்டின்றது எங்க நடைமுறை வட்டி. உடனே போட்டுப் பெரட்டினாக் கட்டுப்படி ஆவும். இல்லாட்டி ஆவாது."

"உங்க டீலிங்ஸ் நல்லா இல்ல ரங்கசாமி. நான் ஏமாளி இல்ல" என்று வேறு கோணத்தில் ஆரம்பித்தான்.

"ஐய நீங்க ஏமாளின்னு நான் சொன் னேனா?... நானும் ஏமாத்தற ஜாதி இல்ல. வேற எவன்ட்டயாவது மாட்டியிருக்கணும் நீங்க. அதான் என்னைப் பத்தி உங்களுக்குத் தெரியல. பேசறதுக்கு மின்னயே ஒரு லட்ச ரூவா குடுக்கல நான்? என் னைப் போய் இப் பிடிப் பேசறீங் களே சாமி.

மனுசன்னா நம்பிக்கை வேணும். எனக்கு உங்கமேல இருக்கு. உங்களுக்கு எங்கமேல இல்லை."

"இருக்கட்டும். நம்பி நம்பித்தான் நான் நாசமாப் போனேன்."

"மத்த ஆளுங்க மாதிரி இல்ல நான். உங்களுக்கு இந்த இடத்துல ஒரு ஃபிளாட் தரேன். கட்டி முடிக்கிறவரை பக்கத்துல நல்ல இடமா வாடகைக்கு வைக்கிறேன். இடத்துக்குப் பணம். தவிர என் லாபத்துல பங்கும் தரேன்றேன். இல்லியா?"

"நீ எதுவும் தர வேணாம், ஆளை விட்டாப் போதும்."

"சாமி அதையே சொல்லிட்டிருக்காதீங்க. இனியும் உங்க பொண்ணு கல்யாணம் இருக்கு. பையன் நல்ல நிலைமைல உக்காரணும். எல்லாத்துக்கும் பணம் வேண்டியிருக்கே."

## எஸ். சங்கரநாராயணன்



"இப்ப என்ன நீயி, விவகாரம் பண்ண ணும்னு வந்திருக்கியா?"

''காலைல வர்றேன். வட்டியோட பைசல் பண்ணி வுட்டுருங்க. இல்லாட்டிப் போலீசுக்குப் போவேன்.''

திக்கென்றது. "போலீசா?"

"வேற வழி? நீங்கதான் அடாவடித்தனம் பண்ணத் தயாராயிட்டிங்களே?"

சபேசன் அவனையே பார்த்துக் கொண்டிருந்தான்.

"வேணாம் சாமி, நாம நண்பர்களாகவே இருப்போம். ஆச்சுங்களா? பெரியம்மா தேறி வரட்டும் முதல்ல. இன்னும் பணம் வேணுன்னாலும் வாங்கிக்கங்க. உங்களை ஏமாத்தறது சுலபம், உங்களை ஏமாத்தன்னு ஆயிரம் பேர் திரியறாங்க, நீங்க என்னைச் சந்தேகப்படறீங்க...'' என்று நிறுத்தியவன், ''எண்ணெய்க்காரன் தெருவுல ஃபர்ஸ்ட் கிளாஸ் வீடு. புதுசு. வாடகைக்கு எடுத்துத் தர்றேன். சும்மா ஒரு வருஷம். அதுக்குள்ள இங்க உங்க ஃப்ளாட் ரெடியாயிருக்கும். ஆயுசுபூரா உக்காந்து சாப்பிடலாம். நிம்மதியா இருக்கலாம். என்னை அப்ப மனசார வாழ்த்துவீங்க'' என்றான். திரும்பத் திரும்ப அவனிடம் ஒரே விஷயத்தைப் பேச சபேசனுக்கு அலுப்பாய் இருந்தது.

**பா**ட்டி தேறி வர ஒருவாரம் ஆகி விட்டது. முதலை வாயிலிருந்து மீண்டாற் போல, மரணத்திலிருந்து மீண்டு விட்டாள். முகத்தில் தெளிவு வந்திருந்தது. மூச்சு சீர்ப் பட்டிருந்தது. எழுந்து உட்கார முயன்றாள். மாப்பிள்ளை முன்னால் அவள் இப்படிப் படுத்துக் கிடந்ததே இல்லை. வெட்கமாய்ப் போயிற்று.

பாட்டிக்குத் தெளிவு வந்ததும்தான் சபேசனுக்கு ஆசுவாசம் வந்தது. ஐயோ அவள் இல்லாமல் எது முடியும் என்னால்? அந்த வீட்டின் அரசி அவள். உத்திரத்துத் தூண் அவள். இனி எந்தப் பிரச்னையும் தூசி. சமாளிப்பேன், என்று தெம்பு வந்தது.

வெளியே வந்து பக்கத்துக் கடையில் வெற்றிலை, பன்னீர்ப் புகையிலை அதக்கிக் கொண்டபோதுதான் ரங்கசாமி வந்து அவனைச் சந்தித்தான்.

**ர**ங்கசாமியை அவ்வப்போது நினைத்துக் கொள்ள வேண்டியிருந்ததே தவிர, அவன் பணத்தைத் திருப்பித் தர முடியும் என்று தோணவில்லை. எச்சரித்து விட்டான் அவன். பணத்தைத் திரும்பத் தரத் தாமதிக்கிற ஒவ்வொரு நாளும் வட்டி என ரெண்டாயிரம் அதிகப்படி ஆகிறது - பயமாய் இருந்தது அவனுக்கு.

இது பற்றி மேலே யோசிக்க முடிய வில்லை. பாட்டியிடம் யோசனை கேட்க வகையில்லை. அவளிடம் அதிர்ச்சியூட்டு கிற அளவில் எதையும் இப்போது பேச முடியாது. சரி, பிறகு பார்க்கலாம், என்று தள்ளிப் போட முடியாதபடி ரங்கசாமி இடுக்கிப்பிடி போட்டிருந்தான்.

பாட்டி திரும்ப வீட்டுக்கு வர இன்னும் நான்கு நாளாகும் போலிருந்தது. அதற்குள் ரங்கசாமி நெருக்கிய நெருக்குதலில், சபே சன் வீட்டைக் காலி செய்ய வேண்டியிருந் தது. "சாமி சும்மா வாங்க" என்று வற்புறுத்தி அழைத்துப் போய், ரங்கசாமி எண்ணெய்க் காரன் தெரு வீட்டைக் காட்டினான். புது ஃபிளாட். பளபளவென்று கிடந்தது. ஈரம் பாரித்த- ஒழுகுகிற தன் வீட்டுக்கு எவ் வளவோ மேல், என்று ஏனோ தோன்றியது சபேசனுக்கு. ரங்கசாமியின் பைக்கை எடுத்துப் போய் ரமணி இதாவைக் கூட்டிக் கொண்டு வந்து வீட்டைக் காட்டினான். குழந்தைகளுக்கு வீடு ரொம்பப் பிடித்துப் போயிற்று. ஆளுக்குத் தனித்தனி அறைகள் இருந்தன. "அப்பா சரின்னு சொல்லிருங் கப்பா" என்று இதா அப்பாவின் கையைப் பிடித்துக் கொண்டாள். அவள் சிநேகிதி களை இனி தைரியமாய் வீட்டுக்கு அழைக்க லாம், என்றிருந்தது.

ஒரு பெருமூச்சுடன் அம்மாவும் தலை யாட்டினாள்.

வீடு மாற்றிய விஷயம் பாட்டிக்குத் தெரி யாது. எப்படிச் சொல்ல? தெரியவில்லை. இப்போதுதான் பெரும் அதிர்ச்சியில் நிலம் சரிந்தாற்போலச் சரிந்து சீர்ப்பட்டிருக் கிறாள். சரி, தெரியும்போது தெரியட்டும்... குழந்தைகளிடமும், பாட்டியிடம் சொல்ல வேண்டாம் இப்போது, என்று எச்சரித் திருந்தான்.

ரங்கசாமி குழையக் குழையப் பேசி னான். அவனிடம் அக்ரிமென்ட் போடவும், அட்வான்ஸ் பத்தாது என்றும் சபேசன் பேச ஆரம்பித்திருந்தான். ''நீங்க ஃப்ளாட்னா கட்டுங்க, எதுனா கட்டுங்க, எனக்கு அதைப்பத்தி இல்ல. எனக்கு ஒரே பேமென்ட்ல செட்டில் பண்ணிறணும். அறுபது. இந்தக் கைல பணம். அத்தோட பத்திரம் பதிஞ்சிரணும். தெரியுதா?'' என் றான் அழுத்தமாய்.

"அப்ப அக்ரிமென்ட் அதுக்கு போட்டுக

குவம். ஒரு ஆறுமாசம் அவகாசம் குடுங்க சாமி."

"எதுக்கு? ஒரு மாசம்தான்... அதுக்குள்ள செட்டில் பண்ணிருங்க. உங்க பிரச்னை எதையும் நான் காதுல வாங்கிக்க மாட்டேன். எனக்குத் தெரியவும் வேணாம்."

"அதுசரி சாமி. நியாயம். நாளைக்கே ஒரு மாசம்னு அக்ரிமெண்ட் போட்டுறலாம்'' என்று போனவன் வரவில்லை. பைக்கை ரமணியிடம் இருக்கட்டும் என்று நாலு நாள் பெட்ரோல் போட்டுக் கொடுத்திருந்தான் ரங்கசாமி. அது போதும் ரமணிக்கு. அவன் நண்பர்கள் முன்னால் பேச தனி உற்சாகம் வந்திருந்தது இப்போது.

ரங்கசாமியின் சாயம் ரெண்டு நாளில் வெளுத்தது.. வீட்டுக்காரர் வந்து அட்வான்ஸ் ஐம்பதாயிரம் கேட்டார். "அட்வான்ஸ், வாடகை, எல்லாம் ரங்கசாமி தருவார்" என்று புன்னகைத்தான் சபேசன். ''என்னய்யா இது, அவரைக் கேட்டா உங்ககிட்ட வாங்கிக்கச் சொல்றாரு, உங்களைக் கேட்டா அவரைக் கை காட்டறீங்க. விளையாடறீங்களா? நாளை காலைல வருவேன், அதுக்குள்ள யாராவது எனக்கு அட்வான்ஸ் தந்தாகணும். இல்லாட்டி சாமானையெல்லாம் வெளில தூக்கி வீசிருவேன்" என்று கத்திவிட்டுப் போனார். திகைப்பாய் இருந்தது.

அன்று சாயந்திரம் ரங்கசாமி வந்ததும் சபேசன் அவனிடம் இதுபற்றிக் கேட்டான். "நல்ல கதையாயிருக்கே, சாமி வீடுதான் பாத்துக் குடுக்க முடியும், அதுக்கு வாடகையும், அட்வான்சும் நானே தரணும்னா எப்பிடி? விட்டா நம்மள மொட்டையடிச்சிருவீங்க போலிருக்கே'' என்று கோபமாய்ப் பேசினான்.

"என்ன ரங்கசாமி இப்பிடிச் சொல்றே?"

''நான் இல்லாட்டி இந்த ஏரியாவுல இப்படியொரு வீடு உங்களுக்கு வாடகைக்கு கிடைக்குமா சாமி?"

"இல்ல."

''அவ்ளதான். நான் வீடு பாத்துத் தரேன்னு சொன்னேன். தந்திட்டேன்...''

"ம்" என்று முனகினான் சபேசன். அவனுக்கு இப்போது தெளிவாக எல்லாம் புரிந்தது. இப்போது ரங்கசாமிக்கு வேண்டியது ஒரே விஷயம்தான் – என் கையில் இருக்கிற மீதிப் பணத்தை நான் என் வீட்டுச் செலவுகள் என்று கரைப்பதை இவன் விரும்புகிறான். பிறகு அவன் கையை எதிர்பார்த்து நான் காத்துக் கிடக்க வேண்டும்.

இன்னும் அக்ரிமெண்ட் போடவில்லை. நீ பாட்டுக்கு ரெடி கேஷ், ரெடி கேஷ்னு கத்துடா. நான் பாட்டுக்குத் தலையாட்டிட்டே இழுத்தடிச்சி, என் வழிக்கு உன்னைக் கொண்டு வரேன், என்பது ரங்கசாமியின் கணக்கு. ஆகா, வாயில் விரல் வெச்சாக்கூட கடிக்கத் தெரியாத குழந்தையாய் ஏமாந்திருக்கிறேன்.

இப்போது என்ன செய்ய? இதிலிருந்து எப்படி வெளியே வர, புரியவில்லை.

இன்னும் கிழவிக்கு நடந்ததெல்லாம் தெரியாது. ரமணியோ, கீதாவோ விஷயத்தின் தீவிரம் தெரியாமல் சந்தோஷமாய் உலா வருகிறார்கள். "இடத்தை வித்தது சரி. அதுல நீங்க ஏமாந்தது உங்க பிரச்னை" என்பான் ரமணி. "சரியான ஆள்கிட்ட நீங்க



விக்கல... அதுக்கு நீங்கதானே பொறுப்பு? விஷயத்தை சரியா டீல் பண்ணாததுதான் பிரச்னை" என்பான்.

இன்னொரு கண்ணி வேறு ரங்கசாமி வைத்திருந்தான். கண்ணி அல்ல, கண்ணி வெடி. நிலத்தைப் பேசி மொத்த விலை தந்து ஒரே பேமெண்ட்டில் தீர்க்கச் சொன்னதால் அவன் ஒரு ஃபிளாட் தரும் ஐடியா, அடிபட்டுப் போகிறது, என்பான் கலபமாய். ஒரு ஃபிளாட் வாங்கிக் கொண்டால், இன்னும் சிக்கல் – அதில் பன்னிரண்டோ, இருபத்தி நாலோ நாற்பத்தியெட்டோ, ஃபிளாட் கட்ட படம் வரைந்து அப்ருவல் வாங்கி, எல்லாம் சபேசன் பெயரிலேயே செய்து, ஃபிளாட் வாங்கப் புது ஆட்கள் வரவர, அந்த அட்வான்சில் கொஞ்ச கொஞ்சமாய் நம் பணத்தை (அறுபது லட்சத்தை) அடைப்பான். அடைப்பானா...? அதுவரை ஒவ்

# லாலுவுக்கு ஒரு சாப்பாட்டு அமைச்சர்!

● வரவிருக்கும் மகாராஷ்டிர சட்டசபைத் தேர்தலைச் சந்திக்க புதுத் தென்புடன் மாநிலம் முழுக்க சுற்றுப் பயணங்களைத் திட்டமிட்டுச் செய்து வருகிறார் சரத்பவார். போகிற இடங்களில் 'மாலை, வேண்டாம்! தேங்காய் அளியுங்கள்!" என்கிறார். தேங்காயை விற்றுக் கிடைக்கிற பணம், மாவட்ட காங்கிரஸ் கட்சிக்குப் போகிறது. 'தேங்காய் விற்று, வரும் பணம் குறைவுதான்; இதனால் கட்சிக்குக் கிடைக்கிற இமேஜை கவனிக்கணும்' என்று கிசுகிசுக்கிறார், ஒரு தொண்டர்!

● லாலு பிரசாத் யாதவ் ஜெயிலில் இருந்த போது, அவருக்குப் பிடித்தமான சிக்கன், மட்டன் மற்றும் இதர அசைவ ஐட்டங்களைத் தான் சாப்பிட்டார். ஜெயிலிலேயே, லாலுவுக்காக, இந்த ஐட்டங்களைத் தயாரித்துக் கொடுத்தவர், ராஷ்டிரிய ஜனதா தள சட்டமன்ற மேலவை உறுப்பினரான அன்வர் அலி. இவருக்கு, லாலுவின் நாருசி மிக நன்றாகத் தெரியும். தமது கைவண்ணம் மூலமே லாலுவுக்கு மிகவும் நெருக்கமாகி, சட்டமன்ற மேலவை உறுப்பினராக மறுநியமனம் பெற்று விட்டார். ''ராமனுக்கு அனுமான் போல, லாலுவுக்கு நான்'' என்று ஸ்டேட்மென்ட் விடுகிறார் அன்வர்! பீகார் அரசியல் வட்டாரத்தில், கிசுகிசுக்கப்படும் அன்வரின் செல்லப் பெயர் : சாப்பாட்டு மந்திரி!

● 'எனது கவிதைகளின் தொகுப்பு' என்ற பெயரில் தமது கவிதைகளிலிருந்து சிறந்த ஐம்பத்தியொரு கவிதைகளைத் தேர்ந்தெடுத்துப் புத்தகமாய் வெளியிட்டார் அவர். முதல் பதிப்பு வெளியானது 1995 ஜூன் மாதம். கடந்த மூன்றரை வருடங்களில் அந்தக் கவிதைத் தொகுப்பின் ஒன்பது பதிப்புகள் வெளியாகி விற்று விட்டன. அந்தக் கவிஞர் பிரதமர் வாஜ்பேயிதான்!

● 'மைசூர்ப் புலி' என்று சிறப்புப் பெற்ற திப்பு சுல்தான் பிரிட்டிஷாரால் கொல்லப்பட்ட (1899

---

வொரு பார்ட்டியுடனும் வீடு கட்ட உடன் படிக்கையில் நான் கையெழுத்திட்டுத் தர வேண்டும். ஏனென்றால் நிலம் என் பெயரில் இருக்கிறது. அதாவது எனக்கும், ஃப்ளாட் வாங்குகிறவர்களுக்கும் உடன் படிக்கை போட்டு, நடுவில் எந்த ஆபத்தும் இல்லாமல் லாபம் மாத்திரம் ரங்கசாமிக்கு! இதில் குளறுபடி என்று நடுவே வந்தால், முட்டிக் கொள்ளப் போவது, நானும் பார்ட்டியும். ஆனால் பார்ட்டியிடம் முன்பணம் வாங்கிக் கொள்வது இவன்... பதில் சொல்ல வேண்டியது நான்! என்ன குரூரம்! நானும், பார்ட்டியும் அவனைக் கெஞ்சி, அவன் நிழலில் வாழ நிர்ப்பந்திக்கப் படுகிறோம்...

ஒரு மாலையில் சபேசன் தான் குடியிருந்த இடத்தைப் போய்ப் பார்க்கப் போனான். அயர்ந்து விட்டான். வீடு பாதி இடிக்கப்பட்டிருந்தது. பதற்றமாய் இருந்தது அவனுக்கு. இன்னும் அக்ரிமென்ட்டே போடவில்லை. தான் சுற்றி வளைக்கப்படுகிறோம். குரல்வளை நெருக்கப் படுகிறோம், என்றிருந்தது. இதற்கு என்ன செய்ய? புரியவில்லை. மயக்கம் வரும் போலிருந்தது.

பிறந்ததிலிருந்து அவன் வாழ்ந்த வீடு. அதை இடிப்பதைப் பற்றி ரங்கசாமி ஒரு வார்த்தைகூடச் சொல்லவில்லை. பார்க்கப் பார்க்க அடிவயிறு பற்றியெரிந்தது. தீயின் நாக்குகள் ஈரமில்லாமல் வயிற்றின் மேற்சுவர்களை நக்கின. ஆ, என்று கண்ணில் ஈட்டி சுமந்து காயம்பட்ட போர் வீரன் போலத் திரும்பி தள்ளாடி நடந்தான். நடக்க முடியவில்லை. அப்படியே மூச்சு வாங்க சிறிது நேரம் நின்றான். நிற்கமுடியவில்லை. வேட்டி யிழந்து நடுத் தெருவில் நிற்கிறாற் போலிருந்தது. கேவலமாய், அவமானமாய் இருந்தது. நெஞ்சில் சோகம் இரும்புக் குண்டாய் மோதியது. நெஞ்சைப் பிடித்துக் கொண்டான்.

ஒரு விஷயம் அப்போது புரிந்தது. வீட்டு வாடகையையோ, அட்வான்ஸையோ தராத ரங்கசாமி, காத்திருந்தாலும் தனி ஃப்ளாட் தரப் போவதில்லை! கேட்டால் 'தர்றேன்னு தான் சொன்னேன். எதை வேணா எடுத்துக்குங்க, அதுக்குத் தக்கன ரேட்டை உங்க பணத்துல கழிச்சுக்கறேன்... ஓசில குடுக்க முடியுமா?' சாமி விட்டா மொட்டையடிச்

மே, நாலாம் தேதி) சம்பவத்தின் நூறாவது ஆண்டை, திப்புவுக்குப் பெருமை சேர்க்கும் வகையில் கொண்டாட முடிவு செய்துள்ளது, கர்நாடக அரசு. திப்பு பிறந்த தேவன ஹள்ளியிலிருந்து, திப்புசுல்தான் ஆட்சி செய்த ஸ்ரீரங்கப்பட்டினம் வரை அமைதிப் பேரணி உட்பட பல நிகழ்ச்சிகள் நடைபெற உள்ளன. ஆனால், 'இந்துக்களைக் கட்டாயப்படுத்தி, மதமாற்றம் செய்த திப்புவுவை கௌரவிக்கக் கொண்டாட்டமா' என்று எதிர்ப்பைக் கிளப்பியுள்ளது பஜ்ரங்தள்!



- பிஜு ஜனதா தளத்தின் தலைவரான நவீன் பட்நாயக்கிற்கு ஒரு பிரச்னை. அவரால், தமது கட்சியின் அடிமட்டத் தொண்டர்களுடன் சரளமாய் பேச முடியாத நிலை. காரணம், நவீன் பட்நாயக்கிற்கு ஒரியா மொழி தெரியாது. இத்தாலிய நாட்டவரான சோனியா, இந்தியில் பேசுகிறபோது, நவீன் பட்நாயக்கால் ஒரியா பேச முடியவில்லையே எனத் தொண்டர்கள் மத்தியில் முணுமுணுப்பு!
- டெல்லி முதலமைச்சர் ஷீலா தீட்சித் ஷாருக் கானின் பரம ரசிகை. சமீபத்தில் போபாலில் உள்ள தம் சகோதரர் வீட்டுக்கு வந்திருந்த போது, ஷீலா தீட்சித், தம் கணவருடன் குச் குச் ஹோடா ஹை படத்துக்குப் போய் வந்தார். 'ஷாருக் பின்னி விட்டார்!' என்று பாராட்டு மழைதான் முதல்வரிடமிருந்து.
- ஜெமினி கணேசன் தமது நாலாவது திருமணத்தின் மூலம் பரபரப்பூட்டினார் என்றால், அடுத்து மும்பையில் அவரது மகள் ரேகா, தம் சுயசரிதை மூலமாக ஒரு கலக்கு கலக்கப் போகிறார். ரொம்ப சென்சேஷன் ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கப்படும் அந்த சுயசரிதையின் தலைப்பு ரொம்ப வித்தியாசமானது: 'யூரேகா!' புத்தகத்தில் 'யூரேகா! யூரேகா!' சமாசாரங்கள் நிறைய இருக்குமோ!

— நியூஸ் பையன்

---

சிருவிங்களே' என்பான்.

பாட்டிக்கு இன்னும் விஷயம் தெரியாது. அவளுக்கு மேலும் எந்த அதிர்ச்சியும் தந்து விடக் கூடாது, என்று டாக்டர்கள் சொல்லியிருந்தார்கள். சொல்லாமல் எப்படி மறைப்பது தெரியவில்லை.

பாட்டி ஆஸ்பத்திரியிலிருந்து டிஸ்சார்ஜ் ஆகிக் கிளம்பும்வரை அவளிடம் சொல்ல தைரியம் இல்லை அவனுக்கு. அவளைக் கைத்தாங்கலாய் அழைத்து வந்து ஆட்டோவில் ஏற்றி, "எண்ணெய்க்காரன் தெரு" என்றான் சபேசன்.

பாட்டி திரும்பி அவனைப் பார்த்தாள். "என்ன சபேசா?" என்று மாத்திரம் கேட்டாள். அவளைத் திரும்பி அவனால் பார்க்க முடியவில்லை. கண்ணில் நீர் நிறைந்தது. "வீடு மாத்தியாச்சி" என்று முனகினான். அதையே அவளால் தாள முடியவில்லை. கண்ணீர் கரகரவென்று வழிந்தது. மூச்சு லேசாய்த் தடுமாறியது. அவன் கவனிக்கவில்லை.

"வேற வழியில்ல, நீங்க புரிஞ்சுக்கணும்" என்றான்.

அவள் பேசவில்லை. அவனுக்குத் தொடர்ந்து ஏதாவது பேச வேண்டும் என்று தோன்றினாலும் பேச முடியவில்லை. என்ன பேச என்று திகைப்பாய் இருந்தது.

"மகாதேவ சாஸ்திரி தெரு வழியாப் போப்பா" என்றாள் பாட்டி ஆட்டோக்காரனிடம். வேண்டாம், என்று மறுப்புச் சொல்ல நினைத்தான் சபேசன். வாயில் வார்த்தை வரவில்லை. நாக்கு புரள மறுத்தது.

நேற்று வீடு முற்றிலுமாய் இடித்துத் தகர்த்தாகியிருந்தது.

அவளால் இதைத் தாங்கிக் கொள்ள முடியுமா என்று பதற்றமாய் இருந்தது. வீடு விற்கிற யோசனைக்கே அவளுக்கு உடம்பு படுத்தி, உண்டு இல்லை என்று ஆக்கியிருந்தது. இப்போது அவளால் வீடே இல்லை என்கிற காட்சியை, சகித்துக் கொள்ள முடியுமா? தாள முடியுமா? கடவுளே, கடவுளே, என்று அவன் மனம் பதறியது. தலையைப் பிடித்துக் கொண்டு உட்கார்ந்திருந்தான்.

ஆட்டோ மகாதேவ சாஸ்திரி தெருவில் திரும்பியது. ●

(முற்றும்)

# பாகிஸ்தானுடன் கிரிக்கெ

• மூத்தவர்

• ரொம்ப ரொம்ப சரி!

• வானளாவிய...

• நோக்கமும் நிறைவும்

● ஜி. சரவண பவன், திருச்சி – 5.

? எல்லைப் பகுதியில் தொடர்ந்து தொல்லை கொடுத்து வரும் பாகிஸ்தானுடன் கிரிக்கெட் போட்டி நடத்தாவிட்டால் என்ன...?

! 'இன்னா செய்தாரை ஒருத்தல்...' – வள்ளுவர் காட்டிய வழியில் நாட்டை ஆள்வது புத்திசாலித்தனம். பாகிஸ்தான் நமக்குப் பல விதங்களில் தொல்லை கொடுத்த போதிலும் பாகிஸ்தான் அணியுடன் கிரிக்கெட் ஆடுகிறோம் என்பது நாம் நேசக்கரம் நீட்டத் தயாராக இருக்கிறோம் என்பதற்கு ஓர் அடையாளம். நல்லெண்ணத் தூதர்களாக விளையாட்டு வீரர்களைக் கருதலாம். விளையாட்டிலும் தீவிர அரசியலைப் புகுத்திவிட்டால் கதவுகள் அடியோடு அடைபட்டுப் போகும். தட்டினாலும் திறக்காது. அது நாட்டுக்கு நல்லதல்ல.

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? வயதில் மூத்தவர்கள் காலில் விழுந்து எழுவது பண்பாடு என்கிறாரே ஜெயலலிதா...?

! ஆமாமாம்! நாவலரைப் பார்க்கும் போதெல்லாம் அவர் காலில் ஜெ. விழுந்து எழுந்து கொண்டுதானே இருக்கிறார்!

● இரா. புவனேஸ்வரி, சென்னை – 81.

? சட்டப்படி பெண்களுக்கு எவ்வளவு சலுகைகள் இருந்தாலும் நடைமுறையில் எதுவும் நடப்பதில்லை என்கிறாரே நளினி சிதம்பரம்... இது பற்றி...?

! ரொம்ப ரொம்ப சரியான வார்த்தை. அதனால்தான் ஜெயந்தி நடராஜன் போன்றோர் 33 சதவிகிதம் ஒதுக்கீடுக்காக ஒரு வேளை அடையாள 'சமையல் நிறுத்தம்' என்று அறிவிக்கும்போது சிரிக்கத் தோன்றியது.

● அ. சங்கரன், பெங்களூர் – 16. ❑

? இந்த நூற்றாண்டு மனிதர்கள் எந்த வகையில் அதிர்ஷ்டசாலிகள்? எந்த வகையில் துரதிர்ஷ்டசாலிகள்...?

! விஞ்ஞான முன்னேற்றத்தின் ஆதாயங்களை வேறெந்த நூற்றாண்டினரைக் காட்டிலும் அதிகமாக அனுபவித்துள்ளோம். அதே முன்னேற்றத்தின் அபாயங்களும் துரதிர்ஷ்டவசமாக நமதுதான்!

● கே. ஆர். ரவீந்திரன், சென்னை – 1.

? இந்தோ-பாக் கிரிக்கெட் போட்டி நடக்க இருக்கும் டெல்லி கிரிக்கெட் மைதானத்தை சிவசேனைக்காரர்கள் நாசப்படுத்தியது பற்றி...?

! நாசப்படுத்தப்பட்டது கிரிக்கெட் பிட்ச் மட்டும் அல்ல... பாரதத்தின் சுயகௌரவம். உலக நாடுகள் அனைத்தும் நம்மைப் பார்த்துச் சிரிப்பாய்ச் சிரிக்க இடமளித்து விட்டோம். சே!

● ஜி.எஸ்.பி. ராஜா, கோபாலசமுத்திரம்.

? 'முதலமைச்சர் என்ற முறையில் ஜெயலலிதா எந்தத் தவறும் செய்யவில்லை' என்று முன்னாள் சபாநாயகர் பி.எச். பாண்டியன் கூறியுள்ளாரே...?

! விண்ணளாவிய அதிகாரம் பெற்றிருந்தவரின் வானளாவிய கற்பனை!

● என். பாலகிருஷ்ணன், மதுரை – 1.

? சமீபத்தில் உங்கள் மனத்தை மிகவும் பாதித்த சம்பவம் எது?

! ஆவ்ரோ விமானம் நொறுங்கியதில் எட்டுப் பேர் மரணம்! இந்த விமானத்தை வான்வெளி கண்காணிப்பு ஊர்தியாக வடிவமைத்து வெள்ளோட்டம் பார்த்துக் கொண்டிருந்தார்கள். ஆவ்ரோ ஏற்கெனவே விபத்துக்குப் பெயர்போன விமானம்.

## நீங்கள் கேட்டவை – தராசு

# ஆடாவிட்டால் என்ன?

...விஷப்பரீட்சையாகிவிட்டது! தவிர்த்திருக்கலாமே என்று மனம் கனக்கிறது.

● எஸ். சாந்தி, காட்பாடி.

*? மத துவேஷத்தில் ஆழ்ந்துள்ள சிவசேனா கட்சியிடம் மத்திய அரசு காட்ட வேண்டிய அணுகுமுறை என்ன...?*

! தொடர்புகளை அடியோடு துண்டிக்க வேண்டும். அதற்கு தைரியம் இல்லை; மனமும் இல்லை. வெளியே கூறாவிட்டாலும் உள்ளூரக் குடிகொண்டிருப்பது சிவசேனா ஆதரவு மனப்பான்மைதான்.

● ச. சிதம்பரம், திருத்தங்கல்.

*? பி.ஜே.பி. மதவாதக் கட்சி - ஆபத்தானது என்று தி.மு.கவும் இடது, வலது சாரிகளும் குறிப்பிட்டனர். ஆனால் கல்கி பி.ஜே.பிக்கு ஆதரவாக பார்லிமெண்ட் தேர்தலின்போது எழுதியது. இப்போதோ, 'தனிப்பெரும்பான்மை தராத வகையில் வாக்களித்த மக்களை வாழ்த்தத் தோன்றுகிறது' என்று குறிப்பிடுகிறது.... இப்போது தான் புரிந்ததா?*

! பி.ஜே.பியின் பொருளாதாரக் கொள்கைகள் சரியானவை என்பதால் மட்டுமே ஆதரித்து, அது ஹிந்துத்வா கொள்கையைக் கைவிட வேண்டும் என்று வலியுறுத்தித்தான் ஒவ்வொரு முறையும் எழுதினோம். அவர்களும் தேர்தல் பிரசார சமயத்தில் அப்படித்தான் சொன்னார்கள். ஆனால் ஆட்சிக்கு வந்த பிறகு இதற்கு நேர்மாறாக பி.ஜே.பி. நடந்து கொள்கிறது. தனது பிரத்யேகப் பொருளாதாரக் கொள்கையைக் காற்றில் பறக்கவிடுகிறது. ஹிந்துத்வாவை மேலும் தீவிரமாகப் பின்பற்றுகிறது. எனவே இப்போது கண்டிக்க நேர்கிறது. ஆக மொத்தம் கல்கி மாறவில்லை; மாறியிருப்பது பி.ஜே.பிதான்!

● கு. கந்தையா, நாகர்கோயில்.

*? 'அறிக்கை அம்மையார்' என்று பட்டம் கொடுக்கிற அளவுக்கு தினசரி அறிக்கை வெளியிடும் ஜெயலலிதாவின் நோக்கம் நிறைவேறுமா?*

! செய்தியில் இடம் பெற வேண்டும் என்ற நோக்கம் நிறைவேறி விடுகிறதே!

● க. தியாகராஜன், ஜொரநாட்டுக்கருப்பூர்.



• பேயே போச்!

*? திறமையான பிரதமரே ஜெயலலிதாவின் நிர்ப்பந்தத்தால் குழம்பக் காரணம்...?*



• யார் தடுத்தார்கள்!

! குழப்பமெல்லாம் தீர்ந்து போச்! அவரே போன் பண்ணி 'அம்மா! அமைச்சரவை விரிவாக்கத்துக்குப் பட்டியல் அனுப்புங்க...' என்று கைகட்டிக் கேட்டிருக்கிறார். Defacto பிரதமராக 'ஜெ'யை ஏற்றுக் கொண்டு விட்டார். கேவலத்திலும் கேவலம்!

● எஸ். சரவணன், மோகனூர்.

*? 'நான் சர்வாதிகாரியாக இருந்தால் எல்லா பதவிகளையும் பெண்களுக்கே கொடுக்க உத்தரவிடுவேன்' என ராம்தாஸ் பேசியிருப்பது குறித்து...?*

! அதனால் என்ன! முதலில் பா.ம.க. தலைமையைக் கொடுத்துப் பார்க்கலாமே!

● க.நா. இராஜேஸ்வரன், மொரட்டுப்பாளையம்.

*? பரதத்தில் வெளிப்பட வேண்டியது சிருங்காரமா? பக்தியா?*

! சிருங்காரம் கூட பக்தி சார்ந்தே இருக்கும்போது கலை உயர்கிறது.

● வளர்மதி ஆசைத்தம்பி, தஞ்சை - 7.

*? தமிழகத்தை 'புரட்சித் தலைவி ஜெயலலிதா நாடு என்று அழைக்கும் நிலை விரைவில் ஏற்படும்' என்கிறாரே எம்.பி. திருநாவுக்கரசு... நிறைகுளத்தான்?*

! அப்படி அழைக்கும் நிலை தோன்றினால் 'புரட்சித் தலைவி ஜெயலலிதா காடாக' தமிழகம் மாறும்.

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
அ. சங்கரன்,
17, ராகவேந்திரா எக்ஸ்டென்ஷன்
ராமமூர்த்தி நகர்,
பெங்களூர் - 560 016.

# கல்யாணத்துக்கு ஒரு கண்டிஷன்!

"அப்பா நம்ம கலியாணத்துக்கு சம்மதிச்சுட்டாரு. காதல் கல்யாணம்னாலும் பெண் பார்க்கிற சடங்கு, பாடச் சொல்றது... எல்லாமே சம்பிரதாயப்படி நடக்கணும். நாங்க பார்த்து, எங்களுக்கும் பெண்ணைப் பிடிக்கணும்னு ஒரு கண்டிஷனும் போட்டிருக்கார்..." என்றான் ஸ்ரீதர்.

மௌனமாக இருந்தாள் மல்லிகா.

"கவலைப்படாதே. எல்லாம் நல்லபடியாவே முடியும். என் பேரண்ட்ஸுக்குப் பிடிக்கற மாதிரி நடந்துக்கோ. அது போதும்."

"சரி, உங்க வீட்டுலேர்ந்து என்னைப் பெண் பார்க்க எப்ப வராங்க?"

"வருகிற சன்டே."

ஸ்ரீதர் சொன்ன விவரங்களை மல்லிகா வீட்டில் சொன்னதும் அவர்களையும் டென்ஷன் பிடித்துக் கொண்டது. எல்லாம் சம்பிரதாயப்படி என்றால் இவ்வளவு வரதட்சணை வேண்டும் என்று கறாராகக் கேட்பார்களோ... பல கற்பனைகளை விவாதித்து, 'இதுவாக இருந்தால் என்ன செய்வது' என்று கவலைப்பட்டார்கள்.

"இருபது பவுனில் கடிகாரச் சங்கிலி பெண்ணுக்குப் போடணும்னு சொல்லிடுவாரோ?" இது அம்மா.

"அவர் ஆண்பிள்ளை. கடிகாரம் போடணும்னு சொல்லுவார். சங்கிலி எல்லாம் கேட்க வாய்ப்பில்லை" என்றான் அண்ணா.

"லட்ச ரூபாய் கேஷ் வேண்டும் என்பாரா?"

"மடிப்பாக்கத்தில் ஒரு ரூம் கிச்சன் ஃப்ளாட் வாங்கிக் குடுத்துடுங்கோ என்பாரோ?"

"மாருதி 800 ஆவது வாங்கிடுங்கோன்னா என்ன செய்யறது?"

"இது காதல் கல்யாணம். அதனால் பின்னையப் பெத்தவா அத்தனை கறாராய் எதுவும் கேட்க மாட்டாங்கன்னு நம்பலாம்."

அப்பா அந்த விவாதத்துக்கு முற்றுப் புள்ளி வைக்க முயன்றார்.

ஆனால் அண்ணா, மன்னி, தாத்தா பாட்டி, அம்மா மாமா மாமி அனைவருமே ரகசியமாய் அதைப் பற்றிப் பேசுவதை நிறுத்தவில்லை. ஸ்ரீதரின் குடும்பத்தார் வந்து என்ன சொல்லப் போகிறார்களோ என்ற டென்ஷனிலிருந்து அவர்களால் விடுபட முடியவில்லை.

ஞாயிறன்று சம்பிரதாயமாய் மல்லிகாவைப் பெண் பார்க்கக் கிளம்பிக் கொண்டிருந்தார்கள் ராமநாதன் குடும்பத்தார். அவருடன் கூடப் பிறந்தவர்கள் ஐந்து சகோதரர்கள். இரண்டு சகோதரிகள். அதில் இரண்டு சகோதரர்கள் மஸ்கெட், அமெரிக்கா என்று அயல் நாடுகளில் இருந்தார்கள்.

ஒரு சகோதரி டில்லிவாசி.

எல்லாருக்குமே திருமணமாகி தலை

இரண்டு என்கிற 'சராசரி' கணக்கில் குழந்தைகள்.

அத்தனை பேருக்கும் ஸ்ரீதரின் 'வுட்பீ'யைப் பார்க்க ஆசை. எனவே தங்கள் தங்கள் காரில் கிளம்பினார்கள். பெண் பார்க்க கும்பமேளா கும்பல் மாதிரி இத்தனை பேரா போய் நிற்பார்கள். மல்லிகாவுடைய அம்மாவுக்குக் காப்பி கலந்தே கை களுக்கிக் கொண்டு விடாதோ?

வராதே என்று தடை போட்டால் அவர்கள் அதைத் தவறாக நினைத்து விட்டால்...

"என்னடா ஸ்ரீதர் உம்முனு இருக்கே காதல் கலியாணம்னா சந்தோஷமாய் இருக்க வேண்டாமோ?" என்றாள் அத்தை தாட்சு. முழுப் பெயர் தாட்சாயணி. அவளுடைய குழந்தைகளான இந்திராவும் சந்திராவும் "போலாம்மா... சிக்கிரம்" என்று நச்சினார்கள்.

"ஷ் நச்சாதே" என்றார் மாமா சேஷாத்ரி.

"ராகு காலத்துக்கு முன்னாடி போக வேண்டாமா? சிக்கிரம்..."

அப்பா அவசரப்பட்டார்.

"இப்பவே வீட்டில் கலியாணக் களை வந்துடுத்து!" அம்மா சந்தோஷப்பட்டாள்.

நான்கு அம்பாஸிடர்கள் ஒரு பியட், இரண்டு மாருதி, இரண்டு ஹீரோ ஹோண்டா.

வி.ஐ.பியை வரவேற்க ப்ரோட்டகால் போகிற மாதிரி இருந்தது பார்க்க.

மல்லிகாவின் வீட்டை அடைந்தபோது, பெரியவர் ஒருத்தர் கேட்டருகில் நின்று வழிமேல் விழி வைத்து நோக்கிக் கொண்டிருந்தார். அது மல்லிகாவின் தாத்தா நரசிம்மன் என்று தெரிந்தது.

பாட்டி சரோஜினி தன்னை அறிமுகப்படுத்திக்

லக்ஷ்மி ரமணன்



கொண்டாள்.

"வாங்க" என்று வரவேற்றாள் ஐம்பதில் இருந்த மாது ஒருத்தி. பெயர் காமாட்சியாம் மல்லிகாவின் மாமி. பின்னாலேயே மாமா சேதுராமன். சமையற்கட்டிலிருந்து இரண்டு மூன்று தலைகள் எட்டிப் பார்த்தன.

"வீட்டிலிருக்கிற அத்தனை பேரையும் பார்த்தாச்சு. மல்லிகா எங்கே காணோம்?" என்றார் அப்பா.

அவர் கேட்டுக் கொண்டிருந்தபோதே வளையல்களின் ஓசை. கால் கொலுசுகள் கிணுகிணுக்கிற சப்தம். மல்லிகை மணத்தைத் தொடர்ந்து மல்லிகா வந்தாள்.

'அப்பாடா!' என்றது ஸ்ரீதரின் புன்னகை.

மல்லிகா, உட்கார்ந்திருந்த அத்தனை பேருக்கும் சாஷ்டாங்கமாய் நமஸ்காரம் செய்தாள்.

"குட் செலக்ஷன்" என்று காதில் சொன்னார் சித்தப்பா.

மல்லிகா பாடிய 'சாமஜவரகமனா' அவர்கள் வீட்டில் கொடுத்த டிபன் காப்பி எல்லாமே பிடித்துப் போக, பிள்ளை வீட்டார் மனம் நிறைந்தார்கள்.

"பெண்ணை எங்கள் எல்லாருக்குமே பிடிச்சுடுத்து" என்ற அப்பா பாக்கெட்டிலிருந்து அந்த பெரிய லிஸ்டை எடுத்ததும் ஸ்ரீதர் பயந்து போனான்.

"அப்பா!" மெதுவாக அழைத்துப் பார்த்தான்.

ம்ஹூம்... அவருக்குக் கேட்கவில்லை.

இன்னும் கொஞ்சம் குரலை உயர்த்தி "அப்பா! என்ன இது?" என்றான்.

"பொறு மகனே. பொறுத்திருந்து பார்" என்று சிரித்தார் அவர்.

லிஸ்ட் பெண்ணின் தந்தையின் கைக்கு இடம் மாறியது. அப்பா அப்படிப்பட்டவரா... கலியாணத்தை வியாபாரமாக நினைக்கும் பாமரத்தனமுள்ள பிள்ளையைப் பெற்ற அப்பாக்களில் தன் அப்பாவும் ஒருவரா? ஸ்ரீதருக்கு வருத்தமாக இருந்தது.

"அது என்ன லிஸ்ட்?" என்றார் சேதுராமன்.

"உரக்கப் படிக்கிறேன் கேளுங்களேன்!" மல்லிகாவின் அப்பா துவங்கினார்.

"போச்சு மானம் போச்சு." ஸ்ரீதர் முணு முணுத்தவாறு கண்களை மூடிக் கொண்டான்.

ஒன்று : ராமநாதன், ஸ்ரீதரின் அப்பா.

இரண்டு : அகிலாண்டம், ஸ்ரீதரின் அம்மா.

மூன்று : ரூபா, ஸ்ரீதரின் சகோதரி.

நான்கு : சுரேஷ், ரூபாவின் கணவன். இருவரும் அமெரிக்காவில் கொலம்பஸ் என்கிற இடத்தில் இருக்கிறார்கள். சுரேஷ் அங்கே டாக்டராக இருக்கிறான். இருவரையும் திருமணத்தின்போது சந்திக்கலாம்.

இது போல் ஸ்ரீதரின் சித்தப்பாக்கள், அவர்கள் மனைவி குழந்தைகளின் பெயர்கள், மாமாக்கள், மாமிகளின் பெயர்கள் ஒவ்வொருவர் பற்றிய அனைத்து விவரங்களையும் லிஸ்டு கொடுத்தது.

மொத்தம் நூற்றி இருபது பெயர்கள்!

"இதெல்லாம் எதுக்கு?" என்பது போல் மல்லிகாவின் தந்தை ராமனாதனைப் பார்த்தார்.

"உங்கள் பெண் மல்லிகா என் மகன் ஸ்ரீதருக்கு மட்டும் வாழ்க்கைப்படவில்லை. இந்த லிஸ்டில் கொடுத்துள்ள அத்தனை பெயர்களும் அடங்கிய குடும்பத்தில் ஒருத்தியாகப் போகிறாள். அதனால் அவர்கள் அனைவரைப் பற்றியும் உங்கள் மகளும் நீங்களும் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நான் ஆசைப்படுகிறேன். எங்கள் வீட்டுக்கு நிச்சயதார்த்தத்திற்கு நீங்கள் வரும்போது இவங்க அத்தனை பேரையும் நேரிலோ, புகைப்படத்திலோ நான் அறிமுகம் செய்து வைக்கிறேன். அதற்கு முன் இந்த லிஸ்டில் இருக்கிற பெயர்களை நீங்கள் அடிக்கடி படித்து ஞாபகப்படுத்திக் கொள்ளுங்கள். கலியாணத்தின் போது வருகிற பிள்ளை வீட்டு சம்பந்திகளின் பெயர்கள் அனைத்தும் உங்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். நாங்கள் கூட்டுக் குடும்பமாக இல்லையே தவிர, ஒரு சமயம் என்றால் கூடி சந்தோஷத்தைப் பகிர்ந்து கொள்ளும் ஒற்றுமையான குடும்பம்.அதனால் அத்தனை பேருமே முக்கியமானவர்கள்!" என்றார் அப்பா.

மல்லிகாவின் தந்தைக்கு லேசாகத் தலையைச் சுற்ற, அவர் சமாளித்துக் கொள்ள....

"என்ன மல்லி... கண்டிஷனை எப்படி சமாளிக்கப் போறீங்க?" ஸ்ரீதர் குறும்பாகக் கேட்டான்.

"இருங்க... எங்க வீட்டு பெயர்ப் பட்டியலைக் கொடுக்கிறேன்!" என்று சிரித்தாள் மல்லிகா. ●

## காதில் விழுந்தவை :

● ஜெயா தொலைக்காட்சிக்குத் தொழில் ரீதியான ஆட்களைத் தேடிக் கொண்டிருக்கிறார்கள். நிகழ்ச்சித் தயாரிப்பு, செய்திப் பிரிவு ஆகியவற்றில் பணிபுரிய சூரியத் தொலைக்காட்சியில் பணிபுரியும் சிலருக்குத் தூண்டில் போட்டுக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் நாளிதழில் 'புதிதாகத் துவங்கும் ஒரு தொலைக்காட்சிக்கு ஆட்கள் தேவை' விளம்பரம் வெளியிடப்பட்டது. ஜெயா தொலைக்காட்சிக்காரர்கள்தான் விளம்பரம் போட்டிருக்கிறார்கள் என்று நினைத்து சூரியத் தொலைக்காட்சியில் பணிபுரியும் சிலர் மனு போட்டிருக்கிறார்கள். ஆனால் அந்த விளம்பரத்தை வெளியிட்டது சூரியத் தொலைக்காட்சிதானாம்! மாற்று முகாமுக்குத் தாவ இருந்த கறுப்பு ஆடுகளை தந்திரமாகச் செயல்பட்டு அடையாளம் கண்டுகொண்டது சூரியத் தொலைக்காட்சி நிர்வாகம். இப்போது அங்கு பணிபுரியும் செய்தி வாசிக்கும் பெண்மணிகள் உட்பட பலரின் முகத்தில் விளக்கெண்ணெய். இதற்கிடையில் மலையாள ஏசியாநெட்டுக்கும் சூரியத் தொலைக்காட்சியின் மலையாள சேனலுக்கும் மோதல் துவங்கி விட்டதாம். சமீபத்தில் ஒரு ஞாயிறு அன்று காலை சுரேஷ் கோபி நடித்த 'மகாத்மா' என்ற படத்தை இரு தொலைக்காட்சிகளும் அரைமணி வித்தியாசத்தில் ஒளிபரப்பின. அந்தச் சமயம் தமிழகத்திலும், தமிழக எல்லைப் பகுதிகளிலும் ஏசியாநெட்டின் ஒளிபரப்பு தடைபட்டது. அதே போல் கேரளாவின் உட்பகுதியில் சூரியத் தொலைக்காட்சியின் ஒளிபரப்பும் தடைபட்டதாம். இந்தச் செயல்கள் போட்டியின் விளைவால் கேபிள் ஆபரேட்டர்கள் உதவியுடன் நடந்த திரைமறைவுச் சதிகள்தான் என்கிறார்கள். சபாஷ்! சரியான போட்டிதான்.

● சிங்காரச் சென்னைக்கு வருவோம். ஒரு மாட்டுத் தொழுவத்தை சிரமப்பட்டு காலி செய்து அந்த இடத்தில் சமுதாய நலக் கூடம் கட்ட ஏற்பாடு செய்தது மாநகராட்சி. 98 சதவீத வேலைகள் முடிந்து போய் தரைக்கு மொஸைக் போட வேண்டியதுதான் பாக்கி. அந்தச் சமயத்தில் களத்தில் குதித்தார் கவுன்சிலர் ஒருவர். ஒப்பந்தக்காரரிடம் 'மொஸைக் போடக் கூடாது; கிரானைட்தான் போட வேண்டும்' என்று முட்டுக்கட்டை போட்டார். 'ஐயா... எஸ்டிமேட்டில் மொஸைக்தான் இருக்கிறது' என்றார் ஒப்பந்தக்காரர். 'நோ... நோ' என்று கடுப்படித்தார் கவுன்சிலர். அதிகாரிகளிடம் முறையிட்டார் ஒப்பந்தக்காரர். ஆனால் கவுன்சிலரின் பிடிவாதம் தளரவில்லை. விளைவு? நாற்பது லட்சம் செலவு செய்து கட்டப்பட்ட சமுதாயக் கூடம் மக்களுக்கும் பயனில்லாமல், மாநகராட்சிக்கும் வருமானத்தைக் கொடுக்காமல் கடந்த ஆறு மாத காலமாக தண்டத்துக்கு இருக்கிறது. கவுன்சிலர் தடை போடுவது ஏன் என்று துருவினால், "எல்லாம் கட்டிங் விவகாரம்தான் ஸ்வாமி" என்கிறார்கள். இதுபோன்ற நபர்களை தலைவர்கள் அடையாளம் கண்டுகொள்ள வேண்டும். இல்லையேல் கட்சிக்கு மக்களிடம் கெட்ட பெயர்தான்.

# 'கொண்டுவா கிரானைட்!'


இடிக்க உத்தரவிடப்பட்ட வீட்டு வசதிவாரிய வீடுகள்

● சமீபத்தில் அம்பத்தூர் பகுதியில் 78 ஹவுசிங் போர்டு வீடுகளை இடிக்கச் சொல்லி உத்தரவிட்டது உயர்நீதி மன்றம். ஆடிப் போன ஹவுசிங் போர்டு இடைக்காலத் தடை வாங்கியிருக்கிறது. எம்.எம்.டி.ஏ.வின் குளறுபடியின் காரணமாகத்தான் ஹவுசிங் போர்டுக்கு சிக்கல் வந்ததாம். சென்னையில் குடியிருப்புப் பகுதி, தொழிற்சாலைப் பகுதி, பசுமைப் பகுதி என்று பிரித்து நிலங்களை வகுக்கும் பொறுப்பு எம்.எம்.டி.ஏ.வினுடையது. அம்பத்தூர் பகுதியில் 78 வீடுகள் கட்டப்பட்ட பகுதி தொழிற்சாலைப் பகுதியாகும். ஆனால் அந்தப் பகுதியை 'குடியிருப்புப் பகுதி' என்று குறிப்பிட்டு ஹவுஸிங் போர்டுக்கு ஒதுக்கி விட்டது



# ''நான் போவதுதான் செய்தியா?''

"உங்களையும், அழகிய இளம்பெண்களையும் இணைத்து நிறைய கிசுகிசுக்கள் வருகின்றனவே?'' என்று அஜய் ஜடேஜாவிடம் கேட்ட போது –

''நான் மனிதன். ஜாலியாய் ஊர் சுற்றுவேன்; நைட் கிளப்களுக்குப் போவேன். இப்போதெல்லாம், நைட் கிளப் போன்ற இடங்களுக்குப் போகிறபோது அங்கு ஐம்பது பேர் இருந்தால், நாற்பது பேர் மாடல்கள். மீதி சினிமா ஸ்டார்கள். அவர்களுடன் சும்மா பேசிக் கொண்டிருந்தால் கூட, சினிமா பத்திரிகையாளர்கள், இரண்டு பேரையும் இணைத்து எழுதி விடுகிறார்கள். என்ன செய்ய? உதாரணமாக, சென்னையில் பிலிம் பேர் விழா நடந்தபோது அதில் கலந்து கொண்டேன். அன்று, இரவு தபுவுடன் 'டிஸ்கோ'வுக்குப் போயிருந்தேன். அதே டிஸ்கோவுக்கு மதுபாலா, சோனாலி பாந்ரே, நாகார்ஜுனா அனைவரும் வந்திருந்தனர். ஆனால், நாங்கள் சென்றது மட்டும் செய்தியானது. மற்றவர்கள் அவர்கள் கண்ணுக்குப் படவில்லை!''

ஃபிலிம்பேரிலிருந்து :

**மானஸா**

எம்எம்டிஏ. தொழிலதிபர் ஒருவர் கேஸ் போட விவகாரம் வெளிச்சத்துக்கு வந்து விட்டது. இப்படிப்பட்ட நிலையில் இந்தக் குளறுபடி குமாஸ்தா அளவிலான தவறு என்று சொல்லி, சில கீழ்நிலை ஆட்களைப் பொறுப்பாக்கப் பார்க்கிறார்களாம். "இதற்குக் காரணம் பெரிய அதிகாரிகள்தான். ஏனென்றால் அவர்கள் தான் பிளான் அங்கீகார விவகாரத்தில் சுறுசுறுப்பாகச் செயல்பட்டு, பிரமோட்டர்களிடம் கறந்து மேல் மட்டம் வரை கவனிக்கிறார்கள்!" என்கிறார் ஊழியர் ஒருவர். ஆனால் பிரமோட்டர் ஒருவரை விசாரித்தபோது, "பிளான் அனுமதி பயங்கரமாகத் தாமதம் செய்யப்படுகிறது. இதனால் பணச் செலவு கூடுகிறது. சென்னையில் வீடு கட்டும் தொழில் நசிந்து கொண்டிருப்பதற்கு எம்எம்டிஏ தான் முக்கிய காரணம்" என்றார்.

● புலனாய்வுப் பத்திரிகைகளில் வேலை செய்யும் நிருபர்கள் மத்தியில் ஒரு ஜோக் உண்டு. சுவையான செய்திகள் எதுவும் கிடைக்காவிட்டால், 'மந்திரி சபையில் மாறுதல்; ஆறு மந்திரிகளுக்கு கல்தா' என்றெல்லாம் ஸ்டாக் செய்திகள் உண்டே, அவற்றை அள்ளிவிட வேண்டியது தானே!" என்று கிண்டலடிப்பார்கள். மத்திய மந்திரி சபை விஸ்தரிக்கப்பட இருக்கிறதோ இல்லையோ, மாநில அமைச்சரவையில் சில அதிரடி மாற்றங்களைக் கொண்டு வருகிறாராம் முதல்வர். ஆம்! புலி வந்தே விட்டது. வழக்கமாக ஜூனியர் அமைச்சர்களின் தலைகள் தான் உருட்டப்படும். ஆனால் சில சீனியர் அமைச்சர்களுக்கும் தை பிறந்தவுடன் 'வலி' பிறக்கப் போகிறதாம். முதல்வர் சமீபத்தில் வெளிநாட்டுச் சுற்றுப் பயணம் மேற்கொண்ட போது மாறன் நடத்திய ஒரு அவசர சர்வேயில் கணக்கமாக இருக்கும் சில அமைச்சர்கள் அடையாளம் காணப்பட்டு உள்ளார்கள். அவர்களுக்குக் கசக்கும் பொங்கல்தான்.

● அந்தத் தொலைக்காட்சியில் அவர் லட்ச ரூபாய் சம்பளம் வாங்கியதாகச் செய்தி அடிபட்டாலும் அடிபட்டது, விடுவார்களா வருமான வரி அதிகாரிகள்? அதை அவர் விட்டு விட்டு வந்தபோதிலும் சோதனையாய் வீட்டைச் சலித்து எடுத்து விட்டார்களாம்!

— **தில்லப்பா**

**Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi**
**Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.**
**Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.**
**Annual Subscription : India : Rs. 250/-; Overseas : Rs. 1600/- (Air Mail)**
**Half Yearly Subscription : India : Rs. 125/-; Overseas : Rs. 800/- (Air Mail)**

